52-2

எந்நூலுக்கும் இந்நூலே மூலம்

# நான் கடவுள்

2011

(நான்காம் பதிப்பு)

தத்துவ ஞானி

ஞானவள்ளல் பரஞ்சோதி மகான்

இயற்றியது

உலக சமாதான ஆலயம்

பரிபூரண பரஞ்சோதியின் உயர்ஞான சபை

(Regd. Act. XXI of 1860)

299, திருவொற்றியூர் ஹைரோடு

புது வண்ணாரப்பேட்டை, சென்னை-21

1860

# I GOD

4th Edition

*By*

GNANA VALLAL PARANJYOTHI MAHAN

*Published by*

*Universal Peace Sanctuary* (Registered)

MADRAS-21.

# பதிப்புரை



**நான்** அல்லது நடந்ததெல்லாம் நன்மைக்கே என்ற பெயரில் வெளிவந்த மூன்றும் பதிப்பு அநேக புது கருத்துகளோடு தொகுக்கப்பட்டு "நான்—கடவுள்" என்ற பெயரில் இந்நூல் நான்காம் பதிப்பாக வெளிவந்துள்ளது. இது ஞானவள்ளல் பரஞ்சோதி மகான் அவர்களால் எழுதப்பட்டு உலக சமாதான ஆலய நிர்வாகஸ்தர்களால் வெளியிடப்பட்டுள்ளது. தன்னிலே விளக்கம் பெறுதற்குரிய வழியையும், உணர்வின் வாயிலாகக் குண்டலினியின் சக்தியால் பேரின்பத்தை அடைதற்குரிய முறைகளையும், மக்கள் உலக வாழ்க்கையில் எவ்வெந்நெறிகளைப் பின்பற்றி நடத்தல் வேண்டுமென்பதையும், அரசியற் குழப்பங்கள் நீங்கி அமைதிபெறும் வழிகளையும், நோயைத் தவிர்த்தற்குரிய மருந்து முறைகளையும், கடவுள், உலக உற்பத்தி, ஆறு தாரம், அமிர்தம், உணர்வு, தவக்கனல் ஆகிய இவைபற்றி நன்கு தெரிந்து தெளிவடையும் வழிகளையும், முடிவான எல்லாத் தத்துவ விளக்கங்களையும் மக்கள் எளிதாக உணருமாறு, இந்நூல் தெளிவாக விளக்கிக்காட்டுகின்றது.

இத்தகைய தத்துவஞான நீதிநூலைக் கற்போர் எல்லாச் சீர்திருத்தக் கருத்துக்களையும், உண்மையான அரசியலறிவையும், உடற்பாதுகாப்பு முறைகளையும், யோகநூல் உண்மையினையும் தெளிவாக உணர்வதோடு, மேலான மெய்யுணர்வு பெற்றுத் திகழ்வார்களென்பதில் ஐயமில்லை. மேலும் 22-ஆண்டுகள் நிறம்பப்பெற்ற ஞானவிருப்ப முள்ளோரனைவரும் மகான் அவர்களிடம் நேரில் வந்து, குண்டலினி தீட்சை பெற்றுக்கொள்ளலாம். இத்தீட்சை பெறுவதால், பெறுபவரின் தொழிலுக்கோ, குடும்ப வாழ்க்கைக்கோ, உடல் நலத்திற்கோ யாதொரு இடையூறும் ஏற்படாது.

மகான் அவர்கள் இதுவரை இயற்றியுள்ள நூல்கள் பல. அவையாவன : "உணர்வும் தவக்கனலும்," "ஆருதாரமும் அமிர்தமும்," "ஒருமொழி," "ஆதியும் உலக-இணைப்பும்" "பூதலோகம்" "பேரறிவு" "ஞானக்கண்" முதலியனவாம்.

இத்தகைய நூல்களை இயற்றிய ஞானவள்ளல் பரஞ்ஜோதி மகான் அவர்களுக்கு மக்கள் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

இந்நூலை வெளியிடுங்கால் உடனிருந்து அச்சுப்பிழை திருத்தியுதவிய அன்பர்களுக்கும் குறித்த காலத்தில் நன்முறையில் அச்சிட்டுதவிய ஸோஷியல் அச்சகத்தாருக்கும் என் உளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

தமிழ் மக்கள் யாவரும் இந்நூலை வாங்கிப்படித்து, இது காட்டும் வழியில் நின்று பயனுற வேண்டுகின்றேன்.

1—1—1954
உலக சமாதான ஆலயம்
சென்னை-21.

இங்ஙனம்,
C. R. கோதண்டராம், B. A.,
பொதுக்காரியதரிசி.

ஞான வள்ளல்! நற்பரஞ் சோதி
மகான் இவ்வுலகம் மாசற விளங்கி
நன்னெறி எய்த, நயந்தெழு ஞாயிறு!
ஞானு சிரியர்! நவின்ற நூல்கள்
கடவுள், நான், ஞானக் கண், பேரறிவு,
ஒருமொழி, பூத லோகம், ஆதியும்
உலக இணைப்பும் ஆரு தாரமும்.
அமிர்தமும், உணர்வும் தவக்கனலும், எனும்
மணிகள் பலவாம்! மற்றிவை தரும்பொருள்!
இல்லறம் துறவற இயல்புகள், அரசியல்,
உலக அமைதிக்குறும் நன்னெறிகள்
உடல் நல அமைப்பின் திடம்அறி நெறிகள்,
என்றின பலவும் இயல்பும் உலகநூல்!
ஞான நன் னெறியின் மேனிலை விளக்கமாம்
கடவுள், உலகம் கவினுற எழுதல்,
ஆருதாரம், அமிர்தம், உணர்வு,
தவக்கனல், ஞானக் கண், ஆம் தாமிவை
ஒளிபெற உணர்த்தும் உண்மை ஞானநூல்
என இரு திறத்தன! இவ்வரும் நூற்கு
நான்-கடவுள் என்னும் பெயர் நவில்வர்
ஞானிகள் நவிலும் காலத் திருப்புலவர்
கேட்டு மகிழும் கிளர்தவம் உடையோர்!
வினைக் காலத் திருப்பவர் என்றும்
உணர்ந்து பயனுறல் ஒளிர்நூலாலாம்.
அங்ஙனம் நூலினை ஆக்கி உதவல்,
அறப்பெருஞ் செல்வர் திருச்செய லாகும்
அந்நெறி இயன்ற அமிழ்தமாம் நூல்களை
உலக மாந்தர் பலரும் நன் காய்ந்து
நயனுறத் தெளிந்து பயன்பெரி துறவே
நம் பரிபூரண நற்பரஞ் சோதி
உயர்ஞான சபையினர் உலகெலாம் புகழ
இப்பே ரறங்களை எற்றனர், நூல்கள்
உதவினர், வாழி! ஊழிகள்! வாழியே!

**நா. முத்துவள்ளியப்பா.**
மெய்யுணர்வாளன், சிங்கப்பூர்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி (மேலிருந்து) | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 22-வது | வேணடிய | வேண்டிய |
| 12 | 26-வது | பெறியது | பெரியது |
| 24 | 22-வது | தாஞகத் | தாஞனத் |
| 32 | 23-வது | நீர்வாண லோகம் | நிர்வாண லோகம் |
| 80 | 27-வது | இவைகளை மக்களுக்கு | இவைகளைவிட மக்களுக்கு |
| 123 | 9-வது | தூய்தாவதுடன் | தூயதாவதுடன் |
| 123 | 20-வது | நீக்குவதுடன் | நீங்குவதுடன் |
| 135 | 16-வது | முடியாதற்கு | முடியாததற்கு |
| 138 | 8-வது | உடுத்தும | உடுத்தும் |
| 145 | 14-வது | வணங்கதிருப்பதை | வணங்காதிருப்பதை |
| 201 | 20-வது | மயக்தை | மயக்கத்தை |
| 202 | 1-வது | கெடாமல் | கொடாமல் |

# உள்ளுறை



ஞானவள்ளல் பரஞ்சோதி மகான்

ஸ்தாபகர், குருபிரான்

உலக சமாதான ஆலயம்

# கடவுள்

கடவுளைத் தவிர்த்து வேறொரு பொருள் இல்லாததால், வேறொரு பொருள் ஒன்று இருந்து அதை எடுத்து, கடவுள் எல்லாவற்றையும் படைத்தான் என்பதில்லை. எல்லாமாக (பரிணமித்திருப்பதே) விரிந்திருப்பதே **கடவுள்.**

## உலக தத்துவம்

எங்கும் பூரணமான இருட்டில் ஒன்றுமில்லாது ஓர் அணுவாயிருந்த கடவுள் என்ற ஆதி, நான் என்ற துணிகர மாகி வியாபகத்தில் நினைப்பாகி, வேகத்தில் சப்தமாகி, உருவத்தில் நெருப்பாகி, என்றென்றைக்கும் குறைந்திடாப் பெருக்கம் கொண்ட, அந்நெருப்பின் பொறிகளே அணுக்க ளாகி எங்கும் நிறைந்த இருட்டில் அவ்வணுக்களே வேக மாகப் பரவி அவ்வேகங் குறைந்ததும், அங்கங்கு அவ் வணுக்களின் இயல்பால் ஒன்று சேர்ந்து, அச்சேர்க்கையால் சுழலுதல், விலகுதல், உருளுதல், புரளுதல், அடங்கிய இழுக் குஞ் சக்தியுள்ள நட்சத்திர, உலக, பூமிகளாகி, அணுக்களே அணுக்களுக்கு வாகனமும் உணவுமாகி, அதனால் உயிர் களின் வளர்தல், நகர்தல், நடை ஓட்டம் யாவுமாகி, தாவரம் மற்ற உருவங்கள் உட்பட, ஊற்றுணர்ச்சியும் தோற்றமும் உள்ள சீவராசிகளாகி, மனிதர்களாகி, சுவை, நோவு, இன்பம் இவைகளில் சூக்குமமாகி அம்மனிதர்களில் அநேக காரியங் களால் உள்ள அனுபோக காரணத்தால் பேச்சாலும் நுண்ணறிவாலும் அறிவு உயர்வாகி, அதனால் பக்தியோக ஆராய்ச்சிகளாகி, முடிவில் தன்னைத்தான் அறிந்து இவைகள் யாவும் தன் வேறுபாடுடைய (பரிணமை) வேக விளைவாக இருப்பதை விளக்கமாக அறிந்து கொள்வதே ஞானமாகும். இதுவே உலகங்களின் தத்துவம்.

எப்பொருளையும் எடுத்து, ஆராய்ந்தீர்களானால், இருள் — துணிவு — நிறைவு — ஓசை — ஒளி—அணுக்கள் இவையாவும் பிரிக்கமுடியாது ஒன்று சேர்ந்து இருப்பதை அறியலாம். இதை அறியாதபோது கடவுள் ஒருவன் தனியாக இருக் கிறான் என்று தேடவும் சொல்லவும் வேண்டியதாய் இருந்தது.

# ௦ இருள்

"மூப்பாழுக்கும் அப்பால் சென்று, அப்பாலுக்கப்பால் பெரும்பாழ் இருள் என்று அறி"

"இருளில்லா வித்தில்லை. இருளில்லாச் சீவனில்லை. இருளில்லா உலகமில்லை. இருளில்லா இடமில்லை. இருளில்லையேல் ஏகமும் (இல்லையே) இல்லை என்பது திண்ணம்.

ஏக்கத்திற்கு இடமாயுள்ளதும் படைக்கப்படாததும், படைக்கச் சக்தியற்றதும், ஒரு பொருளாக இல்லாததும், எல்லா உருவத்திலும் உள்ளும் புறமும் விலக்கப்பட முடியாது நிறைந்து உள்ளதும் இருள் அல்லது சூன்யமே.

**உதாரணம் :—** ஒரு இருட்டு அறையில் வெளிச்சம் புகுமே ஒழிய இருள் புகாது. வெளிச்சம் உள்ள அறையில் இருள் புகாமலே வெளிச்சம் மறைந்ததும் உண்மையான இருட்டு அங்கேயே இருக்கிறது. அப்போது அவ்வெளிச்சத்தினுள்ளும் இருள் இருக்கிறது. உடல் உள் உறுப்புக்களைச் சூழ்ந்து இருப்பதும் அதனுள் நிறைந்திருப்பதும் இருளே. ஆகையால் இருளை விலக்கியது எதுவுமில்லை.

**அஞ்ஞானம் :—**மடமை, அறியாமை என்பதே அஞ்ஞானமாகும். இருளிலுள்ள (நல்ல தீய) பொருள்களை வெளிச்சமில்லாது அறிய முடியாதது போன்று, அறிவின் விளக்கமில்லாது நல்லனவுந் தீயனவும் ஆகியவற்றை அறிய முடியாததால் அறிவின் விளக்கமில்லா அறியாமைக்கு அஞ்ஞான இருள் என்று பெயர் உண்டு. அஞ்ஞானம் இருள் ஆகாது.

இருளிலேயே எல்லாம் உற்பத்தியாகின்றன. இருளால் உற்பத்தியா? என்று கேட்டால் இல்லவே இல்லை. இருளில் இருந்த ஆதி என்ற ஓர் அணுவால்தான் எல்லாம் உற்பத்தி.

**இருள் :—**அரூபமாகவோ, அரூபரூபமாகவோ, ரூபமாகவோ இல்லாததே இருள்.

**மூப்பாழ் :—**பரு உடல், நுண் உடல், அறிவுடல் ஆகிய இந்த மூன்றும் தாண்டினால் அப்பாலுள்ளது சோதி; அதற்கும் அப்பாலுள்ளன நாதம், நினைவு; அதற்கும் அப்பாலுள்ளது இருள். இதனை அறிவு அறிந்தது எதனாலென்றால் மூலக்கண், பிடரிக்கண், நெற்றிக்கண் கடந்து நின்ற உச்சிக் கண்ணால் ஆகும்.

# 1 நான்

ஒன்றுமே தோன்றாததன் முன்னர் இருந்தது ஒரே ஒரு அணு. அவ்வணுவின் பெரும் துணிவே நான் என்பது. இருட்டைத் தவிர மற்ற யாவுமாய்ப் படைக்கப்பட்டிருப்பது இதுவேயாகும். இதனைக் கடவுள், இயற்கை, **"நான்"** என்று மனிதன் தன் அறிவு எல்லைக்குத் தக்கவாறு பெயர் வைக்கலானான்.

நான் என்ற துணிவாலேயே எச்செயலும் நடைபெறுகிறது.

**உதாரணம் :—** ஒரு சிறு ஆலவித்தினால் உற்பத்தியாகிய பெரிய ஆலமரம் வேர், பட்டை, கிளை, இலை, விழுது, பூ, காய், பழம், ருசி ஆகிய இவைகளாக எப்படி வேறுபட்டிருக்கின்றதோ அது போன்று ஒரே பொருள் பலவாக வேறுபட்டிருக்கின்றது.

## 1/1 நான்-கடவுள்

நான் என்ற ஒரே ஒரு பொருள் ஒரு பொருளாய் இருந்தபோது ஒரு செயலும் இல்லாதிருந்தாலும் அந்த ஒரே பொருள் அநேக பொருளாகவும், செயல்களாகவும் வேறுபட்டபோது கடவுள் என்று அதற்குப் பெயர் ஏற்படலாயிற்று.

அதன் விளக்கத்தை இந்நூல் அறிவிப்பதால் இந் நூலுக்கு **"நான்-கடவுள்"** என்று பெயர் அமைந்துள்ளது.

அநேக செயலாற்றல்கள் கூடியே **"நான்"** என்று ஒரு வார்த்தை வெளி வரவேண்டியதாயிருப்பதால், ஒரு மனிதன் நான் நானாகயிருக்கிறேன் என்று சொல்லுவதை விட நான் கடவுளாக இருக்கிறேன், நாம் கடவுளாக இருக்கிறோம் என்று சொல்லுவதே (அத்துவித) இரண்டற்ற நிலையாகும்.

**உதாரணம் :—** "நான் அதைப் பார்த்தேன்" என்பதில் நான் என்னும் துணிவுமட்டும் "பார்த்தேன்" என்று சொல்ல முடியாது. "நான் என் உடலால் என் புலனாகிய கண்ணால், என் அறிவால், என் சப்தமாகிய சொல்லால், என் துணிவால் நான் அதைப் பார்த்தேன்" என்றுதான் சொல்லமுடிகிறது.

இதில் ஏதோ ஒன்றுவது குறையாக இருந்தால் அதைச் சொல்லமுடியாது.

**சிறிய நான் பெரிய நான்:—**தனக்கும் விளக்கமில்லாது பிறர் அறிந்த உண்மைகளையும் ஏற்றுக்கொள்ளாது, பிடிவாதத்தோடு பேசுவதும், செயலாற்றுவதும் சிறிய நான். ஏகமாய் எல்லாமாய் வேறுபட்டிருப்பது (பரிணமித்திருப்பது) பெரிய நான்.

அநேக காலங்களாய்ப் பல பயிற்சிகளைச் செய்து முடிவில் உணர்வுபெற்று அதிலிருந்து மெய்ப்பொருளாராய்ச்சி செய்து நான் என்னும் முடிவு கிடைத்ததும் அதை அநேக விதமாகச் சொல்லியதுவே இவ் வேகச் சொற்கள்.

“உடல் அழகுடையோரும் பேரறிவின் புதல்வரும்
தர்க்கத்தை யெல்லாம் தகர்த்தெறிந்த தலைவரும்
தாரகத்தின் உள்ளுள்ள மௌன மோகினியின் கணவரும்
தன்னைத்தான் அறிந்த இறைவர்களே!
என் இருதய மலர்களே! மெய்யுணர்வாளர்களே!”
என் அம்பலத்தில் இருந்து சொல்லுகிறேன்
இறைவன், இறைவன், நான் இறைவனே.

**மழையில் நனைந்து வரும்போது கேள்விக்குப் பதில்**

சுவாமி! நனைந்து விட்டீர்களே!
அம்மா! நான் நனைவதே இல்லை!
சுவாமி! உடல் நனைந்தது.
உடலா நனைந்தது?
இல்லை, இல்லை! அறிவுதான் நனைந்தது.
அறிவா நனைந்தது?
இல்லை அம்மா! உடல் நனைந்ததை அறிவு அறிந்தது.

கேள்வி :—உலகங்கள் எப்படி உண்டானது?

பதில் :—1. மடலாய், விடலாய், கடலாய், திடலாய், உடலாய், உலகங்களாகியது.

பதில் :—2. சத்தாகி, சித்தாகி, சமமாகி, உறைதலாகி, உயிராகி, உலகங்களாகியது.

கேள்வி :—இதன் பொருள் யாது?

பதில் :—1. மடலாய் - மலராத முட்டுப்போன்றிருந்த ஒரே ஒரு அணு
விடலாய் - விரிந்து வெளிச்சமாகி
கடலாய் - எங்கும் பரவி
திடலாய் - பல்வகையாக உறைந்து
உடலாய் - உயிரினங்களாகி
உலகங்களாகியது - பல்வேறு உலகங்களாகியது.

2. சத்தாகி - சத்தாயிருந்த ஒரே ஒரு அணு
சித்தாகி - விரிந்து வெளிச்சமாகி
சமமாகி - எங்கும் பரவி
உறைதலாகி - பல்வகையாக உறைந்து
உயிராகி - உயிரினங்களாகி
உலகங்களாகியது - பல்வேறு உலகங்களாகியது.

கேள்வி :—கடவுளுக்கு எது நல்லது? எதுகெட்டது?

பதில் :—கடவுளுக்கு நல்லதுமில்லை. கெட்டதுமில்லை. இரு செயல்களும் கடவுளேயாகும். காலம், பருவம், இடம், பொருளுக்குத் தக்கவாறு மனித அறிவு ஏற்படுத்திய சட்டங்களே நல்லது கெட்டது என்பதாகும். உடலுக்கு நலம் விளைவிப்பதும், அறிவிற்கு ஏற்றதும் எதுவோ அதை நல்லதென்றும், இதற்கு மாறுபாடுடையதெல்லாம் கெட்டதென்றும் ஏற்படுத்தப்பட்டது.

கடவுளைக் கண்ணால் பார்க்கவேண்டுமானால், கண்ணுக்குமுன்னால் எது தெரிகிறதோ, அதுவே கடவுளாகும்.

பக்தியால் எந்த உருவத்தை தங்கள் எண்ணத்தில் அபிமானித்திருக்கிறார்களோ, அந்த உருவம் அறிவு மயக்கத்தால் பிரதிபலித்து சில நிமிடங்கள் கண்பார்வையில் பட்டு மறைந்துவிடும். அறிவில் விளக்கமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், அருகம்புல்லின் நுனியில் தங்கியிருக்கும்

பனித்துளியில் உன் உருவத்தைப்பார்க்க நோக்குவதுபோல், அறிவில் கூர்மையாக ஆராய்ந்தால் அறிவு விளக்கம் பெறுவதுடன், எல்லாம் கடவுளாக இருப்பதை அறிந்துகொள்ளலாம்.

கேள்வி :—யாருக்குக் கடவுள் உண்டு? யாருக்குக் கடவுள் இல்லை?

பதில் :— அடர்ந்த காடுகளையுடைய மலைப்பகுதிகளிலும், சோலைகளிலும் வாழும் உயிரினங்களுக்குக் கடவுள் உண்டு. காரணம்: அவற்றிற்கு வேண்டிய உணவு வகைகள் எல்லாம் அங்கேயே வேண்டிய அளவு தடையில்லாது இயற்கையாக (கடவுளால்) கிடைத்து விடுவதால் எல்லாம் ஒழுங்காக நடந்தேறி விடுவதனால் அவற்றிற்கு கடவுள் உண்டு.

மாந்தரின் சம்பிரதாயத்திற்குக் கடவுளில்லை. காரணம்: மாந்தர் தத்தம் கடமைகளைச் செய்யத்தவறித் துன்பம் வரும்போது, அத்துன்பத்தை நீக்கி, இன்பம் அடையும் பொருட்டுத்தான் கடவுளைத் தேடுகிறார்கள். மற்ற பொழுது தேடுவதில்லை. அதனால்தான் அவர்களுக்குக் கடவுளில்லை.

அன்பின் பரவசத்தால் அறிவைப் பெருக்கிட,
துன்பங்களை யெல்லாம் தொலைத்தேவிட்டு
அறியாமையான அடிமையை ஒழித்தேவிட்டு
விவேகமில்லா விவகாரங்களை அழித்தேவிட்டு
அது, இது, என்ற இருநிலையை எரித்தேவிட்டு
அங்கிங்கெங்கும் நிறைந்த நான் என்ற
தன்னிலையில் நழுவாது நிலைத்திட வந்தோர் யார்?
வருவோர் யார்? அவரே என்னிலைக்குடையோர்,
[தன்னிலையடைவோர்.

நானே நீ, நீயே நான்
நானும் நீயும் நானே நான்.

எட்டாத, தற்பரத்தை எட்டி எட்டி உட்புறமாய்
உட்சென்று, உற்று நோக்க நோக்க, அப்பரமும்
இப்பரமும் ஏகபராபரமும் என்னுள் நான் அறிந்தேன்.

நினைவினிடத்தில் நினைவை நினைத்து
நினைவை நிறுத்தி, நினைவைச் சுழற்றி
நினைவில் நிலைத்து, நினைவாய் நினைவில்
நினைவோடு நின்ற, நினைவும் நானே.

தன்னிலையில் தானாகி ஓங்கார ஒளியுமாகி
விண்ணாகி, மீனாகி, நட்சத்திரமாகி, நீராகி, நிலனாகித்,
[தாவரமுமாகி
வித்தாகி, உருவாகி, விந்தாகி, மனுவாகி, (மனிதனாகி)
மதியாகி, நீதியாகி, நிலையாகி, நிலைத்தலாகி,
நின்றமர்ந்த நிலையில், அறிவில் அறிவாய்,
தானாகிய நானென்ற நிலையே தன்னிலை.

வேர் வேறு, முளை வேறு, மரம் வேறு, வித்து வேறு,
சுவை வேறு, சுகித்தறிந்த என் அறிவு தான் வேறோ?
துளி வேறு, மழை வேறு, நீர் வேறு, ஆறு வேறு,
கடல் வேறு, கண்டறிந்த என் கருத்துத்தான் வேறோ?
நிலம் வேறு, கால் வேறு, தலை வேறு. உடல் வேறு,
வீடு வேறு, ஊர் வேறு, உலகம் வேறு, இதனுள்
அனுபவித்து வந்த என் ஏக்கம் தான் வேறோ?
காது வேறு, கண் வேறு, கருத்து வேறு, மதி வேறு,
நீதி வேறு, நாடி வந்த என் நாட்டம் தான் வேறோ?
வெப்பு வேறு, நெருப்பு வேறு, வெளிச்சம் வேறு,
உருவு வேறு, அவன் வேறு, சூரியன் வேறு,
சோதி வேறு, என் சொரூபம் தான் வேறோ?
தொனி வேறு, இராகம் வேறு, நாதம் வேறு,
சப்தம் வேறு, வேதம் வேறு,
செபம் வேறு, என் சொல் தான் வேறோ?
நினைவு வேறு, உணர்வு வேறு, உயிர் வேறு, சக்தி
வேறு, கடவுள் வேறு, எங்கேதிலும் நிறைந்த நான்
[வேறோ? வேறில்லை நானே.
இதைப் பார்ப்பது யாரோ, அவனே நான்.

அவனன்றி ஓர் அணுவு மசையாது! ஆம்.
உன் நினைப்பின்றி ஒன்று மசையாது.

கேள்வி:—கடவுளின் தன்மைதான் என்ன?

பதில்:—இப்போது கேள்வி கேட்பதும், பதில் சொல்வதும் கடவுளே.

கேள்வி:— ஆன்மாவுக்கும், அன்பு, அருள் அறிவுக்கும் வேறுபாடு என்ன?

பதில்:—கனியைப் போன்றது ஆன்மா;
வாசனையைப் போன்றது அன்பு;
அழகு போன்றது அருள்,
சுவையைப் போன்றது அறிவு,

கேள்வி:—இந்நூல் தாங்கள் எழுதியதா?

பதில்:—இல்லை, நீ எழுதியதே.

கேள்வி:—நானு எழுதியது?

பதில்:—ஆம்! நானே எழுதியது.
நீயே எழுதியிருக்கிறாய், நன்றாய்ப்பார்!

கேள்வி:—எந்நூலுக்கும் இந்நூலே மூலம் என்றதற்கு ஆதாரம் என்ன?

பதில்:—ஆதாரம் நானே.

கேள்வி:—மற்ற நூலின் ஆதரவில்லையா?

பதில்:—அப்பா, எல்லா நூலும் என் ஆதரவை அடைய என்னையே போற்றித் தேடி வருகின்றன.

இது எழுதியது வேறொருவர் என்றெண்ணாது நீயே எழுதியதாய் ஆராய்ந்தால் நீ என்ற நான் பிடிபடும்.

கேள்வி:—இந்நூல் பார்ப்பதால் பயன் என்ன?

பதில்:—அப்பா, மகிழ்ச்சி. எல்லாத் தத்துவங்களின் முடிவையே சொல்லியிருக்கிறேன். முடிவறிய முற்படு

வோர்க்கு முடிவும் அறிந்து, அறிந்ததற்குத் தக்க ஆராய்ச்சியும் நிறைந்திருக்கிறது.

**உதாரணம்:**—கரை தெரியாது தத்தளிக்கும் கப்பலுக்குக் கடலில் கரை காட்டுவது போல, உலகில் உண்மை அறிய அனேக யுகங்களாய் அநேகர் பாடுபட்ட பயனையும் நான் **குண்டலியின் பேரின்பத்தில்** பதின்மூன்றாண்டுகள் அனுபவித்து அறிந்த உண்மையையும் என் முடிவுக்கு மேல் முடிவில்லா மூல முடிவையுமே இந்நூலில் சொல்லியிருக்கிறேன்.

## நான் பட்ட துன்பங்களும், அடைந்த பயன்களும்

உடல் ஒடுங்கி உருகினேன்; உள்ளம் கசிந்து, உருக்க நீர் வடித்தேன்; உண்மையால் எனையடைந்தேன்; உருவப் பொருளை உச்சியில் அமர்த்தினேன்; உலகங்களுக்கெல்லாம் ஒருவனுயுருவானேன்; பற்றுன பற்றிலே பாவனையாயிருந்து, பற்றற்ற நிலையிலமர்ந்து பணிவில்லாத் துணிவைப் பகர்ந்தீர்ந்தேன்.

பட்டேன் படாத பாடெல்லாம் பட்டேன்
பலன் உலகாதி உலகங்களேல்லாம் பார்த்தேன்
எல்லா உலகங்களும் என் உலகங்கள் தான்
படியாத மொழி ஒன்றுமில்லை; படித்துப்பாடும்
மொழியெல்லாம் என் மொழிதான்
அறியவேண்டிய பொருளேல்லாம் அறிந்தேன்
ஆகியிருக்கும் பொருளேல்லாம் என் பொருளேதான்
உடலால் சென்றேன்; நுண் உடலால் சென்றேன்
உள்ளுள்ள உணர்வறிவால் சென்றேன்
இங்கும் அங்கும் சென்றேன்
எங்கும் நிறைந்தவன் நான் ஒருவனே.

உயர் உணவு விரும்பேன்
உயர் உடை விரும்பேன்
உடல் சுகம் விரும்பேன்
உலகப் புகழ் விரும்பேன்

**நான் யார் என்றறிய விரும்பிய விருப்பத்தின்**
**ஊக்கத்தால் தன்னிலே அறிந்தவன் யான்.**

*கேள்வி :—நீங்கள் வணங்குகின்றீர்களா?*

*பதில் :—அப்பா, நான் அநேக இடத்தில் வணங்க வைத்துக் கொண்டும், உன்னிடத்தில் சரியாகப் பேசிக்கொண்டும் நான் எந்நிலையிலேயே இருந்து கொண்டும் இருக்கின்றேன்.*

*அன்பால் நிரம்பி அதுவாய் அமர்ந்தேன்; கேட்கும் சொல்லெல்லாம் என் சொல்லே; பார்க்கும் ரூபமெல்லாம் என் ரூபமே; நடக்கும் செயலெல்லாம் என் செயலே; நானே என்னில் நானுனதில் நாமே நாமானோம்.*

## அத்துவிதம் துவிதம்

*பல உருவங்களாய் வேறுபட்டுத் தோன்றுவதெல்லாம்* **ஈசனே.** *ஈசன் என்று தனியாகவேறு ஏதோ இருப்பதாகத் தேடுதலால்தான் முதல் நிலையாயுள்ள இரண்டற்றதே (அத்துவிதமே) இரண்டாகின்றது. (துவிதமாகின்றது).*

## ரூப துவிதம்

*சிலை, விக்கிரகங்கள், படம், இவைகளை வைத்துப் பூசை செய்வதும், சமாதிகளைத் தெரிசிப்பதும், ஜெபம் ஜெபிப்பதும், பல விழாக்களை நடத்துவதும், ஒன்றையே சிறப்பாக வணங்குவதும் ஆகிய இவை எல்லாம் ரூப துவிதமே.*

## அரூபத் துவிதம்

*எவ்வுருவங்களையும் வணங்காது வரம் வேண்டுதல், உருவேற்றல், யோகம் செய்தல் தத்துவ விசாரணை செய்தல் ஆகிய இவை எல்லாம் அரூபத் துவிதம்.*

## சுத்த அத்துவிதம்

*அறிவினுடைய அனுபவத்தின் விளக்கத்தால் தன்னிலே அறிந்து, எதையும் வணங்காதவர்கள் சுத்த அத்துவிதக்காரர்கள்.*

## பக்தி நிலை : (அறுவகையாவன)

நாடுதல்-நடத்தல்-கேட்டல்-தெளிதல்-தேர்தல்-அடைதல்.
நாடுதலில்-நடத்தல்-நடத்தலில்-கேட்டல்.
கேட்டலில்-தெளிதல்-தெளிதலில்-தேர்தல்
தேர்தலில்-அடைதல்-அடைதலில்-அனுபவம் முடிவாகிறது.
நாடுதலில்-வெகுகாலம்,-நடத்தலில்-வெகுகாலம்
கேட்டதில்-சிறிதுகாலம்,-தெளிதலில்-வெகுகாலம்.
தேர்தலில்-சிறிதுகாலம்,-அடைதல்-அப்பொழுதே.

## ஞான நிலை : (ஐவகையாவன)

நினைத்தல்-நிலைத்தல்-உணர்தல்-அறிதல்-அடைதல்

## நாஸ்திகம்—ஆஸ்திகம்

அறிவுக்கு விளக்கமில்லா நம்பிக்கையுடனும் ஒரே பிடிவாதமாகவும் கடவுளைப் பற்றிப் பேசுவது **ஆஸ்திகம்**. அதன் தத்துவ ஆராய்ச்சியோடு விளக்கமாய்ப் பேசுவது **நாஸ்திகம்**.

காதால் கேட்டதைக் கண்ணால் பார்த்துத் தெளிவடையாதது ஆஸ்திகம், காதால் கேட்டதைக் கண்ணால் பார்த்துத் தெளிவடைவது நாஸ்திகம் எனப்படும்.

## அரூபம்—அரூபா ரூபம்—ரூபம்

படைத்தல் அல்லது மாறுதல் அரூபமாயிருந்து அரூபாரூபமாகி ரூபமாகிறது.

**ரூபம்** :—கண், காது, மூக்கு இவைகளால் தெரிந்து, கேட்டு, முகர்ந்து கைக்கு அகப்படுவதெல்லாம் ரூபமாகும்.

**அரூபா ரூபம்** :—பரிசத்தால் அறியும் குளிர்ச்சியும் வெப்பமும், நாவாலறியும் ருசியும், மூக்கால் முகரும் நாற்றமும், காதால் கேட்கும் சப்தமும், கண்ணாலறியும் வெட்ட வெளியும் ஆகிய இவை கைக்கு அகப்படாமையால் அரூபா ரூபமாகும்.

**அரூபம் :**—மூளையின் விவேக யூகத்தால் அறியும் நினைவு அல்லது முடிவுகள் எல்லாம் ஊற்றுணர்ச்சிக்கும் கை, நா, மூக்கு, காது, கண், ஆகிய புலன்களுக்கும் அகப் படாததால் அரூபமாகும்.

பார்வைக்குள்ளான ரூபங்களுக்கெல்லாம் பார்ப்பவனே பெரியோன்

**உதாரணம் :**—பார்க்கும் பொருள்கள் பெரிதாக இருப் பினும் அதைப் பார்த்து முடிவுகட்டும் அறிவு மனிதனுக் குத்தான் உண்டு.

வேதாந்த தத்துவ ஆராய்ச்சி ஞானத்தைப் பேசிக் கொண்டே வணக்கம், செபம், யோகம் செய்வோரின் கதி எதைப்போல் என்றால், இருட்டுள்ளவரையில் விளக்கு வெளிச்சம் அவசியம் என்று சொல்லிக்கொள்பவரே, சூரிய வெளிச்சத்திலும் விளக்கேற்றிப் பிடித்துக்கொள்வது போன்றதாகும்.

**கேள்விக்குப் பதில் :**—கடவுள் என்றால் என்ன ?

நீர், நிலம், தட்ப வெப்பம், தாவரம், உயிரினங்கள், மனிதர்கள், கிராமம், ஊர், தாலூக்கா, ஜில்லா, மாகாணம், தேசங்கள் ஆகிய இவையாவையும் சேர்த்து ஒரே பெயர் பூமி என்று சொல்வதுபோல் சூரியன், ஆகாயம், நட்சத்திரம் பூமி இவை அனைத்தையும் சேர்த்து (மொத்தமாக) ஒரே பெய ராகக் குறிப்பிடும் பெயரே கடவுள் என்பதாகும்.

அனுபவம் முந்தியது வேதம் பிந்தியது. அனுபவம் ஒன்றையே அநேக உதாரண வாயிலாக எடுத்துச் சொல்லு வது வேதம். அனுபவத்தில் வந்தால் வேதம் சிறியது, அனுட்டிக்குமுன் வேதம் பெறியது.

ஒன்றே பலவாகி, அவற்றுள் பல அழிந்து ஒவ்வொன் றும் உண்டாகின்றதே உலக இயல்பு.

**உதாரணம் :**— தரையிலுள்ள புல், பூண்டு, செடி, கொடி, மரங்கள் யாவையும் அழித்துக் கட்டிடம் கட்டினால்

அதில் அநேகம் ஏற்படுவது போன்று எந்தப் பொருளும் உண்டாகின்றன. சுத்தமான பெரிய கண்ணாடி ஒன்றில் தன் உருவத்தைப் பார்த்தால் தன் உண்மை உருவமே தெரிகின்றது. கண்ணாடியின் அளவுக்குத் தக்கபடி பெரிதாகவோ சிறியதாகவோ தெரிவதில்லை. அக்கண்ணாடியே துண்டுகளாய் உடைந்திட்டால் உடைத்த துண்டுகளிலெல்லாம் தன் உருவத்தைக் காணலாம். உடைந்தபின் ஒரே உருவம் அநேக உருவங்களாகத் தோன்றுகிறது.

பேனாவிலுள்ள மை கணத்தில் நன்மையையும் தீமையையும் உண்டாக்கும். அதைப்போல உங்கள் மனத்தைக் கணத்திற்குக் கணம் மாறவிடாதபடி நன்மையிலேயே வைத்துக்கொள்ளுங்கள்.

அழகுள்ள வாலிபப் பெண்ணை ஆண்மையில்லாப் பேடி இச்சித்துப் பயனடையாதது போன்றதே, அறிவாராய்ச்சியில்லா ஞானம் தேடுவோரின் நிலையும்.

உலக நல்லடியார்களே! படிப்பாலேயோ, புகழ்ச்சியாலேயோ, பணத்தாலேயோ, தம்மைப்பெரிதாய் நினைப்போரின் பெருமை சிறிய பூதக்கண்ணாடியில் தன் ரூபத்தைப் பெரிதாகக் காண்பது போன்றதாகும்.

பார்வையழகுள்ள எலுமிச்சம்பழம் பெரியோர்களிடம் கூசாது செல்லும். ஆனால் ஆகாரப் பாத்திரத்தில் ஒதுங்கியேயிருக்கும்; அதுபோலப் புகழும், அழகுமுள்ளவர்கள் அறிவாளிகளை நெருங்கி யிருந்தாலும் அறிவில் குற்றமுடையோராயிருந்தால் அவர்களிடமிருந்து ஒதுங்கியே யிருப்பார்கள்.

அறிவை அறிந்தோர் அன்பை மறவார்; பொருளை யறிந்தோர் புகழை விரும்பார்; கருவை யறிந்தோர் கடவுளை நாடார்; குருவை யடைந்தறிந்தோர் குறையில்லாதார், சந்தேகமில்லாதார்.

**பற்றற்ற துணிவாய்ப் பற்றற்ற நிலையில்**

**பற்றற்று இருப்பதுவே முத்தி,**

**சுவாமி :** முத்தி என்றால் என்ன?

பதில் :—முற்றிலும் அறிவை விளக்கமாகத் தெரிந்து கொள்வதே முத்தி.

கடவுள் கொள்கையின் பிரயாசையின் பயன் அஃது இன்மை என்ற முடிவுக்கு வருதலே.

## இன்மை என்ற விளக்கமே முத்தி

**காணும் பொருளெல்லாம் கடவுள் மயமே.**

(பக்தன்)

**காணும் பொருளெல்லாம் அணுக்களின் சேர்க்கையே.**

(ஆராய்ச்சியாளன்)

**காணும் பொருளெல்லாம் காண்பவன் அறிவிலே.**

(அறிவாளி)

**காணக் காணக் கடவுளும் காண்பவன் தானே.**

(தன்னிலையடைந்தோன்)

**வணங்குகின்றவன் யார்? வணக்கத்திற்குரிய ஈசன் யார்? வணக்கத்தின் வணக்கத்தால், வணங்கி, வணங்கி, வணங்கியவன் எவனோ அவனே வணக்கத்திற்குரிய ஈசன் என்று அறிந்த அன்றே வணக்கத்தின் முடிவு.**

நான் சொன்னேன், நான் செய்தேன் என்று சொல்லாது கடவுள் சொல்லச் சொல்லுகிறான், செய்யச் செய்கிறான் என்று சிலர் சொல்வதுண்டு. அதற்குக் காரணம், தன் வார்த்தைக்கும் செயலுக்கும், செல்வாக்கு வேண்டும் என்பதற்கும், தன் வார்த்தைகளும், செயல்களும், அறிவுக்கும் அனுபவத்திற்கும் முரணாய் இருந்தாலும், அதை விவேகமில்லாத மக்கள் ஆமோதிக்க வைக்கவும் தன் வார்த்தைக்கும் செயலுக்கும் தன்னால் விரிவுரை விளக்கம் கொடுக்கமுடியாதபடி இருந்தாலும், தான் செய்வதாகச் சொல்வதாகச் சொல்லாமல் எல்லாம் கடவுள் அல்லது கடவுளின் அரு

ளால் வான்மொழியால் ஏவலால் செய்தேன் சொல்லுகிறேன் என்று சொல்வார்கள். சொல்வது யார்? மனிதன்தான். மிக வேகமாய்ப் பறக்கக்கூடிய பறவைகளாயினும் ஆகாய விமானங்களாயினும் மீண்டும் தரையில் தான் வந்து நிற்பது போல் மிகப் பேரன்பு, பெரிய நம்பிக்கையால் தோன்றும் எண்ணத்தில் வானுலகு, துன்ப உலகு, பிறவுயிர்க்கு இன்னா செய்யாமை, பிறவுயிர்க்கு இன்னா செய்தல், பிறப்பு என்னும் கற்பனைக்கு ஈடுபட்ட அறிவாய், சிறிது காலம் இருப்பினும் ஆராய்ச்சி அறிவு பெருகிய போது மீண்டும் இயற்கையில் தான்வந்து முடிவடைவார்கள்.

---

# 2 நினைப்பு

*நான் என்னும் எண்ணம் பரவிய பரப்பே நினைப்பு.*

**உதாரணம் :**—ஒரு மலரின் தோற்றம் சிறிதாகவே இருக்கும். அதன் நறுமணம் மிக்க தூரம் வரையில் பரவியிருக்கும். ஒரு மனிதனது நினைப்பின் சக்தி எண்பதினாயிரம் கோடி (80000,00,00,000) மைல்களுக்கு மேல் பரவியிருக்கிறது.

அதை அறியக்கூடிய அறிவுடைய மனிதனுக்கு அறிவின் வேகம் ஒரு நொடிக்கு இருபதினாயிரம் (20,000) மைலுக்கு மேல் வேகமுள்ளது. மனிதனின் **நினைப்பின் விரிவு** எங்கும் நிறைந்து இருக்கிறது. அதை அறியக்கூடிய தன்மை அவரவர் அறிவைப் பொறுத்ததே.

மனிதனின் நினைப்பு இல்லாத இடமே இல்லை. அவன் பாராத இடமுண்டு.

**ஒன்றில்லா திருந்தது ஒன்று.**
**ஒன்றே இருந்தது ஒரு அணு.**
**அணுவா யிருந்தது நான்.**
**நானாக இருப்பது நினைப்பு.**
**நானென்ற வேகமே நாதம்.**

நாத மயமாயிருப்பது நினைப்பு.
நானென்ற உணர்ச்சியே நெருப்பு.
நெருப்பாயிருப்பது நினைப்பு.
நெருப்பின் பொறிகளே அணுக்கள்.
அணுவாய் நிறைந்தது நினைப்பு.
அணுக்களின் சேர்க்கையே உலகம்.
உலகங்களாயிருப்பது நினைப்பு.
நானென்பதற்கு உரு கரு.
கருவாய் இருப்பது நினைப்பு.
கருவுக்கு உரு உடல்.
உடலாய் இருப்பது நினைப்பு.
உடலில் இருப்பது உயிர்.
உயிராய் இருப்பது நினைப்பு.
உடலால் ஏற்படுவது அறிவு.
அறிவில் இன்பிப்பது நினைப்பு.
அறிவு அடைவது உணர்வு.
உணர்வாய் இருப்பது நான்.

**உருவின்மையில் :—**

*அணு முதலாம்*

| | | |
|---|---|---|
| *துணிவில்* | — | *நான்* |
| *விரிவில்* | — | *நினைப்பு* |
| *வேகத்தில்* | — | *ஒளி* |
| *உருவத்தில்* | — | *நெருப்பு* |
| *பிரிதலிலும்-சேர்தலிலும்* | — | *அணு* |
| *ஊற்றுணர்ச்சியாலும்-பார்வையாலும்* | — | *பருஉடல்* |
| *சுவையிலும்-நோவிலும்* | — | *நுண்ணுடல்* |
| *பேசுவதிலும்-உணர்வதிலும்* | — | *அறிவுஉடல்* |

## ஓ மனிதனே! நீ எங்கும் நிறைந்தே இருக்கிறாய்.

உனது உடல் ஊற்றுணர்ச்சியை (தொட்டால் உணரும் உணர்ச்சியை) உணரும் அறிவு வாயிலாக நீ உன் உடல் முழுவதும் நிறைந்திருக்கிறாய். இரண்டு மைல் சுற்றளவில் இருக்கும் நறுமணத்தை உன் மூக்கால் முகரும் அறிவின் வாயிலாக அச் சுற்றளவு முழுதும் நீ நிறைந்திருக்கிறாய். 18 மைல் சுற்றளவில் உண்டாகும் ஒலியை உன் காதால் கேட்கும் அறிவு வாயிலாக அப் பரப்பிடம் முழுதும் நிறைந்திருக்கிறாய். 60 மைல் தூரத்திலுள்ள பொருள்களையும் ஞாயிறு, திங்கள், விண்மீன்கள், ஆகாய வெளி ஆகிய இவற்றை உன் கண் கொண்டு பார்க்கும் அறிவின் வாயிலாக அப்பரப்பிடம் முழுதும் நீ நிறைந்திருக்கிறாய். உலகெங்கும் முன்னதாகவே நீ சுற்றிப் பார்த்திருந்து இப்போது இருந்த இடத்திலிருந்து அவைகளை நினைக்கும்போது நீ நினைக்கும் அறிவின் வாயிலாக உலக முழுதும் நீ நிறைந்திருக்கிறாய். மேலும் பாடகர்களையும், தீர்க்க தரிசிகளையும் யோகிகளையும், ஞானிகளையும் நினைக்கும்போது, நீ அவர்களாகவே ஆகிவிடுவதுடன், அவர்களின் செயல், குணங்களையும் கொண்டு நடத்துகிறாய். பல்வகை உணவுகளை உண்டு அவற்றின் அறு சுவைகளையும் சுவைக்கும்போது அச்சுவைகளுக்குரிய பொருள்களில் பதிந்து கொள்கிறாய்.

இவற்றிற்கெல்லாம் மேலாக நீ எங்கும் நிறைந்திருக்கும் தன்மையை உன் ஆராய்ச்சி அறிவால் அறிந்துகொள்ளும் பொருட்டே உன் அறிவின் நிலைக்கேற்றவாறு நீ பக்தனாகவுள்ள போது, கடவுள் நிலை எங்கும் நிறைந்தது என்றும் அதைக்காண முற்பட வேண்டுமென்றும், நீ யோகியாயுள்ள போது குண்டலினி சக்தியாய் அது விளங்குகிறது என்றும் அதனை அறிய வேண்டும் என்றும், தன் நிலையறிந்த குருவின் வாயிலாக உன்னை நீ யறிந்து அனுபோக அறிவின் விளக்கத்தில் நானே எங்கும் நிறைந்திருக்கிறேன் என்றும் சொல்லத்துணிந்து கொள்வாய்.

**நினைப்பு** :—எப்போதும் யாண்டும் பரவியுள்ளது நினைப்பு.

**எண்ணம்** :—உடம்பின் ஊற்றுணர்ச்சியாலும், புலன்களின் உணர்ச்சியாலும், சூழ் நிலையாலும் உண்டாவது எண்ணம்.

**அறிவு** :—தன் செயலாலும் இன்ப, துன்ப நுகர்ச்சியாலும் ஏற்படுவது அறிவு.

**ஞானம்** :—அறிவின் பெருக்கமே ஞானம். நாம் உண்டாக்கியதிலும் நாம் எண்ணிய எண்ணங்களிலும் பயன்படுவனவற்றை அதிகப் படுத்திக் கொண்டு பயன் படாதனவற்றை அழித்து விடுவதே ஞானம்.

**ஞானிகள்** :—விவசாயத்தாலும் நல்வழியாலும், கலை, சித்திரம், இசைகளாலும், மந்திரிகளாலும், பாதுகாப்புகளாலும், மருத்துவத்தாலும், சமயாச்சாரிகளாலும், பேரறிவாளர்களாலும், தீர்க்க தரிசிகளாலும், எல்லா மக்களுக்கும் துன்பத்தைப் போக்கி எழுச்சி தருவோர்களெல்லாம் ஞானிகளே யாவார்கள்.

**ஞானத்தின் முதாதைகள் துன்பம்**
**ஞானத்தின் பரம்பரை பொறுமை**
**ஞானத்தின் நண்பர்கள் அனுபவம்**
(சிந்தனை-ஆராய்ச்சி)

கேள்வி :—உங்கள் பரம்பரை (தலைமுறை-கால்வழி) எதைச் சேர்ந்தது ?

பதில் :—எனக்குப் பரம்பரை இனிமேல்தான் உண்டாகும்.

கேள்வி :—என்றால் இதை நம்ப முடியவில்லை. விளக்கமாகச் சொல்லவேண்டும் ?

பதில் :—சூனிய (இல்பொருள்) வாதத்திற்கும் நிரீஸ்வர, நாஸ்திக (கடவுள் இல்லை என்ற) வாதத்திற்கும், அத்து

வைத வாதத்திற்கும் (இரண்டற்ற நிலை), நிருவாணத்திற்கும் (பற்றின்மை), பரிணாம வாதத்திற்கும் (வேறுபாடு நிலைமாறுதல்), உலகாயதத்திற்கும் (உலகமே கடவுள் என்னும் கொள்கை), கடுமையான யோகத்திற்கும், கடவுள் விளக்கத்திற்கும், இதுவேதான் உலகில் பீடமாக இருக்கிறது. இனியும் பரம்பரையாக இருந்து வரும்.

கேள்வி :—கடவுள் எப்படி இருக்கிறார்?

பதில் :—நீயாக, நானாக, நாமாக, ஏகனாக, அநேகனாக எல்லாப் பொருளுமாக இருக்கின்றார்.

கேள்வி :—கடவுள் எப்போது உண்டானார்?

பதில் :—கண்விழித்த பின்னும், அறிவு சிந்தித்தின் பின்னும், வாய்திறந்து மொழி பேசிய பின்னும், கடவுள் உண்டானார்.

கேள்வி :—அதற்குமுன் எப்படி இருந்தார்?

பதில் :—அதற்கு முன் கடவுள் கடவுளாகவே இருந்தார் இருந்தோம்.

கேள்வி :—கடவுள் உண்டா?

பதில் :—இல்லை.

கேள்வி :—கடவுள் இல்லையா?

பதில் :—உண்டு.

கேள்வி :—கடவுள் உண்டு, கடவுள் இல்லை, என்றால் விளங்கவில்லையே?

பதில் :—இவ்விரண்டிற்கும் இடையில் அறிவுதான் வேற்றுமை (பேத)ப்பட்டிருக்கின்றது. கடவுள் இல்லையா என்பவரின் கேள்வியை நோக்குங்கால், அவர் இனிமேல்தான் அறியவேண்டியவராய் இருக்கிறார் என்பதும்; கடவுள் உண்டா என்பவரின் கேள்வியை நோக்குங்கால் அவருக்கு அறிவு ஏற்பட்டு, அவ்வறிவு இன்னும் தெளிவடையாமல் சிறு சந்தேகத்தில் இருக்கிறார் என்பதும் புலப்படும்.

எனவே அவரவர் அறிவு நிலைக்குத் தக்கவாறு பதில் கூற வேண்டியதாயிற்று.

கடவுள் உண்டு என்பதும் இல்லை என்பதும் இல்லை, இல்லை, இல்லையே. கடவுளே எல்லாமாகப் பரிணமித்திருப்பதை அறிந்து கொண்டாயானால் நீயும் கடவுள் அம்சமே.

கேள்வி :—எது மாறுபடாதது ?

பதில் :—காலம் மாறுபட்டாலும், காரியம் மாறுபட்டாலும், சத்தியம் மாறுபடாதது.

**உதாரணம்** :—சத்தியம் ஒரு இரும்பைப் போன்றது. அதை உருக்கிக் காலத்திற்குத் தகுந்தவாறு கலப்பையாகவும், கத்தியாகவும், ஆணியாகவும், அச்சாகவும் ஏனைய பொறிகளாகவும் செய்து, காரியத்திற்குத் தகுந்தவாறு உபயோகப்படுத்தலாம். இரும்பு அதே இரும்பாகத்தானிருக்கும்.

கேள்வி :—ஈஸ்வரனுக்குச் செய்யும் பணியாது ?

பதில் :—ஈஸ்வரன் உண்டு, இல்லை என்றும், பிறவி, மறு பிறவி, சொர்க்கம், நரகம், தீர்ப்பு நாள் ஆகிய இவை உண்டு என்றும், இல்லை என்றும் பலர் பலவாராகச் சொல்லுவர். அவை எப்படி இருப்பினும் சரியே. ஆனால் நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் தனக்கும், நிகழ் கால வருங்கால உலக மக்களுக்கும் நன்மை பயப்பதாகவே இருக்கட்டும். அதுவே ஈஸ்வரனுக்குச் செய்யும் பணியாகும். நீங்களும் ஈஸ்வரனாவீர்கள்.

கேள்வி :— அறத்தில் உயர்ந்தவர் யார் ?

பதில் :—நமக்கு உதவாத உணவுகளையும், பொருள்களையும் எவரொருவர் உண்டு, உபயோகிப்பதில், அவர் உடல் நிலை கெடாதிருக்கிறதோ, அவரே நம்மைவிட அறத்தில் ஒரு பங்கு உயர்ந்தவராவார்.

கேள்வி :—மனிதன் எதனால் ஞானம் அடையலாம் ?

பதில் :—உழைப்பாலும், புலன்களாலும், அனுபவத்தாலும், அறிவாலும், மூளையின் யூகத்காலும் ஞானம் அடையலாம்.

கேள்வி :—பரஞ்சோதி என்றால் யார் ?

பதில் :—மக்களின் அறத்தை மறவாத நெஞ்சமுடையவனும், அவர்களது அறியாமையைக் கண்டித்துத் திருத்தும் உள்ளமுடையவனும் எவனோ, அவனே பரஞ்சோதி.

கேள்வி :—பெரியார் என்பவர் யார்? உதாரணங்காட்டி விளக்க வேண்டுகின்றேன் ?

பதில் :—இலை உதிர்ந்தாலும், மரம் காய்ந்தாலும், குணம், மணம் மாறாதது மேலான தாவரங்களின் செயல். அது போன்று சமய சந்தர்ப்பங்களினால் ஏற்படும் இடையூறுகளினால், தனது ஒழுக்கம், உயர் நடை, நீதி, குணம் ஆகிய பண்புகளில் எவர் நீங்காதிருக்கிறாரோ, அவரே பெரியார் எனப்படுவர்.

கேள்வி :—உலகம் எங்கே இருக்கிறது ?

பதில் :—மயக்கமில்லாத மூளையிலிருக்கிறது.

கேள்வி :—உலகம் எப்போது உண்டானது ?

பதில் :—நீ பிறந்த அன்றே.

கேள்வி :—உலகம் எப்போது முடிவடைகிறது ?

பதில் :—நீ மறைந்த அன்றே.

சும்மா முன் இருந்த பொருள்
சும்மா இடையில் உருவாய், உடலாய் வந்து
சும்மா பின் உடலைவிட்டுப் போகும் இடை நடுவே
அனுபவிக்கும்

இன்ப துன்பமே இவ்வுலகு என்று அறிக.

ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது எங்கே வந்தீர் என்று கேட்டால் முதலில் சும்மா வந்தேன் என்று சொல்

லுவர். பின், வந்த காரியங்களைச் சொல்லுவர். அதுபோல சும்மா இருந்த பொருள், சும்மா வந்து, சும்மா இருக்க முடியாததால், தானே ஏற்படுத்திக் கொண்ட காரண, காரியங்களே உலக நிர்வாகங்களாகும்.

கேள்வி :—எதை அறிந்து கொண்டால் அறிவு நிம்மதியடையும் ?

பதில் :—ஒரு பொருளே பல பொருளாய் பரிணமித்திருப்பதை அறிந்து கொள்வதே தன் அறிவின் நிம்மதி.

கேள்வி :—அறிவாளிகள், மகான்களின் நினைவாகத் திருநாள் கொண்டாட வேண்டிய அவசியம் என்ன ?

பதில் :—அவர்கள் அக்காலத்தில் எந்த துன்பத்தை எவ்வாறு விட்டு விடுபட்டார்கள், உலக மக்கள் அடைந்த துன்பங்களை எவ்வாறு நீக்கி இன்பம் அடையச் செய்தார்கள் என்பதை அறிந்து தெளிதற்கேயாம்.

**காட்டை விட்டேன், வீட்டை விட்டேன்**
**என் பெயரையும் விட்டிட்டேன்**
**ஊரை விட்டேன், உற்ரார் உறவினரை விட்டேன்**
**என் சமயத்தையும் விட்டிட்டேன்,**
**பெறுவதும் விட்டேன், பிறப்பதும் விட்டேன்**
**நான் பிணமாவதும் விட்டிட்டேன்**
**என் விருப்பப்படி இருப்பேன். என் அம்பலத்தில் அமர்ந்ததால்**
**என் விருப்பத்தில் நான் இரண்டறக் கலப்பேன்.**

மாளிகையில் உள்ள யோக்கியக் கள்ளனைக் கண்டு பிடிக்கு முன், பலர்மேல் ஐயம் உண்டாக்குவது போன்றே தன் உடலில் உள்ள கடவுள் என்ற தன் நிலையைக் கண்டு பிடிப்பது அவ்யோக்கியனைக் கண்டு பிடித்ததைப் பல சான்றுகள் இருந்தாலேயே வெளியிடமுடியும். அஃதே போன்று நான் என்ற தன் நிலை அடைந்ததன் பின் அவ்

வுண்மையைத் தெரிவிக்கப் பல உதாரணவாயிலாக ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டி வெளியிட வேண்டியதாயிற்று.

**பெருமகிழ்ச்சியில் சொல்லிய கருத்துரைகள் :—**

துரிதத்துக் கேது துன்பம்
அன்புக் கேது அவமரியாதை
அறிவுக் கேது குற்றம்
அக்கினிக் கேது குளிர்
நாதத்துக் கேது தனி இடம்
ஆதிக் கேது அழிவு
இருளுக் கேது இணை
அறிவறிந்தோர்க்கு யார் நிகர்.

நினைப்பு இல்லையேல் ஒன்றுமில்லை.
ஒன்றுமே இல்லையா ?
ஒன்றை நினைத்த போது எல்லாமே உண்டு
நினையா திருந் திருந்தால் ?
சொல்லே இல்லை. நலம் என்ன ?
சொல் இல்லா நலத்தில் இருந்திருந்தால் ?
நலம் துய்த்தது எது ? என்று ஆராய்ந்தால்
உலகில் தோன்றிய பின்னரே மற்றெல்லாம்.

இணையற்றிருந்தேன்; இருந்திருந்து இனியேது செய்வதென்றேங்கினேன்; ஏங்கியேங்கிப் பறந்தேன்; பறந்து பறந்து விரைந்தேன்; விரைந்து விரைந்து வளர்ந்தேன்; வளர்ந்து வளர்ந்து பிறந்தேன்; என்னை அறிவதற்கு ஏங்கினேன்; ஏங்கி ஏங்கி ஏக்கக்கனலால் வாடினேன்; வாடி வாடி அருள்நீர் சொரிந்தேன்; இரவு பகல் விழித்தேன்; ஏதேதோ செய்து முடித்தேன்; முடித்ததின் பயனால் அன்புக்குரிய அன்பனை அடைந்தேன்; அடைந்து என்னுள் நான் அமர்ந்தேன்; அமர்ந்தமர்ந்து ஞான மெய்யுணர்வு அடைந்தேன்;

அடைந்த உணர்வை அண்டி அண்டி அறிவால் அறிந்தேன்; அறிந்தறிந்து தெளிந்தேன்; தெளிந்து தெளிந்து தேர்ந்ததை உணர்ந்த அன்புக்குரிய அன்பனால் இப்பதவி பெற்றேன்; பெற்றதும் வாரி வாரிக் கொடுத்தேன்; கொடுக்கின்றேன்; இனியும் கொடுப்பேன்; கொடுத்து மொழிந்தேன்; மொழி கின்றேன்; மொழிந்து மொழிந்து இன்புற்றேன்; இன்புறு கின்றேன்; இன்புறுவேன்; இன்புற்றதின் பலன் இணையற்ற யானே என் மயமானேன்.

தன் மறதியால் தனித்ததும், மறதி தெளிந்து தானே விழித்ததும், தான் என் செய்வதென்று பசித்ததும், பசித்த ஏக்க வேகமே பரஞ்சோதியாய் விளைந்ததும், விளைந்த பரமா னந்த பரவசமே அறிவாய், அழகாய், விரிந்ததும், விரிந்து பிரிந்து பரந்த அணுக்களின் **வெப்பத்தின்** அமைதியே உறைந்த உலகங்களாய் இணைந்ததும், ஊன்றி ஓர் அறிவாய் வளர்ந்ததும், ஓரறிவிலிருந்தே ஐயறிவு வரையிலுள்ள ரூபா ரூபங்களாய் நின்று நகர்ந்து, ஓடி உலாவுவதும் ஐந்தறிவை யும் அறியும் அருமறை நெறிகளெல்லாம் அடக்கமும், அடங் கிய ஆறறிவுள்ள மனிதனாய்ப் பிறந்ததும், பிறந்த பெரு மையை அறியாது இறப்பதும், இறப்பதற்குமுன் தன்னைத் தான் அறிய வேண்டுமென்ற எண்ண ஏக்கத்தால் தனித் தேன், விழித்தேன், பசித்தேன், பசித்து, தனித்து, விழித்த தின் பயனே, தன்னை அறிந்து தானாகத் தலைவனை (இறை வனை) நான் அடைந்தேன் என்பதும் என் பெருந்தகுதி வேறுபாட்டைத் தெரிந்து நானன்றி வேறொன்றில்லை என்று அறிந்த ஆனந்த பரவசத்தால் அழைத்தேன், அழைக்கின் றேன், அழைத்துத் தருகின்றேன், தன்னைத்தான் அறிவதற் குரிய தன் மெய்யுணர்வை.

நல்ல கண்ணாடியில் முகச்செழிப்புடன் உன் முகத் தைப்பார் அதுவே என் முகம்.

ஒன்றும் அறியாதபோது கடவுளாகவே இருக்கிறீர்கள். அறிவின் பெருக்கத்தின் இடைநடுவே தன் அறியாமை, மடமை, மயக்கம் இவைகளால் வேறொரு கடவுளிருப்பதாகத்

தேடுகிறீர்கள்; தோன்றவைத்துப் பார்க்கிறீர்கள். அறிவின் பெருக்கத்தின் தெளிவில் நீங்களே கடவுளாக இருப்பதை அறிந்த பின் எல்லாம் கடவுளாக இருப்பன என்று அறிந்து கொள்கிறீர்கள்.

ஆக்கல், அழித்தல், வளர்தல், தளர்தல், விருப்பு, வெறுப்பு, மறைப்பு, திறப்பு, பிறப்பு, இறப்பு, இவைகளுக்குக் காரணம் அறிந்த பின் இல்லை! இல்லை!! ஐயப்பாடும் அசைவும் (சந்தேகமும் சலனமும்).

அபாயத்தில் போடும் கூக்குரலுக்கும்,
தன்னைத் தேடிப் பாடும் அருள் பாடலுக்கும்,
தந்நிலை அறிந்தோரின் வாக்கு வன்மைக்கும்,
ஓர் நிர்ணயிப்பில்லை.

---

# 3 நாதம்

நான் என்பதின் வியாபகமே நினைப்பு. நான் என்பதின் வேகமே நாதம். நாதம் அல்லது ஓசை அசைவால் ஏற்படுவது. எல்லா உருவங்களும் அசைந்துகொண்டே இருக்கின்றன. அசைவும் ஓசையும் இல்லாத உருவங்களே இல்லை.

**உதாரணம் :**—காது இரண்டையும் கையால் அடைத்துக் கொண்டு நம் உடம்பினுள் கவனித்தால் ஓசை நன்றாய்க் கேட்கும். அதை நாதம் என்றும் சப்தம் என்றும் சொல்லப் படுகிறது.

**சப்தத்தின் செயல் :**—ஒரு செயல் நடந்தால் அது அதன் சப்தத்தாலே தெரியப்படும். அதனால் விழிப்பு, தெளிவு, ஆராய்ச்சி இவைகள் ஏற்படும். மூச்சை உள்ளிழுத்தலாலும் வெளிவிடுவதாலும் உண்டாகும் (உசுவாச நிசுவாச) ஓசை காதுக்குக் கேட்காவிட்டாலும் சிறு ஓசை அலையின் வேகத் தாலேயே அதை உணர முடிகிறது. இந்த ஓசை தொண்டை நாவைக்கொண்டு அமைக்கும் திறமைக்குத் தக்கவாறு ஒலி

*யாக, எழுத்தாக, சொல்லாக, இன்னிசையாக, படிப்பாக உடனுக்குடன் மாற்றப்படுகிறது. அவற்றையே ஒரு குச்சியால் ஒரு புள்ளி வைத்து அதை அக்குச்சியின் அசைவால் கோடுகள் எழுத்துக்கள் வேதங்களாக மாற்றப்படுகின்றன.*

*சிறு ஒலியால் ஒன்று உண்டாகும்.*
*பெரும் ஒலியால் அது அழிந்து பிரிந்து போகும்.*

*தன் தன் மத வேத ஒழுக்க ஜெப தபங்களெல்லாம் தன்னுள் உள்ள தன் தொனி என்று அறி.*

*ஒரு அணுவினால் எல்லாம் உற்பத்தி.*
*ஒரு விந்துத் துளியினால் உடம்பு உற்பத்தி.*
*ஒரு பேனாப் புள்ளியினால் எழுத்து வேதம் உற்பத்தி.*

**ஜெபம் ஜெபிப்பார் ஜெபத்தின் சொல்லறியார்,**
**ஜெபத்தின் கருத்து அறிந்தால் ஜெபமே தன்னுள் அறிவார்.**
**தன்னுள் ஜெபத்தை அறிந்தால் ஜெபமில்லா இடமேஇல்லை**
**சப்தமே ஜெபம் என்று அறிந்தால் ஜெபிக்கும் ஜெபம்**
**ஒன்றுமில்லை, இல்லை.**

*மெய்யுணர்வாளர்களே! ஞானத்திற்கு உணவு இராகமாகும். உங்களின் ஓய்வுக்காலத்தை அறிவை ஆராய்வதிலும், இன்னிசைகளைக் கேட்டலிலும் கழித்தல் வேண்டும். அப்படி நடந்துகொள்வதில் தவப்பற்றுதலும், அறிவினுடைய வளர்ச்சியும் மிகுதிப்படும். நீங்கள் படிப்பதைவிட பிறர் படிப்பதையும் பாடுவதையும், சிறிது தூரத்திலிருந்து கேட்பது மிக உத்தமம். நீங்களும் பாடுவதென்றால் சிறிய நல்ல இசையோடு பாடி மகிழுங்கள்.*

**என்சொல்லை நெஞ்சால் கேளுங்கள்**
**மிகத்தைரிய சாலிகள் ஆவீர்கள்.**
**நெற்றியால் கேளுங்கள் மரணபயத்தை**
**நீக்கிக்கொள்வீர்கள்.**
**தலையால் கேளுங்கள் அறிவாய்ப் பிரகாசிப்பீர்கள்.**

**துரித நிதானத்தோடு நிதானியுங்கள் உங்களில்**
**நீங்கள் எல்லாம் அறிவீர்கள்.**

**உண்மைக்கு மாறாய் நடவாதீர்கள்.**

தமக்குத் தெரிந்த உண்மைக்கு, மாறாய் நடப்பது எதைப்போன்றதென்றால் தாம் பெற்ற குழந்தையைத் தாமே கொன்றது போலாகும். கொன்ற வேகம் சிறிது காலம்வரை இருக்கும். அதன் தீமை வெகுகாலம்வரை இருக்கும். அது போன்றே உண்மைக்கு மாற்றம் கணப்பொழுதில்; அதனால் ஏற்படும் துன்பங்களோ, வெகுகாலம்வரை. தம்மையும், தம்மைச் சூழ்ந்தோரையும் பற்றுகின்றன.

ஆடல் பாடலுக்கும், அதற்குரிய ஆனந்த மோகத் திற்கும் மேளதாள இராகத்திற்கும், முன்னும் பின்னுமாய் உள்ளது நமது திரு மொழியாம் ஓசையாகிய ஒரு மொழி —ஆனந்த மும்ம்ம்ம்.

பேரிடரை அல்லது துன்பத்தை அறிவிப்பதும் ஓசையே. ஆனந்தத்தை அறிவிப்பதும் ஓசையே. எல்லாவற்றையும் அறிவிப்பதும் ஓசையே, அசையாத பொருள் ஒன்றுமே இல்லை.

துணிவால் அசைவு, அசைவால் அலை, அலையால் ஓசை. உருவம் நிலைத்து இருப்பதும், உருவம் அழிந்து விடுவதும் அசைவினாலேயாம்.

பெய்கின்ற மழை நீரில் எவ்வித அழுக்குமில்லை. நிலத் தில் விழுந்த பின்னரே அது நிலத்தின் தன்மைக்கேற்ப அழுக்காகி, சுவை, நிறம் மாற்றமடைகின்றன. அதேபோல் எல்லாருடைய உயிரும் தூய்மையானதே, ஆயினும் அவரவர் களுடைய குணத்தாலும், அறிவாலும் அநேகவிதக் குறை களுக்கு ஆளாகின்றனர். கெட்ட நீரும் சூரிய வெப்பத்தால் சுத்தமாகிப் பின் மழையாகப் பொழிவதுபோல், தன் குற்றத் தைத் தாமே உணர்ந்து பயன்படும் கடமைகளைச் செய்ய முற்படுங்கள்.

தாழ் இல்லாத கதவுள்ள வீட்டைப்போன்றதே சட்ட, திட்ட ஒழுக்கமில்லாத '**ஞானம்**'.

கேள்வி :—எதனால் உலகில் சண்டைகள் ஏற்படுகின்றன ?

பதில் :—மேகத்தாலும், நதிகளாலும், சமுத்திரங்களாலுமே போர்கள் நிகழ்கின்றன.

மேகங்கள் எல்லா நாடுகளிலும் வேண்டிய அளவு மழை பெய்யாததாலும், ஒரு நாட்டில் மழை பெய்து ஓடி வரும் நதிகளின் நீர்ப்பாசனத்தைப் பங்கிட்டுக்கொள்ளும் வகையாலும், ஒவ்வொரு நாட்டிலுமிருக்கும் பொருள்களையும் அந்தந்த நாட்டிற்கு வேண்டிய பொருள்களையும், நாவாய்களில் ஏற்றிச்செல்வதைத் தடுக்கும் வகையாலும் பெரும் சண்டைகள் ஏற்படுகின்றன.

உலகில் காமம், கோபம், உட்பகை, பசி, பணம் புகழ் இவைகளால் ஏற்படும் உள்நாட்டுக் குழப்பங்களில் அதிகமான உயிர்ச் சேதங்கள் ஏற்படா.

---

# 4 ஜோதி

## மகா காரண லோகம்.

நான் என்பதின் வியாபகம் நினைப்பு. நான் என்பதின் வேகம் (அல்லது அசைவு) நாதம். நான் என்பதின் அரூபா ரூபம் நெருப்பு அல்லது ஜோதி. இதிலிருந்தே எல்லாம் உற்பத்தியாவதால் இதற்கு மகா காரண லோகம் என்றும் பெயர்.

**நெருப்பின் செயல் :**—நெருப்பு பொறிகளாகப் பிரிந்து அணுக்களாவதும், அணுக்களின் சேர்க்கையால் எல்லா உலகமும் எல்லா உருவங்களும் உண்டாகின்றன. அந்த உருவங்களில் ஏற்படும் வெப்பத்தின் வேகத்திற்குத் தக்கவாறும் குறைவுக்குத் தக்கவாறும் உருவ ஒற்றுமை வேற்றுமைகள் உண்டாகின்றன.

**உதாரணம் :**—நம்து சரீரமும் நெருப்பே. அதில் ஓடும் இரத்தமும் நெருப்பே. அதில் ஊறும் விந்தும்

நெருப்பே: அதுபோன்றே, மரமும், மரத்தின் வித்தும் ஆகாயமும், மேகமும், நீரும், நிலனும், காற்றும், நெருப்பே யாகும்.

வெப்பு, உஷ்ணம், ஆவி, வெளிச்சம், பிரகாசம், நெருப்பு அல்லது ஜோதி என்று செயலுக்குத் தக்கபடி பெயர்களைப் பெறுகின்றன.

இந்நெருப்பை எல்லா உலகங்களும், விண்மீன்களும் வலமாகச் சுழன்று சுற்றுகின்றன.

அருளால், அருளின் விரைவால், விரைவின் விளைவால், விளைவின் விரிவால், விரிவின் சுழலால், சுழலின் சுகத்தால் சுகத்தின் பெருக்கால், பெருக்கின் பிரிவால், பிரிவின் உறைவால், உறைவின் உணர்ச்சியால், உணர்ச்சியே உலகம், உலகங்கள்.

வேகின்ற செஞ்சுடரும், வெண்ணிற வெளிச்சமும் வெப்பாய், அப்பாய், பின் உப்பாய் உறைந்த உலகத்தில் வித்தாய் விளைந்து பின் விந்தாய் உள்ள கருவே அருட் பெருஞ்ஜோதி என்றறிக.

நடந்து, ஓடி ஆடிப் பாடி சுமந்து பற்பல கலைகள் கற்று, பெருந்தன்மையோடு பணிவாக நடந்து, பிச்சை எடுத்து, பேராசை கொண்டு, நூதன அறிவால் பல தொழில் கள் செய்து, மலை ஏறி காடு கடல் கடந்து, ஆகாயத்தில் பறந்து சென்று, போர் புரிந்து, பொருள்தேடி, அரசர்களாவ தும், சிந்தித்து அறிவில் தெளிந்து ஞானிகளாவதும் எதற் கென்றால், விளைந்திருக்கும் விவசாயமாகிய ஜோதிப்பொருளை ஒருச்சாண்வயிறு நிறைய உண்டு, உயிரிருக்கும்வரை உடலை நலமாகவைத்துச் சுகமாக அனுபவித்துச் செல்வதற்கேயாம்.

## 4/1 சூரியன்

சூரியன் என்ற வடிவம் தனியாகவோ, பலவாகவோ கிடையாது. அந்தந்த உலகங்கள் சுற்றும் வேகத்திற்குத் தக்க வாறு பெரிதாகவும் சிறிதாகவும் **எல்லாவற்றிற்கும் காரண மான** அக்கினி சூரிய வடிவமாகத் தெரிகின்றது.

இந்தச்சூரியனின் வெப்பத்தின் விளைவே பாம்பாகவும் மற்ற உயிர்ப் பிராணிகளின் விடமாகவும் விளைகின்றது. மற்றும் நஞ்சு, பாஷாணம், வீரம், பூரம் முதலிய நச்சுப் பொருள்களாக உற்பத்தியாகின்றன. இச்சூரியனின் வெப்பம் குறைந்த பாகங்களிலே உள்ள நச்சுயிர்களுக்கு நச்சுச் சக்தி குறைவே.

இதைப்போன்று உடலில் தவ உருக்கக்கனல் உள்ளவர்களுக்கும் மூலக்கனல் உள்ள தவக்குருக்களுக்கும் சொல்லில் விஷ சக்தி உண்டு. அதனால் குருக்களிடத்திலேயோ, மற்றப் பெரியோர்களிடத்திலேயோ உண்மைக்கு மாறாக நடக்காதீர்கள்.

மற்றும் சிலருக்குக் கண்களிலும் இவ்விஷ சக்தி அதிகமுண்டு, அதனால் அவர்களது கண் பார்வை பட்டவுடன் பல கோளாறுகள் உண்டாவது இயல்பு. அப்படிப்பட்ட உடல் சம்பந்தமான கோளாறுகளை, அறிவுடையோர் அந்தப் பார்வை பட்ட இடங்களில் தம் கண்ணால் ஐந்து நிமிடம் கூர்மையாகக் கண்ணை இமையாதபடி பார்வையை அதன் பேரில் செலுத்தினால் அக்கண் திருஷ்டியின் கோளாறுகள் நீங்கிவிடும். ஒரு தடவையோ அல்லது மூன்று தடவையோ பார்த்தால் போதும். கண் திருஷ்டியுள்ள கண்ணுடையவர்களை நீங்கள் குறைசொல்லி விடக்கூடாது. அதற்குக் காரணம் அவர்களல்ல. அவர்களது கண்களிலுள்ள விஷ சக்தியேயாகும்.

**ஆராய்தல் :**—மரத்தின் சுவையை மரம் அறியாததால் அதற்கு ஓரறிவாகும். சுவை அறிந்து இன்புறும் அறிவுள்ள மக்களே இன்பிப்பானேன்? இன்பிப்பது எது? இன்பித்ததெங்கே? நகர்ந்து, நுகர்ந்து, எங்கே செல்வது, எங்கே சென்றிருப்பது என்றறியாதது ஈரறிவாகும். நடந்து சென்று அமைதிபெறும் ஆறறிவுள்ள மக்களே, எங்கு வந்திருக்கின்றீர்கள்? வந்த காரியம் என்ன? நகர்ந்து, நுகர்ந்து, கேட்டு, கேட்பது இன்னதென்று அறியாததே மூவறிவாகும் கேட்டு, சொல் சுவை எழுத்துக்குரிய ஆறறிவுள்ள மக்களே!

எதனால் பேசினீர்கள்? பேச்சின் முடிவெங்கே? நகர்ந்து, நுகர்ந்து, கேட்டு, விழித்துப் பார்த்தது இன்னதென்றறியாததே நான்காம் அறிவாகும். பார்த்த இடமெல்லாம் அறிவில் பதித்து வைத்திருக்கும் ஆறறிவுள்ள மக்களே, பார்த்த பொருளெல்லாம் எது? பார்த்து இன்பித்திருப்பது எதற்காக? நகர்ந்து, நுகர்ந்து, கேட்டு, விழித்து, தெளிந்து எது செய்து முடிப்பதென்றறியாததே ஐயறிவாகும். நாடிய காரியம் பூர்த்தி செய்யும் ஆறறிவுள்ள மக்களே! எதைச் செய்வது? எதைச் செய்யாதிருப்பது?

நகர்ந்து, நுகர்ந்து, கேட்டு, விழித்து, தெளிந்து தேர்ந்து மனிதனாய் வந்த பெருமையை அறியாததே ஆறறிவாகும். ஆறறிவையும் கொண்டு நடத்துகின்ற ஆறறிவுள்ள மக்களே! அறிந்ததெல்லாம் சரி, நீங்கள் அறிந்த மேல் நிலை எது?

ஆறறிவிலும் ஆறறிவாய் அவ்வாறறிவிலும் அவ்வாறறிவாய் அறிந்து பார்ப்பீர்களாகில் மூல முழுமையும் உங்கள் அறிவால் அறிந்து கொள்வீர்கள்.

மகிழ்ந்த மனப்பான்மை எல்லோருக்கும் பொது. உண்மையால் எங்கும் சிறப்பு. அறிவின் தெளிவே அமைதி. உணர்வால் உண்டாவது உயர்நிலை.

சூரியனை மேகம் மறைப்பது போல் உங்கள் ஐயப்பாடு அறிவின் விளக்கத்தை மறைக்கிறது. வெளிச்சத்தைச் சுவர் தடுத்துக் கொள்ளுதல் போல் உங்களுடைய அறிவின் விளக்கத்தைப் பகைமை தடுத்துக்கொள்ளுகிறது.

ஐயுறவை ஆராய்ச்சியாலும், அனுபவ முடையோர் மூலமாகவும் தீர்த்துக்கொள்ளுங்கள். பகைமை கொள்ளுகின்ற மனப்பான்மையை இன்றே விட்டு ஒழியுங்கள்.

---

# 5 அணுக்கள்

## அவனே அணு, அணுவே அவன்.

ஆதி நான் என்ற ஒரு அணு இன்று அணுவாக இல்லை. அதுவே நெருப்பாகப் பெருகிக்கொண்டே இருக்கிறது. நான் என்ற வியாபகம் நினைப்பு. நான் என்ற வேகம் நாதம். நான் என்ற அருபாரூபம் நெருப்பு. அந் நெருப்பின் பொறிகளே அணுக்கள். நெருப்பின் உருவமே சூரியன். அணுக்களின் மயமே வெளி அல்லது வெட்டவெளி, ஆகாயம்.

**அணுக்களின் செயல்: —**

**அணுக்களின் வேகக் குறைவே கானல்**
**அணுக்களின் சேர்க்கையே நீர்**
**அணுக்களின் உறைதலே நிலம்**
**அணுக்களின் அலைகளே காற்று**
**அணுக்களின் வெப்பமே அக்கினி.**

அணு :—இவ்வணுக்கள் சுமார் 100,000 (நூறாயிரம்) சேர்ந்ததை விஞ்ஞானத் துறையில் இதனை அணு (ATOM) என்பர். ஒவ்வொரு அணுவிலும் துணிவு, நினைப்பு, ஓசை, நெருப்பு, ஆகிய இவை நான்கும் சேர்ந்தே இருக்கின்றன.

## 5/1 ஆகாயம்

அணுக்கள் பரவி நிறைந்து அணுமயமாக இருப்பதே ஆகாயம் அல்லது வெட்டவெளி. இந்த ஆகாயத்திற்கு சொர்க்கலோகம், சூக்கும லோகம், நீர்வாணலோகம் என்று அவரவர் அறிவிற்குத் தக்கவாறு பெயர் வைப்பதுண்டு. ஆகாயமே நீராகிறது.

# 6 நீர்

மகா காரண நெருப்பிலிருந்து பிரிந்துவரும் அணுக்கள் ஆகாயமாகிப் பல கோடி மைலுக்கு இப்பால் வரவர வேகம் தணிந்து அணுக்களின் கூட்டுறவால் கூடியதே நீர்.

## நீரில் நிலம்

நீராயிருந்த அணுக்கள் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து உறைய உறைய நாளடைவில் நிலமாகின்றன. இதில் வெப்பத்தின் விளைவால் கல், பாறை, மலை, இரும்பு, பித்தளை, செம்பு, ஈயம், வெள்ளி, பொன், தங்கம், பச்சை, பவளம், நீலம், முத்து, வைடூரியம், கோமேதகம் முதலியன உற்பத்தியாகின்றன. இவையெல்லாம் சேர்ந்ததே நிலம்.

# 7 பூமி

இப்படி உண்டானவை இந்தப் பூமி ஒன்று மட்டுமல்ல. அங்கங்குள்ள அணுக்கள் ஒன்று சேர்ந்து எத்தனையோ உலகங்களாகவும், நட்சத்திரங்களாகவும் இருந்து வருகின்றன. நாம் வாழ்கின்ற இவ்வுலகிற்குப் பூமி என்று பெயர்.

## 7/1 சந்திரன்

பூமி உண்டாகி வெகு காலத்திற்குப் பின் சந்திரன் உண்டானது. இன்னும் வெகுகாலத்திற்குப்பின் பூமியின் அருகில் மற்றொரு சந்திரனும் உண்டாகலாம். பூமியின் அண்மையில் சந்திரன் இருப்பதால் பூமியின் இழுக்குஞ் சக்திக்கு உட்பட்டுச் சந்திரன் தன்னைத்தானே சுழன்று சுற்றிக் கொண்டும் பூமியையும் சுற்றிக்கொள்கிறது. பூமியும், சந்திரனும் ஒரே அளவினுடைய வேகத்தில் சுழன்று சுற்றிக் கொண்டிருப்பதாலும் சந்திரனின் உருவத்தைவிடப் பூமியின் உருவம் 29¼ மடங்கு அளவில் பெரியதாக இருப்பதாலும், பூமி, சந்திரன் இவ்விரண்டும் சுழன்று சுற்றும் வேகத்தில் சூரிய வெளிச்சத்தைப் பூமி, சந்திரன் தடுத்துக்கொள்ளும் பகுதிக்குத் தக்கவாறு, வளர்பிறை; தேய்பிறை; பௌர்ணமி; அமாவாசை; சந்திர கிரகணம்; சூரிய கிரகணம் ஆகிய இவை உண்டாகின்றன.

## சந்திரனின் செயல்

சந்திரன் மூலமாகச் சூரிய வெளிச்சம் பிரதிபலித்து நமக்கு நிலா வெளிச்சம் கிடைக்கிறது. இதனால் உலகத்

திற்குக் குளிர்ச்சி, அமைதி, பூரிப்பு, உற்சாகம் இவைகள் உண்டாகின்றன.

சந்திரனின் வெளிச்சத்தில் இரவு ஒரு மணி வரையி லிருந்தால் பாதகமில்லை. சந்திரன் வெளிச்சம் மேலே படும் படியாக படுக்கக்கூடாது. அதனால் வாதரோகம், சீதளம் இவைபோன்ற வியாதிகள் உண்டாகும்.

குற்றமற்ற குணமும் குறைசொல்லா நெஞ்சமும்
குருவையடைதற்கும்
அன்பும் ஆதரிப்பும் அவசரமும் அருளை
அடைவதற்கும்
தானம் தருமம் தயாளம் தவம் ஆகிய இவை
தன்னிலை யடைவதற்கும்
திருமணம், திருப்தி, திருப்புகழ் ஆகிய இவை
அறிவின் சிறப்பை யடைதற்குமாகும்.

யாகத்தால் பொருள் விரயம் உண்டாதலும்,
தியாகத்தால் இருப்பதை, கண்டதை இரவுதலும்
சொல்லுதலும்,
யோகத்தால் உடலைத் திடப்படுத்த முயற்சித்தலும்.
ஞானம் விவேகத்தால் எல்லாவற்றையும்
அறிதலுமாகும்.

மதியுடையோரை மதியாத மடையனும்
மதியுடையோரை யண்டியும் அறிவு வளர்ச்சியடையாத
மடையனும்
மதியுடையோரை அண்டியும் அவரை மதிக்காத மடையனும்
மக்களுக்குப் பெருந்துன்பத்தை விளைவிப்பான்.

அன்பும் பண்பும் கூடிய இருதயத்தில் மனமும் மதியும் ஒன்றாய் ஒளிவிடும்.

# 8 காற்று

பூமி உருவத்தோற்றமாகி விட்டதால், ஆகாயமாயுள்ள அணுக்களின் வேக அலைகள் பூமியில் மோதிச் சேருவதும்,

எதிர்நோக்கிச் செல்வதுமாக இருக்கின்றன. அணுக்களின் அலையே காற்று.

பூமிக்கு வெகு உயரத்தில் அணுக்கள் மோதுதலில்லாத தால், அங்கே காற்று இல்லை.

அணுக்களுடைய அலையின் வேகத்திற்குச் சூறுவளி அல்லது சுழற்காற்று என்று பெயர்.

# 9 நெருப்பு

## வான் நீர் நிலம் காற்று நெருப்பு

வான்—நீர்—நிலம்—காற்று இவைகளின் மோதுதலே (யுத்தம்) நெருப்பு.

அண்டம் பூத்து, அருள் பூத்து, அண்டமும் பிண்டமும் நிறைந்த ஒரு மொழியும் பூத்து, ஆணையாகிய இடமும் பூத்து, மதி பூத்து, கம்பமும் காரணமயிர்ப் பாலமும் பூத்து, அருளொடு நிறைந்த கருவும் பூத்து, கனமான மெய்யுணர் வும் பூத்து, கபாலமும் பூத்து, கருணைக்குரிய கண்ணின் கண்மணியாயுள்ள கருமணியின் உள்ளுள்ள மாமணியும் பூத்து, கருத்துக்கிசைந்த சூக்கும காரணமும் பூத்து, குறை யில்லாக் குணங்களும் பூத்து, நிறைவெல்லாம் நிறைவாக நிறைந்ததின் பின் கடமாகிய இடமாய் இணைந்துள்ள பருப் பொருள், ஐம்பெரும் பூத அணுக்களும் பூத்து, அன்போடு, அருளோடு, அலையோடு அலையாய் அருட்பெருஞ்சோதியினுட் புகுந்து பூத்த வடிவாய், அங்கிங்கெனுதபடி எங்குமாய் ஏக மாய் இரண்டறக் கலப்போம். கலப்பீர். கருத்து வடிவாகிய

**நான்—நாம்**

**பசியோ பலயுக நாள் பசி.**
**கண்டு கிடைத்த பொருளோ**
**மிக ருசிகர மேல் சத்துடையது.**
**என்னைச் சூழ்ந்திருந்த இலந்தைமுள்**
**வேலியோ அகல உயரமுள்ளது, அதில்**

யதார்த்தத் துணிவின் அக்கினியை வைத்ததால்
வேலியும் எரிந்து அதிலிருந்த துர்க்குணக்
கொடிய விஷ ஜந்துக்களும் மடிந்தன
பசியும் தீர்ந்தது. வேலியில்லாப் பரவெளியும்
கடந்தேன். அடைந்தேன்.
அடைந்தோனின் பெயரே பரஞ்சோதியாம்.

என் இருதய மலர்களே!
அன்பு கனியட்டும், அறிவு விரியட்டும்,
அருள் நிறையட்டும், கரு திரளட்டும்,
கனல் உருகட்டும், கடம் ஒளி வீசட்டும்,
ஆனந்த சமரசம் அண்ட பிண்ட
சராசரங்களெல்லாம் நிறைந்து அமைதி
பெருகட்டும், பெருகியது, பெருகும்.

**ஆகாயத்தின் செயல் :—** *உருவங்கள் உண்டாவதும் உண்டாகிய உருவம் அழிந்து உருவே இல்லாது மறுபடியும் ஆகாயமாகி விடுவதும் ஆகாயத்தின் செயலாகும்.*

*உலகமக்களே ! உங்களின் நன்மையும் தீமையும் உலகில் எப்போதுமிருக்கும். ஆகையால் நன்மையை மிகுதிப் படுத்த சாதி, மத பேதக் குரோதங்களில்லாது ஒன்றுபட்டிருங்கள்.*

**நீரின் செயல் :—** *மேல் உள்ளதைக் கீழுக்கே கொண்டு வரும். அன்பில் நிரந்தரமாக இருப்பினும் மந்தபுத்தி, மடமை, அடிமைக்கு ஆளாகிவிடாதீர்கள்.*

அன்பில் நீராயிருந்தால் பள்ளம் நிரவியும்
பள்ளம் பள்ளமே.
அன்பில் நெருப்பாயிருங்கள்
அவர் குளிரும் காய்வர். அவர்களின் அழுக்கும்
எரிந்து அறிவும் பிரகாசிக்கும்.

**மண்ணின் செயல் :—**வேற்றுமை ஒற்றுமையோடு பற்பல உருவங்களாகித் தோன்றுவதே மண்ணின் செயலாகும்.

அதுபோன்றே உருவங்களின் செயல் அனுபோகத்தின் வேற்றுமை ஒற்றுமைகளைத் தவிர்த்து அப்பால் ஒரு செயலுமில்லை என்று அறிந்து கொள்ளுங்கள்.

**காற்றின் செயல் :—**ஒரு இடத்துப் பொருளை அசைத்து மறு இடத்திற்கு மாற்றும்.

அதுபோன்று முயற்சியிலும், ஆராய்ச்சியிலும் மிக்குயர்ந்து ஐயப்பாட்டையும் அசைவையும் விட்டொழியுங்கள்.

**நெருப்பின் செயல் :—**கீழ் உள்ள பொருளை மேலே கொண்டு செல்லும்.

அதுபோன்று ஒழுக்கம், பெருந்தன்மையுடன் பற்றற்ற நிலையில் இருந்துகொண்டு பெரும் அறிவாளிகளாக மேல் நோக்கிச் செல்லுங்கள்.

அணுக்களின் சேர்க்கையும் பிரிவும் சேர்ந்ததே உருவ வளர்ச்சி. ஒரு மனிதனின் சுமார் 45 வயது வரை சேர்தல் அணுக்கள் மிகுதியாகவும், பிரிதல் அணுக்கள் குறைவாகவுமிருக்கும். 45 வயதுக்குப்பின் பிரிதல் அணுக்கள் மிகுதியாகவும் சேர்தல் அணுக்கள் குறைவாகவுமிருப்பதால் தளர்ச்சிக்குக் காரணமாகின்றன. அதுபோன்றே பூமியில் உற்பத்தியாகும் உருவங்கள் எல்லாம்.

## 9/1 அணுக்களைக் காணும் உபாயம்

பகல் 12 மணிக்குள் நீர் நிரம்பிய ஏரிக் கரையிலுள்ள மர நிழலில் இருந்துகொண்டு ஏரிக்குமேல் சுமார் ஒரு பனை மர உயரத்தில் பார்த்தால் ரசம் பூசிய கண்ணாடித் துணுக்குகளின் மின்னல் போல ¼ அல்லது ½ அங்குல அகலத்திலும் 2 முதல் 3 அங்குல நீளத்திலும் நெளிந்து போராடும் பல கோடி அணுக்களின் அலையைக் காணலாம்.

மெய்யுணர்வாளர்கள் நிலாக்காலங்களில் நிழலில் இருந்து கொண்டு நிலாவின் வெளிச்சத்தை நோக்கி உணர்வைக் கவனித்தால் சிறிது நேரத்தில் அணுக்கள் பெருங் குழப்பத்துடன் வேப்ப இலையைப் போன்று வந்து வந்து குவிந்து வெளவால் போன்று மாறும். இதனைப் பார்க்கப் பார்க்க மிக இன்பமாக இருக்கும்.

இருட்டுக் காலங்களில் தனியாக இருந்து உணர்வைக் கவனித்தால் அங்குள்ள இருள் கூடை கூடையாகக் கிளம்பிக் கிளம்பி அணுக்களின் வெளிச்சம் செஞ்சுடராய்ப் பின் வெளிச்சமாய்த் தெரிவதும் உண்டு. அப்போது உணர்வு மிகும்.

நமது உடம்பில் படும் காற்று, வெளியிலுள்ள ஒளி, நறுமணம், இவைகளின் ஊற்றுணர்ச்சி உடம்பில் ஏற்படுவது அணுக்களின் மோதுதலாலேயாம்.

## அணுக்களின் பிரிதல்

உலகத்தில் எரியும் நெருப்பு, விளக்குகளின் வெளிச்சம், பட்டுப்போன மரங்கள், வெட்டிய மரங்கள், பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட உலோகங்கள், கட்டி முடிந்த கட்டிடங்கள், உடுக்கும் உடைகள், அணியும் அணிகலங்கள் பாத்திரங்கள், நறுமணப் பொருள்கள் ஆகிய இவைகளிலிருந்து எப்போதும் அணுக்கள் பிரிந்துகொண்டே யிருக்கின்றன.

கடலைக் கடந்தது அலை, அலையைக் கடந்தது ஆவி, ஆவியைக் கடந்தது அணு.

நெருப்பைக் கடந்தது புகை, புகையைக் கடந்தது வெப்பம், வெப்பத்தைக் கடந்தது அணு.

உடலைக் கடந்தது வேர்வை, வேர்வையைக் கடந்தது வாடை, வாடையைக் கடந்தது அணு.

கடலைக் கடந்தது நிலம், நிலத்தைக் கடந்தது மலை, மலையைக் கடந்தது மரம்.

மரத்தைக் கடந்தது சுவை, சுவையைக் கடந்தது அறிவு, அறிவை அறிந்தவன் ஆசான்.

தாரத்தைக் கடந்தது குழந்தை, குழந்தையைக் கடந்தது அன்பு, அன்பைக் கடந்தது அறிவு, அறிவு உள்ளது அனுபவத்தில்.

அணுவைக் கடந்தது நெருப்பு, நெருப்பைக் கடந்தது நாதம், நாதத்தைக் கடந்தது நினைப்பு, நினைப்பாய் உள்ளவன் **நானே, நான்.**

## 9/2 சக்தி

அணுக்கள் கூடிய வேகமே சக்தி. சுமார் நூறாயிரம் அணுக்களின் சேர்க்கையே பூதக் கண்ணாடியில் தெரியும் சிறு கிருமி. அதுபோன்று அனேக மடங்கு சிறு கிருமிகள் சேர்ந்தது ஒரு பெரும் உருவம். அந்த உருவத்தாலேயே சக்தியின் வல்லமை தெரியவரும். அச்சக்தியெல்லாம் அறியக் கூடியது மனிதனின் பகுத்தறியும் சக்தி.

**கடவுள் ஒன்று அதன் சக்தி இரண்டு**

**1. தள்ளும் சக்தி 2. கொள்ளும் சக்தி**

கேள்வி :—எது கடவுள்? எது சக்தி?

பதில் :—உருவாய் இருப்பது கடவுள். சக்தியாயிருப்பது அவ்வுருவத்தின் செயல்.

## 9/3 இந்த நிலம் (பூமி) அழியாது

அணுக்கள் வெட்டவெளியாக இருந்து கானலாகி நீராகி, நிலைஆகியது பூமி.

இந்த நிலமும், இதைவிடப் பெரிய நிலங்களும் எப்போதும் அழியாது. காரணம்: வெப்ப தட்பம் பல பகுதிகளில் பலவிதமானதாலும் சிறிய நட்சத்திரங்கள் அழிந்து, பிரியும் அணுக்கள், பெரிய பூமிகளிலும், பெரிய நட்சத்திரங்களிலும், சேர்ந்து கொள்ளுகின்றமையாலும், பூமி அழியாது.

ஜீவராசிகள் இல்லாதிருக்கின்ற இடத்திற்கு நட்சத்திரம் என்று பெயர். பூகம்பத்தாலும், காற்றாலும் நாம் வாழ்கின்ற இந்தப் பூமியில் சேதம் ஏற்பட்டால், 90-நாட்களுக்குள் சேதப்பட்ட மண் மீண்டும் சேர்ந்து கொள்ளுகின்றன.

## 9/4 அழிந்தது தோன்றல்

கண்களால் பார்க்கப்படும் பெரும் தோப்புகள், கட்டிடங்கள், நிலங்கள் ஆகிய இவை அழிந்து விட்டாலும் சுமார் 2000 வருஷங்களுக்குப் பின். அவை முன்போலவே மற்ற இடங்களில் உற்பத்தியாகிவிடும். அதற்குக் காரணம் அழிந்தது ஒன்று, பார்த்த பதிவு அநேக மனிதர்களின் கருத்தில் இருப்பதேயாகும். மனிதர்கள் இறந்து போனாலும் பார்த்த பொருள்கள் அநேக நூல் வாயிலாக அநேக மக்களின் நினைவில் இருப்பதாலேயே மீண்டும் உற்பத்தியாகின்றன.

## 9/5 சுவை மாறுதல்

நிலை பெயர்ந்து விழும் நட்சத்திரங்கள் அணுக்களாகப் பிரிகின்றன. அவ்வணுக்கள் பூமியில் வந்து சேர்வதில் திடீரென்று புதுச் செடிகளும் வியாதிகளும் உண்டாவதுடன், செய்து வைத்த மருந்துகள் கெடுவதும், சுவையான பொருள்களில் சுவை மாறுபடுதலும் ஏற்படுகின்றன.

## 9/6 இழுப்புச் சக்தி (ஆகர்ஷண சக்தி)

பூமி, சூரியனின் வலது புறமாக நொடிக்கு 1,500 மைல் (per Second) வேகத்தில் சுழலுவதும், நொடிக்கு 1,144 மைல் வேகத்தில் வலது புறமாக விலகுவதும், மணிக்கு 1,132 மைல் வேகத்தில் தலைகீழ்ப் பாகமாக உருண்டு கொள்வதும், பூமி தன் கனப் பகுதியின் ஏற்றத் தாழ்வுக்குத் தக்கவாறு புரளுதலும் கூடி பூமிக்கு இழுப்புச் (ஆகர்ஷண) சக்தியாக இருந்துகொண்டிருக்கிறது.

பூமி, நொடிக்கு 1,500 மைல் வேகத்தில் சுழல்வதாலேயே ஒன்றுக்கொன்று இழுக்கும் சக்தியின் பிடிப்பு

இருக்கிறது. 1,144 மைல் வேகத்தில் விலகுவதாலேயே வருஷம், மாதம், நாள், மணி, நிமிஷம், விநாடிகளாகப் பிரிக்கப்படுகிறது. மணிக்கு 1,132 மைல் வேகத்தில் உருளுவதாலேயே இரவும் பகலும் அமாவாசை வளர்பிறை பௌர்ணமி தேய்பிறை முதலியனவும் கிரகணங்களும் ஏற்படுகின்றன.

பூமி பிறழ்தலால், கதிரவன் வடபாற் போதலும், தென்பாற் போதலும் ஏற்படுகின்றன. இதைவிட வேகமாக இரத்தச் சுழல் நரம்பு நாடிகளில் ஓடிக்கொண்டிருக்கின்றது.

அந்த வேகத்திற்கு ஏதாவது தடையோ, மேலும் அதிக வேகமோ கொடுப்பது தன்னுடைய வியத்தகு ஆற்றலைப் பொறுத்தது.

ஒரு மணிக்கு 1,132 மைல் வேகத்தில் போகக் கூடிய இயந்திரம் சரியாக நேர் மேற்குத் திசை செல்லுமானால் அதில் இருப்பவருக்குப் புறப்பட்ட மணி நேரமே எந்த இடத்திலும் எவ்வூரிலும் இருக்கும்.

# 10 உலகத்தில் உற்பத்தியாகும் உருவங்கள்

**நீர்வாழ்வன, நிற்பன, ஊர்வன, நடப்பன, பறப்பன ஆகும்.**

முதன் முதலில் நத்தை, நண்டு, தவளை, மீன், மற்றுமுள்ள தண்ணீரில் வாழும் உயிரினங்களும்:

இரண்டாவதாக, பூமியில் உண்டாகும் புல், பூண்டு, செடி, கொடி, மரங்களாகிய தாவரங்களும்:

மூன்றாவதாக, புழு, பூச்சி, வண்டு எறும்பு, ஈ, கொசு, பறவைகளும், மற்ற மிருகங்களும் உண்டாயின. இந்த உயிர்ப் பொருள்களுக்கு (ஸ்பரிச புலன்) நாக்கு,மூக்கு,காது, கண், அறிவால் செயலாற்றலின் நிறைவுக்குத் தக்கபடி ஓர் அறிவு, ஈரறிவு, மூவறிவு, நாலறிவு, ஐயறிவு, ஆறறிவுகளாய் வளர்ந்து சிங்கம், தேவாங்கு, பறவை, குரங்குகளும், காட்டு

மனிதனுகவும் மாறி, உடை ஒழுக்கம், அனுபவ அறிவு ஏற்பட்டதும் மனிதனுயினுன்.

## 10/1 ஆண் பெண் :—

முதுகு எலும்பு, கண்கள் ஆகிய இவை உண்டானதன் பின் ஆண், பெண், உண்டாகியது.

சுண்டெலி எலியாவதும், எலி பெருச்சாளியாவதும், பெருச்சாளி பன்றியாவதும், பன்றி காட்டுப் பன்றியாவதும், காட்டுப் பன்றி காண்டாமிருகமாவதும், காண்டாமிருகம் யானையாகவும் மாறி வருகின்றன. இம்முறைப்படி இன்றைக்கும் 1,000-க்கு 2, நேரடியாக மாறிக் கொண்டிருக்கின்றன.

மனிதனுக்கு அநேக அனுபவத்தால் அறிவு ஏற்பட வெகுகாலம் சென்றது. இன்று பிறக்கும் மனிதர்களுக்குப் பயன் படும் அனுபவ அறிவை அவர்களுக்குப் பழக்குவதால் கால தாமதமில்லாமல் அறிவு ஏற்பட்டு விடுகிறது. அது போலவே முதன்முதலில் அநேக உயிரினங்களிலிருந்து மனிதன் உற்பத்தியானுன். மனிதனின் விந்துவால் மனிதப் பெருக்கம் உண்டாகின்றது. அப்படி இருப்பினும்1,000-க்கு 2-பேர்கள் இன்றைக்கும் குரங்கு அல்லது மற்ற உயிரினங்களிலிருந்து மனித உருவம் உண்டாகி வருகின்றது.

**உதாரணம் :—**குரங்கு, காட்டு மனிதன், நரிக் குறவன், இப்படியே படிப்படியாக வருவனவற்றை ஆராய்ந்தால் தெளிவாக அறியலாம்.

## 10/2 கடவுளின் பெரிய அம்சம் 9. சிறிய அம்சம் 5.

பெரிய அம்சம் 9:—(1) நான் என்ற துணிவாகிய கடவுளாகி (2) நினைப்பாகிய வியாபகக் கடவுளாகி, (3) வேகமாகிய நாத (சப்த) கடவுளாகி (4) நெருப்பாகிய ஜோதிக் கடவுளாகி (5) அணுக்களாகிய வெட்டவெளியான ஆகாயக் கடவுளாகி (6) நீராகிய தண்ணீர்க் கடவுளாகி (7) மண்ணுகிய பூமிக்கடவுளாகி (8) காற்ருகிய கடவுளாகி (9) நெருப்பாகிய கடவுளாகி இருக்கின்றன.

எல்லா உருவங்களும் உற்பத்தியாவது 4-ஆவது நெருப்பாலும், உற்பத்தியாகிய உருவங்கள் அழிவது 9-வது நெருப்பாலுமாகும்.

இதில் கைக்கு அகப்படுவது 2:— **தண்ணீர், பூமி.**

பரிசப்புலனுக்கு அகப்படுவது 5 :— **சப்தம், சூரியன், ஆகாயம், காற்று, நெருப்பு.**

நுண்ணறிவுக்கு அகப்படுது 2 :—**துணிவு, நினைவு.**

இவை ஒன்பதில் 6, 7, உருவமாகிய தடிப்பாயுள்ள கடவுளும், மற்ற ஏழிலும் அரூபாரூபமாகிய கடவுளுமாகி இருக்கிறது. இந்த ஒன்பதும் அகன்று மிகப் பெரியதாக இருப்பதால் எப்போதும் அழியாது

**கடவுளின் சிறிய அம்சம் 5** :— (1) நீர் வாழ்வன கடவுளாகி (2) தாவரம் கடவுளாகி (3) ஊர்வன கடவுளாகி (4) நடப்பன கடவுளாகி (5) பறப்பன கடவுளாகி விளங்கும் கடவுளின் அம்சத்தில் மனிதனும் சேர்ந்தவன். இவை ஐந்தும் தோன்றி அழிவதும், அழிந்து தோன்றுவதுமாகும்.

# 11

# உற்பத்தியாகிய உருவங்களுக்கு வாகனமும் உணவும்

அணுக்களே, அணுக்களுக்கு வாகனமும் உணவுமாக இருக்கின்றன.

### வாகனம்

ஆகாய வாகனத்தில் பூமியும், பூமியின் வாகனத்தில் மற்ற எல்லா உருவங்களும் ஒன்றுக்கு ஒன்று வாகனமாகவும், உணவாகவும் இருக்கின்றன.

உலகில் உற்பத்தியாகும் பொருள்கள் உவர்ப்பு, உறைப்பு, கசப்பு, துவர்ப்பு, புளிப்பு, தித்திப்பு, ஆகிய ஆறு

சுவைகள் உடையதாகி, ஈரறிவு உயிர்களிலிருந்து மனிதன் வரைக்கும் உள்ள உயிரினங்களுக்கு வேண்டிய உணவுப் பொருளாய் இருக்கின்றன.

### உணவு

தண்ணீரில் வாழும் உயிர்களுக்கு, தட்ப வெப்பத்தால் தண்ணீரில் ஏற்படும் அழுக்கும் உணவாகின்றது. சிறிய கிருமி, பெரிய கிருமிக்கு உணவாகவும் சிறிய மீன், பெரிய மீனுக்கு உணவாகவும் இருக்கின்றன.

## 11/1 கடவுளே, கடவுளுக்கு உணவாக இருக்கிறார்

தரையில் அல்லது பூமியில் உண்டாகி நின்று வளரும் தாவரங்களுக்கு, நீர், உரம், தட்பவெப்பம் உணவாக இருக்கின்றன.

நகர்ந்து, நடந்து, ஓடி, பறந்து செல்லக்கூடிய உயிர்களுக்குத் தட்பவெப்பத்தோடு புல், பூண்டு, கீரை, கிழங்கு, இலை, பூ, காய், பழம் தானியங்களும் புழு, பூச்சி, விட்டில் மற்றுமுள்ள உயிரினங்களும் உணவாக இருக்கின்றன. இதனில் சில உயிரினங்கள் தாவரங்களில் விளையும் இலை, காய், பழத்தை மட்டும் சாப்பிடுவதும், சில உயிரினங்களின் மாமிசத்தை மட்டும் சாப்பிடுவதும் இன்னும் சில காய், கனி, தானியத்தையும் மாமிசத்தையும் சாப்பிடுவதும், மற்றும் சில காய், கனி, தானியத்தையும், உயிரினங்களின் பால், நெய், மற்றும் சில பகுதிகளை மட்டும் சாப்பிடுவதுமாக, நான்கு வகைப் பிரிவுகளை உடையதாக இருந்து வருகின்றன. இதனில் எதுவும் தாழ்வுடையதன்று; உயர்வுடையதுமன்று.

பயன்படாது போகுமுன், பயன் படுத்திக்கொள்வது உலக இயற்கை.

அழுகிக் கெட்டுப் போகுமுன் ஒரு பழத்தை உண்பதனால் பயன்படுகிறது. பழம் ருசியுடன் சாப்பிடும் மனிதனோடு சேர்ந்து 48-மணி நேரத்தில் அப்பழம் சாப்பிட்ட மனிதன் குருதியில் கலந்து மனிதனாக ஆகின்றது. அதற்

காக வேண்டியே ஒவ்வொரு நேரத்தில், ஓ மனிதனே நீ, 48 மணி நேரத்திற்கு முன் எந்தெந்த உணவைச் சாப்பிட்டாயோ, அவ்வுணவுகளாக இன்று நீ இருக்கிறாய். நேற்று இன்று சாப்பிட்ட உணவு, நாளை மறு நாள், உன் வடிவாக இருக்கப் போகிறது என்று, நான் சொல்வதுண்டு அதுவே உண்மை.

சில நாட்களுக்கு முன் மண்ணாக
மூன்று நாட்களுக்கு முன் புல்லாய் பூடாய் மரமாக
இரண்டு நாட்களுக்கு முன் உயிரினங்களாக
நேற்று மாமிசம், பால் காய்கனி அறுசுவையாக
இன்று சிறிது நேரத்திற்குமுன் தண்ணீர் காற்று ஆகாய [மாக
இப்போது நானாக இருக்கிறேன்.

மண் தான் உணவாக இருக்கிறது. ஆனால், மண்ணை நாம் உண்பதில்லை. மண்ணில் உண்டாகும் விளைபொருள்களைத் தான் உணவாக்கிக்கொள்கிறோம். அதுபோன்றே, அவரவர்களின் உடற்றொழிலுக்குத் தக்கபடி அவரவர்கள் உணவு எடுத்துக் கொள்ளுகிறார்கள்.

ஒரு சவத்தை நரி, நாய், கழுகு உணவாக்கிக் கொள்வதில் அந்த உணவின் அளவு, நல்ல உணவுகள் மீதிப்பட்டு மற்ற உயிரினங்களுக்குப் பயன்படுகிறது: அதுபோன்று எல்லாவற்றையும் ஆராய்ந்தீர்களானால், எல்லாவற்றிலும் உள்ள நன்மை தீமைகளை அறியமுடியும்.

ஒன்றுக்கு ஒன்று ஆதரவாகவும்
ஒன்றுக்கு ஒன்று இரையாகவும்
ஒன்றோடொன்று கலப்பதாகவும்
ஒன்றோடு ஒன்று சேர்ந்து கொள்வதாகவும்
இருப்பதுவே உலக இயல்பு. அனைத்தும்
ஒரே பொருள் ஒரே செயல்

ஓரறிவு தான்யப் பொருள்களை எந்த உயிர்ப்பொருள் சாப்பிடுகிறதோ, அதே உயிர்ப் பொருளாக அந்தத் தானி

யப் பொருள்கள் மாறுகின்றன. அதுபோன்றே செரிக்க (ஜீரணிக்க) வல்லமையுள்ள ஒரு உயிர்ப்பொருள் மற்ற உயிர்ப்பொருள்களை உண்டு தன் உருவமாக மாற்றிக் கொள்கிறது.

ஒரு பலாச் சுளையை ஈரறிவுள்ள புழு சாப்பிடுமாளுல், புழுவாகவும், மனிதன் சாப்பிடுவாளுைல் மனிதனுகவும் மாறுகிறது. கெட்ட மனிதன் உண்ணும் உணவு, கெட்ட அறிவாகவும், நல்ல மனிதன் உண்ணும் உணவு நல்ல அறிவாகவும் உலகில் பரவுகிறது.

அறுசுவையுள்ள மனித உடம்பில் அவன் உண்ட உணவு ஒரு விநாடிக்கு 40 குணங்களாகத் தோன்றுகின்றது. அதில் அறிவுடையோர்கள் நல்லதையும், கெட்டதையும் உணரும்போது, அவ்வுணவு நல்லறிவாகிக் கொள்ளுகிறது.

# 12 முயற்சி

எவ்விதத் துன்பமுமில்லாது எல்லாவகை நலங்களும் கிடைக்கும்போது உணவு தேடி பசிதீர்த்துக்கொள்வதே உடம்பின் முயற்சியாக இருந்து வந்தது. பசிக்கு வேண்டிய உணவு தேடிக்கிடைக்காத குறைபாட்டால் ஏக்கம், சிந்தனை, பெருமுயற்சி மிகுந்து வந்தது. அதனுல் உடம்பில் உள்ள கொழுப்புக் குறைந்து நாடிகள் நுட்பம் அடைய உடம்பிற்கு வெளியில் உள்ள வெப்ப தட்ப நிலையை அறிய முடிந்தது. அதன்பின் குளிரிலிருந்து உடம்பை மறைத்தற்கு மர வுரிகளால், இலைகளால், பட்டாடைகளால், உடைகள் ஏற்பட்டன. வெகு காலத்திற்குப்பின் பிறர் கண்களுக்காக வும், மானத்திற்காகவும் உடை உடுத்தியபின் சிறு சிந்தனையால் மெது மெதுவாக விவசாயம் ஏற்பட்டது.

உடலுக்கு நல்லுணர்ச்சியும், நலமும், உணவும், முயற்சியும் வேண்டும்.

காதுக்கு இனிய குரலும், சொல்லும், இன்னிசையும்
வேண்டும்.

கண்ணுக்கு அழகும், குளிர்ச்சியும் வேண்டும்.

மூளைக்கு எழுச்சியும், ஆராய்ச்சியும், நீதியும் வேண்டும்.

## 12/1 உலகில் முயற்சியாளர் நால்வகைப்படுவர்

முயற்சியாளர்கள், தொழிலாளர்கள், செயலாளர்கள், கருமார்கள் என்னும் வார்த்தைகள் ஒரே முயற்சியாளர் களையே குறிக்கும்.

**உற்பத்தியாளர்கள் :—**உணவுப் பொருள்களை உற்பத்தி செய்தும் மரம், செடி, கொடிகளை வளர்த்தும் பெருக்கு கிறவர்களாகிய விவசாயிகளும் பானை, சட்டி, துடுப்பு, அகப்பை, கலப்பை, ஆயுதங்கள், வாகனங்கள், பேனாக்கள், உடைகள் செய்து கொடுப்போர்களும் உற்பத்தியாளர்கள் ஆவார்கள்.

**நிர்வாகிகள் :—**பறை சாற்றுகிறவர்கள், சேவகர்கள், கர்ணம், மணியம், அரசாங்க அலுவலாளர்கள், பெருநிலக் கிழவர்கள், அமைச்சர்கள், அரசர், மன்னர் மன்னர்கள் ஆகிய இவர்கள் நிர்வாகிகள் ஆவார்கள்.

**ஆலோசகர்கள் :—**வைத்தியர்கள், ஆராய்ச்சியாளர்கள் ஆலோசகர்கள் ஆவார்கள்.

**குருக்கள் :—**மேற்கண்ட மூன்றிலும் ஏற்படும் நன்மை தீமைகளை ஆராய்ந்து துன்பத்தைப் போக்கக்கூடிய வழி களைக்கண்டு பிடித்திருப்பதைச் சீர்திருத்தத்துடன் கற்பிக் கக்கூடியவர்கள், அறிவுறுத்துகிறவர்கள், உபாத்தியாயர்கள் ஆகிய இவர்கள் குருக்கள் ஆவார்கள்.

இந்நான்கு முயற்சியாளர்களும் ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பதால் உலக நிர்வாகம் செம்மையாக நடந்து வருகிறது.

தலை, கால், புலன், வயிறு ஆகிய அவயவங் கள் சரியாக இருந்தால் உடல் எப்படி நலமாக இருக்கின் றதோ அதுபோல் மேற்கண்ட 4 முயற்சியாளர்களும்

அவரவர்களின் முயற்சிகளைச்சரிவர நடத்தினார்களானால் உலகில் துன்பம் இல்லாது எல்லோரும் நல்லவிதமாக வாழ முடியும்.

அரூபமே அரூபா ரூபமாகி, அரூபா ரூபமே ரூபமாகி, ரூபத்தின் செயலே தொழில்களாகி, தொழில்களின் பெயர்களே சாதிகளாகி, தொழில்களின் அனுபவங்களே காரணங்களாகி, காரணத்தின் விளைவே, சட்ட திட்ட விதிகளாகி, அதை விரும்பிச் செல்லும் வழிகளே மார்க்கங்களாகி, செயலின் கூர்மையின் உயர்வே சூட்சுமமாகி, **அவ்வொவ்வொன்றின்** அனுபவமே அறிவாகி, அவ்வறிவின் நுண்மையான விளக்க உயர்வே பகுத்தறிவாகிய ஞானமாகி இருக்கின்றது.

## விவசாயம்

விவசாயத்திற்கு மழை, பருவம், வெப்ப தட்பம், நல்ல பூமி, உரம், வித்து இவையே வேண்டியவை. இவை சரியாக இருந்தால் விவசாயம் நன்றாக இருக்கும், நாடு செழிக்கும்.

**விவசாயம் குறைந்ததற்குக் காரணங்கள்:**—மனிதப் பெருக்கமில்லாத காலத்தில் விளைபொருள்கள் அதிகமாகவே இருந்தன. பின் மனிதப்பெருக்கம் அதிகமாகி, உணவை வேகவைத்துச் சாப்பிடக்கூடிய தன்மை அதிகரித்ததாலும்; வேகமாகப் போகும் வாகனங்களுக்கும், இயந்திரங்களுக்கும், நீர் ஆவிக்காக வேண்டிய நெருப்புக்கும், உணவு வேக வைக்கும் நெருப்புக்கும் வேண்டிய விறகுகளுக்காக மலை, காடுகளிலும், வீதி சாலைகளிலும், உள்ள மரங்களை வெட்டி விடுவதாலும்; விவசாயங்கள் செய்யுமிடங்களையும், மரம் செடிகள் உண்டாகுமிடங்களையும் அழித்து விட்டுத் தொழிற்சாலைகளை உண்டாக்குவதாலும்; மழையை உண்டாக்கக்கூடிய மரங்களை அதிகமாக வெட்டி விடுவதாலுமே சில நாடுகளில் விவசாயங்கள் குறைந்து விடுகின்றன.

அளவுக்கு மேல் மரங்களை வெட்டவும் கூடாது. தரிசு நிலங்களிலும், மரஞ் செடிகள் இல்லாத மேடுகளிலும், வீடுகள், தொழிற்சாலைகள் கட்டுவதே மேன்மையாகும்.

பறக்கும் பறவை தன் கால்களைக் கெடுத்துக் கொள்ளாதது போல், பணத்தாலும், படிப்பாலும், தேவையற்ற தொழில்களாலும் எல்லோருக்கும் தேவையுள்ள விவசாயத்தை எக்காரணத்தாலும் எக்காலத்தும் கெடுத்துக் கொள்ளாதீர்கள்.

விவசாயமும் விவேகமும், மிகுதியாய் இருந்தால் சாதி, மத பேதங்களால் குரோதப் பிரிவினைச் சண்டைகள் எந் நாட்டிலும் எப்போதும் ஏற்படாது.

உலகத்தில் தாவரங்கள் உண்டானதிலிருந்து, அதை உண்டு செரிக்கக்கூடிய உயிரினங்கள் உண்டாக வெகுகாலம் சென்றது. அதிலிருந்து, தாவரத்திலுள்ள உணவையும், மற்ற உயிரினங்களையும் உண்டு செரிக்கக் கூடிய மனிதன் உண்டாகி மனிதனில் அறிவு உண்டாக வெகுகாலம் சென்றது. இன்று பெருகிக் கொண்டிருக்கும் மனிதர்களுக்கு வேண்டிய தாவரமும் மற்ற உயிரினங்களும் குறைந்திருப்பது தான் எல்லா நாடுகளிலுமுள்ள குழப்பத்திற்குக் காரணம். ஆகையால் உலகில் விளைவாகும் உணவுப் பொருளை உண்பதற்குரிய மக்கள் தொகைக்கு மேல் பிறக்க விடாக் (கருவாகுமுன்) கருத்தடை செய்ய எல்லா நாட்டு அரசியலிலும் சட்டம் இயற்றல் இன்றியமையாதது.

விவசாயக் கடவுள் இல்லாது போனால், விவேக, நிர்வாகக் கடவுளில்லை. விவசாயிகளுக்கு வேண்டிய நலங்களைச் செய்வது இன்றியமையாதது.

## மனிதப் பெருக்காலும், பொருளாதாரத்தாலும், அறிவிற் குறையுள்ள, அரசியல் நிர்வாகங்களாலும் ஏற்பட்ட நன்மையும், தீமையும்.

உணவுப்பொருள் சேகரிக்கும் திறமைக்குத் தக்கவாறு செல்வநிலையும், வறுமையும் ஏற்படுகின்றன.

சேகரித்ததைப் பாதுகாப்பதற்கும், பிறர் சேகரித்ததைப் பறிப்பதற்கும் ஆயுதமும், பலமும் ஏற்பட்டன.

சேகரித்ததை அபகரிக்கும் தன்மையோர் மிகுந்த போது சட்ட திட்டங்களும், பாதுகாப்பாளர்களும் அரசியல் நிர்வாகங்களும் ஏற்பட்டன.

வேளாண்மை மிகுதியாகவுள்ள நாடு தன்னுடைய விளைவுகளையும், வாகனங்களையும், அறிவையும், மற்றைய குறைவாயுள்ள நாடுகளுக்குப் பகிர்ந்து கொடுத்தல் வேண்டும். விவசாயமில்லாத நாட்டினர்கள், விவசாயப் பெருக்கத்திற்கு வேண்டிய கருவிகள் உற்பத்திசெய்து கொடுப்பதுமன்றி உலக மக்களுக்கு வேண்டிய இதர முக்கியமான பொருள்களையும் உற்பத்திசெய்து தர வேண்டும்.

உலகத்தில், விளைவாகும் உணவுப்பொருள்களின் அளவுக்கு வேண்டிய மக்கள் தொகைக்கு அதிகமாய்ப் பிறப்பதால் யாரும் சமாதானமாய் இருக்க இடமில்லை. வேண்டிய மக்கள் தொகைக்குமேல் பிறக்கவிடாமல் தடுக்க, எல்லா நாடுகளிலும் கருத்தடை இருக்கவேண்டும். கருத்தடை ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளில் இல்லாதிருந்தாலும், போர் என்றைக்கும் நிகழ்ந்தே தீரும்.

முதலில் ஆதி உற்பத்தியாகும்போது எவ்வித எண்ணத்துடனும் உற்பத்தியாகியதில்லை. தன் இயற்கை இயல்பு, ஆதி, நாதமாக எழுந்து, அக்னியாகப் பெருகி, அணுக்களாய், எங்கும் நிறைந்து அவ்வணுக்களின் சேர்க்கையால், ஆங்காங்கு உலகங்களாகி, அவ்வுலகங்களில் அநேக உருவங்களாகி, அவ்வுருவங்களில் அறிவு படிப்படியாய் உயர்ந்து, மனித உருவாய் முடிவடைந்திருக்கிறது.

ஒவ்வொரு உலகினும், ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள மக்களே தோன்றி, அவர்களே அவ்வுலகங்களில் வரப்போக உரிமை உள்ளவர்களாக இருந்து, புது மனிதர்கள், எப்போதும் உற்பத்தியாகாமலிருந்தால், எல்லா நிர்வாகமும், அந்தந்த அளவுக்கு யாதொரு குறைவும் இல்லாமல் நடந்தே வந்திருக்கும். அப்படியில்லாததால், உலகத்தில் உண்டாகும் உருவங்களில் உயிர், அறிவு, ஆத்ம சக்தி நிரம்

பப் பெற்று வல்லமை மிகுந்து, நாளுக்கு நாள் மக்கட் பெருக்கம் பெருகுவதால், எல்லா மக்களுக்கும் வேண்டிய உணவுப் பொருள்கள் போதாமலிருக்கின்றன. போக்கு, வரத்து வாகனங்கள் இல்லாது இருந்தபோது வேளாண்மை யுள்ள நாட்டார்கள், உணவுக்கு யாதொரு குறைவுமில்லா மல் நலத்துடன் இருந்தும், வேளாண்மை இல்லாத நாட்டார் கள், உணவுக்கு மிகத்துன்பங்கள் அனுபவித்தும் வந்தார் கள். போக்கு வரத்து வாகனமும், ஆயுத பலமும் ஏற்பட்ட பின் அவற்ருல் மிகுதியாகவுள்ள விளைபொருள், அவை யில்லா எல்லா நாட்டிற்கும், திரவி வர ஏதுவாயின. அப்படி இருப்பினும் உணவு பற்ருக்குறையாய், நெருக்கடி இருப்ப தற்குக் காரணம், உலகத்தில் வேளாண்மை குறைவாய் இருப்பதும், மனிதப் பெருக்கம் மிகுதியாய் இருப்பதே.

மேலும், மிக வருவாயுள்ளவராயிருப்பினும் அவர்கள் உட்கொள்ளும் உணவு, மற்ற மக்கள், உண்ணும் உணவை விட மிகச் சுருக்கமே. இவர்கள் இருக்க இடவசதி, உடை, போக்குவரவு, மற்ற நலங்களுக்கு வேண்டிய வசதிகள் செய்துகொள்வதிலும், தேவையற்ற ஆடம்பரச் செய்கை களில் செலவழிக்கும் தொகைகளாலும், பணக்காரர், அரசி யல் அலுவலர் என்ற பேர் தனித்த ஒருவரைப்பற்றியிருந் தாலும் அந்தந்த நிர்வாகத்திலுள்ள, எல்லாத் தொழிலாளி களுக்கும், அத்தொகை திரவியே வருகின்றன. அப்படி திரவி யும் வறுமை உலகில் இருப்பதற்குக் காரணம், விளைவாகும் பொருள், குறைவாகவும் அதை அனுபவிக்கும் மனிதர்கள் மிகுதியாகவும் பிறந்திருப்பதே.

ஒரு தென்னைமரம் இருக்கவேண்டிய பத்தடி சதுர நிலத்தில், எட்டுத் தென்னைமரங்கள் முளைப்பதால் கீழ் வேர் களின் மோதுதல் போல், மதச் சண்டைகளும், மேல் மட் டைகளின் மோதுதல்போல், நாட்டுப் பிரிவினைக் கட்சிச் சண்டைகளும் ஏற்படுகின்றன. எந்நாட்டு அரசாங்கமும், மிகுதியாகப் பிள்ளைகள் பிறக்க விடாமல் முயற்சி எடுத்துக் கொண்டால் என்றைக்கும் மத, பேத, கட்சிச்சண்டைகள் இல்லாது மகிழ்வாக வாழ்வீர்கள்.

ஒருவருக்கொருவர் செய்து கொள்ளும் சிறு பாகப்பிரி விணையால் ஏற்படும் மனவேறுபாடு, அவர்கள் உயிருள்ள வரை இருப்பதுபோன்று, நாட்டுப் பிரிவிணையின் சிக்கல் உல கிலுள்ளவரை மக்களிடையே குழப்பத்தை மிகுதிப் படுத் திக்கொண்டே இருக்கும்.

பூமி நாளுக்கு நாள் மாறுபட்டுப் பெரியதாகிறது. அதில் உணவுக்கு வேண்டிய தாவரப் பொருள்கள், விளைய வெகுகாலம் செல்லுகின்றன. பூமியில் ஒரு மனிதனுக்கு வேண்டிய உணவு விளைவாகுமுன் பத்துப் பேர்கள் பிறந்து விடுகின்றனர். அதன் காரணத்தால் 100-க்கு 20-பேர்கள் பசி இல்லாது உண்டும், 80-பேர்கள் எளியவர்களாகி உண வின்றியும், உலகில் துன்புறுகின்றார்கள்.

கரு உருவாகுமுன் தடுப்பது குற்றமேயாகாது. கரு உருவாகியபின் அதற்கு வேண்டிய நலங்கள் இல்லாது படும் துன்பமோ பலரையும் பாதிக்கின்றது.

கால், கை, வயிறு, கண், காது அவயவங்கள் நல்லதாக இருந்திட்ட போதிலும், மூளையும் விவேகமும் நன்றாக இருந் தால்தான் துன்பமில்லா இன்ப வாழ்வு வாழ முடியும். அது போன்றே விஞ்ஞானம், ஆராய்ச்சி, ஆயுதபலம், வாகனங்க ளும், வேதம் வேதாந்த யோக நூல், யோகங்கள் ஆகிய இவை மிகுந்திருப்பினும் உணவுக்கு வேண்டிய அளவுக்கு மேல் அதிக விவசாயம் எல்லா நாட்டிலும் மிகுந்து இருந் தால்தான் எல்லா நாட்டு மக்களும் குழப்பமில்லாமலிருப்பர். நல்லாட்சியும் நிலவும்.

## உயிர் நிலைக்கு ஆதரவு

பிறந்த நாள் முதல் சாகும் நாள்வரை சுவாசித்தலும், உணவு உண்ணுதலும், சிறுநீர், மலம் கழித்தலும் உயிர் நிலை யாகும். தூக்கமும், பருவ வயதில் போகமும் இன்றியமை யாதனவாகும். இவை ஆறையும் மனிதரின் கட்டு பாடில்லா உயிரினங்கள் அந்தந்தக் காலங்களில் எவ்வித தடைகளு

*மில்லாது அனுபவிக்கிறபடியால் அவைகளுக்குத் துன்பமு மில்லை, நோயுமில்லை.*

*இவை ஆறும் சரியாக, சரியான காலங்களில் மனிதர் கள் அனுபவிக்க முடியாத குறையால் ஏற்பட்டதே எல்லா வகைத் தீங்குகளும்.*

## 12/2 ஆராய்ச்சியும், அரசியலும்

*ஆயுத பலம் உள்ள நாட்டார்களே! நீங்கள், நான் சொல் லும் திட்டங்களை உடனே அமுலுக்குக் கொண்டு வருவதில் 10 வருஷத்திற்குள் உலக முழுவதும் நலம் அடைந்து எல் லோரும் நலமாய் வாழ முடியும்.*

தன்னிலை அறிந்த அறிவின்
விளக்கத்தால் சொல்லுகிறேன்
ஞானமும் அரசியலும் ஒன்றுபட்ட
அன்றே உலக சமாதானம்.
பசிப் பிணியையும் ஒழித்து
பணத்துக்குள்ள மரியாதையையும் ஒழித்து
உருவ வழி பாடுகளையும் ஒழித்து
உலகிலுள்ள ஜாதி மத வேத போத பேதங்களை
எந்நாட்டில் விளைந்த விளைவானாலும் [யும் ஒழித்து
அது எல்லா நாட்டிற்கும் பொதுவாய்
நிர்வகிக்கும் நிர்வாகமுள்ள
அன்றே உலக சமாதானம்.

---

# 13 உலக அமைதிக்கு வேண்டிய திட்டம் *

*வெட்ட வெளியாயுள்ள அணுமய சக்தியே உருவமாகி அவ்வுரு அழிகின்றவரை உலக அனுபவங்கள் இருக்கும்.*

---

* Sent to the delegates of the Comman Wealth Foreign Ministers Conference at Colombo, 10-1-'50

உருவாகுமுன்னும், அவ்வுரு அழிந்த பின்னும் வெட்ட வெளியே தவிர்த்து வேறொன்றில்லை.

## உள்ளது சிறத்தல் (பரிணாமம்)

உலகத்தில் தாவரங்கள் உண்டானதிலிருந்து அதைச் சிரணிக்கக்கூடிய ஜீவராசிகள் உண்டாக வெகுகாலம் சென்றது. அதிலிருந்து தாவரத்தில் உள்ள உணவையும் மற்ற உயிரினங்களையும் சிரணிக்கக்கூடிய மனிதன் உண்டாகி, மனிதனில் அறிவு உண்டாக நெடுங்காலம் சென்றது. இன்று பெருகிக்கொண்டிருக்கும் மக்கள் உணவிற்கு வேண்டிய தாவரமும், மற்ற உயிரினங்களும் குறைந்திருப்பதுதான் எல்லா நாடுகளிலுமுள்ள குழப்பத்திற்குக் காரணம். ஆகையால் உலகில் விளைவாகும் உணவுப் பொருளின் அளவுக்கு வேண்டிய, மக்கள் தொகைக்குமேல் பிறக்க விடாக் (கருவாகுமுன்) கருத்தடை எல்லா நாட்டரசியலிலும் இருக்க வேண்டியது இன்றியமையாதது.

ஒழுக்கத்திலும் விவேகத்திலும் உயர்ந்திருப்பதுவே மனிதனின் உயர் நிலையாகும்.

அறிவிலும் கூர்மையான ஆயுதத்திலும் உயர்ந்திருந்தாலே நீதியான அரசாட்சி நிலைத்திருக்கும்.

## கருத்தடை

விவசாயிகளைத் தவிர மற்றத் தொழில்களில் உள்ளவர்களுக்கு இரண்டு குழந்தைகளுக்கு மேல் பிறக்க விடாக் கர்ப்பத்தடை எல்லா நாட்டிலும் சட்ட மூலமாக ஏற்படுத்த வேண்டும். ஒரு நாட்டில் வற்புறுத்தி மற்றொரு நாட்டில் வற்புறுத்தாமல் விட்டால் போருக்குக் காரணமாகவே முடியும்.

## மரியாதை இல்லாத பொருள்

பொன், வைரம், இரத்தினக் கற்கள், முத்து இவை போன்ற ஆடம்பரப் பொருள்களுக்கு உள்ள மதிப்பு அறவே இருக்கக்கூடாது. இவைகளின் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களை உழவு, நெசவு, மற்றைப் பயனுள்ள தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும்.

உலக அறிவாளிகளே! பசி, பணம், புகழ் இம்மூன்றுமே உலகில் அழுந்தியறியும் அறிவு பெருகியதற்கு மூலகாரணமாகும். பெருகிய அறிவைக் கெடுப்பதற்கும், அறிவே பெருகவிடாது தடை செய்வதற்கும் காரணமாக இருப்பது இப்பசி, பணம் புகழேயாகும். ஆகையால் பசிக்கு வேண்டிய உணவைப் பெருதற்குத் தொழிலைத் தந்தும் பணம் புகழ் இவைகளை ஒழித்தும், நிர்வாகம் நடத்த முற்பட்டாலே எல்லோரும் நலமாயும் அமைதியாயும் வாழமுடியும்.

## போதனை

உழவின் பயனுள்ள தன்மை, தொழிலின் சிறப்பு, நலமான வாழ்க்கை, நல்ல நடத்தை, பண்பாடு, இருக்கும் உணவுப் பொருளையும், அறிந்த அனுபோகங்களையும் ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ளும் முறையின் நன்மைகள், ஆராய்ச்சி, பொது அறிவு ஆகிய இவைகளைப் பற்றிப் பொது மக்களுக்கு அறிவைப் போதித்து வளர்க்கவேண்டும். மதத்தைப் பற்றிக் கற்பித்தல் அறவே கூடாது.

மக்களுக்குத் தேவையில்லாத ஒழுக்கத்தை கெடுக்கும் பல தொழில்களை நிறுத்தி, அத்திய தொழில்களில் ஈடுபட்டிருப்போரை, இன்றியமையாத விவசாயத்திலும் இதர தேவையுள்ள தொழில்களிலும் ஈடுபடுத்தி, இந்தத் தொழில்களைப் பெருக்கவேண்டும். இத்துடன் மக்களது மதியை மயக்கி சூழ்ச்சியால் தம் ஊதியத்தை உழைப்பின்றிப் பெறுவோர் தோன்ருது இருக்கவும், பொது மக்களுக்குத் தம்மைப் பற்றியும், உண்மையைத் தெரிந்து கொள்ளும் விவேகம், ஆராய்ச்சியைப் பற்றியும் அறிவு ஊட்டுதல் வேண்டும்.

## நாடுகளின் அன்பு

ஒரு தேசத்தின் அரசியலைப் பற்றியும், ஆட்சி முறையைப் பற்றியும் மதிக்கப்படும் அரசியல் மதிப்பு, அந்தந்தத் தேசத்தின் உணவு உற்பத்தியையும் தொழில் வளத்தையும் பொறுத்ததாக இருக்கவேண்டும். உணவுப் பொருள்களையும் கைத்தொழிலால் வரும் பொருள்களையும், அப்பொருள்

குறைவுபட்ட நாட்டிற்கு, அப்பொருள் குறைவுபடா நாடு தொழில் வகையில் கொடுத்து உதவி செய்யவேண்டும்.

## செல்வம்

ஒரு நாட்டின் அரசியல் அதனுடைய செல்வத்தைப் பொறுத்த வரையில் பொருள் சேமிப்பு நிலையத்தில் நாணய நோட்டுகளை வைத்துக்கொண்டு உணவுப் பொருள்களுக்கும் உழைப்புக்கும் கொடுத்தற்குப் பயன் படுத்தவேண்டும். உணவுப் பொருள், உழைப்பு, மற்ற உற்பத்திச் சக்திக்கு உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ கொள்ளவும் கொடுக்கவும் பண்ட மாற்றத்திற்கும் தொழிலாளிகளை அனுப்புவதற்கும் உடன்படிக்கைகளைத் தவிர தங்கம், வெள்ளி போன்ற உலோக நாணயங்கள் மூலம் செலாவணி இருக்கக்கூடாது.

## போர்க் கருவிகள்

உள்நாட்டின் அமைதியைக் காத்துக்கொள்ளவோ, ஏற்படும் குழப்பங்களைத் தடுத்து அமைதியை ஏற்படுத்திக் கொள்ளவோ, இப்போது போதுமான போர்க் கருவிகள் ஒவ்வொரு நாட்டிலும் இருக்கிறபடியால் எந்த நாடும் போர்க் கருவிகளை இனிமேல் பெருக்கிக் கொள்ளாதிருக்கவேண்டும்.

**உழவுத்தொழில் பெருக வேண்டும்; அறிவு வளர வேண்டும்.**
**பெருகும்! வளரும்!! மகிழ்ச்சி!!!**

## கருத்தடை மருந்து

உலகில் கருத்தடையிருந்து மக்கள் குறைவாகவும், உணவுப்பொருள் மிகுதியாகவும் இருப்பின் எவ்வகை அரசியலும் உலகில் இருக்கலாம்.

**கருத்தடைக்கு எருக்கன் விதையை நன்றாக வெயிலில் உலர்த்தித் தூளாக்கி நாளொன்றுக்கு ஒரு வராகனெடை அளவு பெண்களுக்கு மாத விடாயாகிய மறுநாளிலிருந்து 3 நாட்களுக்கு 3 வராகனெடை காலையில் கொடுத்தால் குழந்தை உற்பத்தியாகாது.**

இந்த மருந்து பல நோய்களுக்கும் உதவுகிறது. இதனால் எவ்விதத் தீங்குகளும் உடலுக்கு இல்லை. 10 நாளைக்கு இச்சா பத்தியம். மாதவிடாயாகாத பெண்களுக்குக் கொடுத்தல் கூடாது.

மேற்கண்டபடி அதே அளவு நார் எடுக்கும் புளிச்சக் கீரையின் வித்தையும் கொடுக்கலாம். இதைப் பனைவெல்லத்தில் அரைத்துக் கொடுத்திடுக. (இந்த வித்துக்குக் காறிக்கை வித்து என்றும் பெயர்) 100-க்கு 40 பெயர்களுக்குக் குழந்தைகள் உற்பத்தியாகாது. இது நடைமுறையில் பார்த்ததாகும்.

### படை பலம்

படைச் செலவுக்கும், உணவுக்கும் படையினரே உணவுகளையும், பொருள்களையும் உண்டாக்கிக் கொள்ள வேண்டும். பொது மக்கள் அளவோடு நுகரும் பொருள்களையும் இடங்களையும் அபகரிக்காது, அவர்கள் இடவசதிக்கும் உணவுக்கும் துன்புறும்போது உதவி செய்ய வேண்டியது படையினரின் கடமையில் முக்கிய கடமையாக இருக்கவேண்டும்.

---

## 14 மரியாதை

பெரும்பாலான மக்கட்கு உடல் நலத்தைக் கொடுக்கக் கூடிய பொருளுக்கும், இடத்திற்கும், நலத்தோடு வாழும் வகையினைத் தெரிவிப்போருக்கும், மிகுதியான மக்கள் செய்யக்கூடிய தொழிலைக் கண்டுபிடித்துக் கொடுப்போருக்கும், மக்களுடைய ஐயங்களை நீக்கி மனிதக் கடமையைக் கற்பித்தவருக்கும், தாமாகவே மரியாதை கொடுத்துச் சிறப்பிப்பது வழக்கம். அதுபோலவே சமீன்களில் அனுபவப் பட்டவர்கள் மிகுதியான பூமியைச் சீர்படுத்தி, வேளாண்மை மிகுதியாகச் செய்து அதில் வரும் பொருள்களைத் தம்முடன் இருக்கும் மக்களுக்குச் சரியாகப் பங்கிட்டுக் கொடுப்பதுடன், குடும்ப வழிபாடுகளில் மிக உயர்வான ஒழுக்க நீதியுடன் தம்மையும் தம்மைச் சார்ந்த மக்களையும், நீதியுடன்

நிர்வாகம் செய்தவர்களை சமீன்தார் என்றும், பணத்திற்கு மரியாதை வந்ததிலிருந்து பொருளாதாரத்தை வைத்து, நீதியுடன் நிர்வாகம் நடத்தியவர்களை, அவர்களின் நிலைமைக்குத் தக்கவாறு லக்ஷப் பிரபு, கோடீசுவரன், மன்னன், மன்னர் மன்னன் என்று அவரவர்களின் நன்னடத்தையை மூல காரணமாகவைத்து மரியாதையுடன் அழைத்தனர்.

முற்காலங்களில் மாகாணம் ஒன்றில் 2, 3, 4 சமீன் தார்களும், பிரபுக்களும், அறிஞர்களுமிருந்தபடியால் அப் போது அந்தந்தக் கிராமங்களின் நிர்வாகங்கள் ஒழுங்காகவே நடந்து வந்தன. நாளடைவில் மிகுதியான சமீன்தார்களும், பிரபுக்களும், படிப்பாளிகளும் பெருகப் பெருக மூலாதார மாகிய ஒழுக்கங்கள் கெட்டு விட்டன. மக்கள் அவர்களுக் குக் கொடுத்த மரியாதையை ஒழிக்க வேண்டியதற்காகத் தமக்குப் பயன்படும் தொழில்களையும் விட்டுவிட்டு, இவர்களு டைய பதவிகளைக் கண்டித்து ஆரவாரஞ் செய்யத் தொடங்கி விட்டார்கள். இதற்குக் காரணம் நன்னடத்தையும், ஒழுக் கமும் தவறி விட்டதேயாகும். சுமார் 7500 ஆண்டுகளாக இப்படி நடந்து வந்தன. இதன் காரணத்தால் மூன்றுவித ஆட்சிகள் நடைமுறையில் நடந்து வந்துள்ளன. அவை சர் வாதிகார ஆட்சி, முடியாட்சி, குடியாட்சி என்பன. இந்த மூன்றும் நிலைக்காமல் அழிவதற்கு இம்மூன்றிலும் குறை பாடுகள் மிகுதியாக இருப்பதே காரணமாகும்.

தனவந்தர்களிலிருந்து சர்வாதிகாரிகளாக வந்தவர்க ளுக்கு, உலக ஏழை மக்களின் வாழ்வில் உண்டாகும் பல விதமான துன்பங்கள் தெரியாதிருக்கும். ஆனால் பெரும் வறுமையிலிருந்து அதன் துன்பங்களையெல்லாம் அனுப வித்து மேல் பதவிக்கு வந்த சர்வாதிகாரிகளும், அவரைப் போன்று வறுமையில் வளர்ந்த ஞானிகளும், மெய்க்காட்சி யாளர்களும், அரசியல் துறையிலுள்ளவர்களும் தாம்தாம் அனுபவித்து வந்த துன்பங்கள் அவரவர்கள் நினைவில் இல் லாமலில்லை. தம் உயர்பதவியில் தமக்குப் பணமும், புகழும், இனப்பெருக்கமும் கிடைத்தபோது தாம் முன்பு பட்ட

துன்பங்களையெல்லாம் நினையாது, அப்பதவி ஆசையினால் அப்பதவி நிலைப்பதற்கான முயற்சிகளிலேயே செயலாற்ற முற்பட்டு விட்டனர். மக்கள்படும் துன்பங்களையெல்லாம் நீக்கி அவர்களை மேல் நிலைக்குக் கொண்டுவரச் சட்டதிட்டம் வகுத்து அதனை நடைமுறைக்குக் கொண்டுவரக் காலம் வாய்த்திருந்தும், சீர்திருத்தம் செய்யும் எண்ணம் சிறிதும் அவர்களுக்கு இருப்பதேயில்லை ஏழைகளாய் இருந்து மேல் பதவிக்கு வந்த வாய்ப்பை, மக்களின் வறுமைத் துன்பங்களை நீக்கப் பயன்படுத்தவேண்டும். இன்றுவரை உலகத்தில் தோன்றிய மதங்களும், அரசியல் ஆட்சியும் நல்ல பலனைத் தராமலே இருந்துவிட்டன. தம்தம் இன ஒற்றுமையின் உயர்வைக்காட்ட பேராரவாரஞ் செய்யும் மதத் தலைவர்களும் தம் தம் இனத்திலே உள்ள ஏழை மக்களின் துன்பங்களை நீக்க இதுவரை செய்ததொன்றுமில்லை.

பொந்தில் வாழும் புழு, பூச்சி, வண்டு, எறும்பு, நண்டு, எலி, பாம்புக்கும் உள்ள காற்று இடவசதிகூட, இந்த எளிய மக்களுக்கு இல்லையே.

வரும் வருமானமோ ஒருவர் செலவுக்கே காணாது, ஆனால் அவருக்குப் பிறந்திருக்கும் குழந்தைகளோ ஏழு, சுற்றியுள்ள ஏழை இன பந்துக்களின் மேலுள்ள இரக்கச் சிந்தனையோ வேறு. மாதம், கிழமை, சடங்கு, கிரியை, கொள்கைகளின் செலவோ வேறு. இதில் எல்லோருக்கும் நிரவி வராதுபோனால் பாவி, துரோகப் பாதகன் என்ற பழிச் சொல் வேறு. இதை எங்கே சொல்வது. சொன்னாலோ உயரமான வாசலில்தானே குதித்து முட்டிக்கொண்ட தலைவலியைப்போல் விதி, கர்மா என்ற குற்றச்சொல் வேறு; இதை எல்லாம் நினைத்து இறைவனிடம் முறையிட்டுக் கண்ணீர் விட்டு அழுதாலோ, உடம்பிற்குப் பலக் குறைவு வேறு. இவை எல்லாம் எது போன்றதென்றால் மழை பெய்யாத வறண்ட பூமியில் சிறுமழை பெய்து விட்டுவிட்டால் அங்கு ஏற்படும் வெப்பத்தினால் அநேக நோய்கள் உண்டாவதைப் போன்றதேயாகும்.

பெரிய மரம் செழித்து வளர்வதைக்காட்டிலும், அதன் அடியில் வளரும் புல், பூண்டு, செடி, கொடிகள் செழிப்பாகவே வளருகின்றன. அதுபோல், காட்டில் வாழும் உயிரினங்கள் வேறொன்றிற்கு இரையாகுமுன் இனிதாகவே வாழ்கின்றன. மனிதர்கள் பலர் எல்லா வகையிலும் அவர்கள் உயிருள்ள வரையில் துன்பப்படுகின்றார்கள். எல்லா வகை நலத்துடன் வாழ்கின்றவர்கள் வெகு சிலரே.

**ஓ சர்வாதிகாரிகளே! அரசியல் ஆட்சியாளர்களே! மதத் தலைவர்களே! உங்கள் கையில் எடுத்த உணவு வாய்க்கு வருமுன் உள்ள நேரத்தில், இவ்வுணவு எல்லோருக்கும் சரிவர நிரவி வருகிறதா என்று உணர்ந்து சிந்தியுங்கள். தாய் தந்தையின் கருணையிலும் பெரிதே அரசியல் ஆட்சி.**

**கருணையின் கண்ணீர்விட்டுச் சொல்லுகின்றேன்,** நீங்கள் வெளியேறிப் பாராத ஒரு குற்றமே வீண் செயல் விளைவுக்குக் காரணமாக இருந்துகொண்டிருக்கிறது. பெரும் அறிவாளிகள் சிந்தித்தும் பயன் என்ன? எடுத்துச் சொல்லியும் பொறுப்போடு ஆட்சி செய்யாவிட்டால் அவ்வறிவாளிகளின் இருதயத்திலுள்ள நிந்தனை ஆட்சியாளரையே சாரும். சிந்தித்தீர்களானால் எல்லா வகையான தொழில்முறைகளும் மிக ஒற்றுமையாக நடந்தேறியே வரும். பிறந்த எல்லோருக்கும் உணவு, உடை நிரவுதலாகிய ஆற்றலுள்ள அரசியல் இல்லாதவரை உலக ஒற்றுமை எவ்வகையிலும் ஏற்படாது. இதுவுமன்றி உண்மை தெரியாத மதங்கள், ஒரு நோக்கமுமில்லாத கட்சிகள், வீண் விவகார நீதிமன்றங்கள், எடுத்த உடம்பு சரிவர நிலைக்கவிடாக் கொடியப்பிணிகள், உறவினர்களின் தொல்லைகள், ஆகிய இவை இல்லாவிட்டாலும் ஆராய்ச்சியில்லா நம்பிக்கைகள், படைபலம், கோட்சொல்லல், நயவஞ்சக நட்ப தந்திர நிர்வாகங்கள் ஆகிய இவை எல்லாம் உலகத்தில் இருந்தே வரும்.

உலகத்தில் அறிவறியா மக்கள் பெரும்பான்மையாகவும், அறிவறிந்த மக்கள் சிறுபான்மையாகவும் இருந்துவருவதால், அறிவறியா மக்கள் கொண்ட கொள்கை நீதியில்

லாது, ஒருவகைக் கூட்டமாகி ஒதுங்கி, சாதிமத வேறுபாடு பரவிவர ஏதுவாயிருக்கின்றது. இன்று வரைக்கும் நிகழ்ந்திருக்கும் இக்குறையால் **பிணக் குழியைச் சமாதியாக்கி, சம்பாதிப்புக்காக அறிவை அடிமைப் படுத்தி வந்திருக்கும் தொல்லைகள்** அநேகம்.

## 14/1 அறிவுக்கு மாற்றமான மரியாதைகள். (பணிவு)

சிலைகள், சமாதிகளுக்கு மக்கள் மரியாதை கொடுப்பது உண்மையானால், எந்தச் சிலைக்கும், சமாதிக்கும் மரியாதைக் கொடுக்கவேண்டும். ஆனால் அப்படி இல்லை. சிலை, சமாதியை வைத்து அதனால் வரும் வருமானத்தைக் கொண்டு எவ்வளவு மக்கள் வாழ்கின்றார்களோ, அதற்குத் தக்கபடியே மக்கள் மரியாதை கொடுக்கிறார்கள். ஒரு சிலை, சமாதியை வைத்து 2, 3 பேர்கள் மட்டும் பிழைத்து வந்தால், அதைச் சிறு கோயிலாகக் கருதுவதும், ஆயிரம்க்கள் ஒரு கோயில், சிலை, சமாதி மூலமாக வாழ்ந்தார்களானால் அதற்குப் பல மக்கள் மரியாதை கொடுப்பதையும் பார்த்தீர்களானால், எவ்வளவு மக்களுக்கு வயிற்றுப் பிழைப்பு நடக்கிறதோ, அதற்குத் தக்கபடி எதற்கும், எவர்க்கும் மரியாதையைக் கொடுத்துக் கொண்டாட முற்படுகிறார்கள். இதற்குக் காரணம் பணத்தின் ஆடம்பரமேயாகும்.

ஒரு 'விலைமகளால் (தாசியால்) யாருக்கும் பிழைப்பு இல்லாதிருந்தால், அவளைத் தேவடியாள் என்று இழிவாய்ப் பேசுவதும், வைர வியாபார நகைக்காரன், மற்றுமுள்ள தொழில்காரர்கள் பிழைக்கக்கூடியதாய் இருந்தால் அவளுக்குப் பெரும் மரியாதை கொடுப்பதும், ஒருவன் 64 ஆசனங்களை முறைப்படி நல்லவிதமாகப் போட்டுக் காண்பித்தாலும், அவன் கிழிந்த வேஷ்டியுடன் இருப்பானானால் அதற்கு ஒருவித மரியாதையும் கொடுப்பதில்லை, ஒரு சல்லியும் போடுவதில்லை. பிச்சைக்காரன், ஒன்றுமே தெரியாத சோம்பேறி என்று இழிவுபடுத்துவதும், சக்கரங்கள், மந்திரங்கள், ஆசன முறைகள் முதலியவற்றை, காகிதங்களில் எழுதி நூலாக வெளியிட்டால் அவனால் அச்சகத் தொழிலாளர்கள்

பிழைப்பதால் அவனுக்கும், அந்தப் புத்தகத்திற்கும் மரி யாதை மிகக் கொடுப்பதை யோசித்தீர்களானால், மக்களின் மரியாதை பயன்படாத முறையில் இருந்து வருகிறதென்பது நன்கு விளங்கும். இது எதைப் போன்று என்றால், முதல் வாங்கியது 10 ரூபாய், ஆனால் அதற்கு வட்டி கொடுப்பதோ ஆயிரக்கணக்கான ரூபாய்களைப்போல், சிறு ஆராய்ச்சியில் லாது பெருகிய பெருங் கேடுகள் பலவாகும். உலகில் பயன் படாத மரியாதையால் பயன்படும் தொழில்கள் குறைவுபடு கின்றன.

மக்கள் கடவுளிடம் வேண்டுவனவும், வருத்தத்தால் கூறும் பழிச்சொற்களும், அக்காலங்களில் உள்ள அறிவாளி யையும், அரசியல் ஆட்சியாளரையும் பற்றுகின்றன. அறி வாளிகள் எந்த நீதியைப் போதித்தாலும் அது அரசியல் வாயிலாக இருந்தால் மட்டுமே எல்லோரும் சுகத்துடனும், ஒரு நிலையுடனும், ஒற்றுமையுடனும் வாழ்வார்கள்.

**இனி இருக்கவேண்டிய அரசியல் ஆட்சி, எவ்வித மத போதனை செய்யாமலும், யாருக்கும் சொந்தமென்ற சொத் துரிமையில்லாமலும், உடல், வயது, அறிவுக்குத் தக்கவாறு எல்லோருக்கும் தொழில், உணவு, படிப்பு, உடை, இட வசதி, விவாகப்பதிவு, குழந்தையைப் பெறுதலில் திட்டம் ஆகிய இவை வகுக்கக்கூடியதாகவும் இருக்கவேண்டும். பிரசாரத்தால், சொற்பொழிவால் அறிவுக்குப் பொருத்த மில்லா எதையும் மக்களிடை பரப்ப விடாதும், பணிவான சொல், எழுத்துக்கள், மக்களிடை வழங்காமலும் அரசியலார் பார்த்துக்கொள்ளவேண்டும்.**

சுற்றும் இராட்டினத்திலுள்ள பொம்மைக் குதிரையில் ஏறிச் சவாரிசெய்து இறங்குவதுபோல் உள்ள அரசியலாரின் ஆட்சியில் மக்களுக்குப் பயன் ஏதுமில்லை.

குடி, விபசாரம், நயவஞ்சகம் இம் மூன்றும் இல்லாது, நீதியுடன் இருப்போரையே மக்கள் அரசியல் அலுவலாளர் களாக நியமித்தல் வேண்டும். உலகம் சிறப்பாய் இருக்க எழுச்சி கொள்வீர்.

இது எல்லோரிடமுமுள்ள நன்னோக்க ஏக்கத்தோடு, எல்லா மதத்திலும், எல்லா நாட்டிலும் பரவியே முழுமையுறும்.

## 14/2 பயன்படாத் தொழில்கள்

அதிகக் கடிகாரங்கள், விமானங்கள், அணுக்குண்டுகள், சித்திரங்கள், புகைப் படங்கள், கற்பனை நூல்கள், சூது விளையாட்டுகள், கோயில் பூசைகள் ஆகிய இவை போன்றவைகளை அறவே குறைத்துக்கொள்ளவேண்டும்.

வயிறு சுமப்பதோ சிறு உழக்கரிசி, அதற்காக உடல் சுமப்பதோ பல பெரும் மூட்டைகள். இதைவிடப் பயனில்லாது தனவந்தர்கள் மனது சுமப்பதோ, அநேக ஏக்கர் நிலத்துடன் வீண் விவகார விதண்டாவாதங்கள். என் செய்வது? உடல் அனுபவத்திற்கு உழைத்தே, சேகரித்தே, சேமித்தே வைக்கத்தான் வேண்டியிருக்கிறது. ஏன்? உண்மை தெரியா அரசியல் நிர்வாகத்தாலேயே!

பெருந் தன்மை இல்லாரிடத்தில்
பணமிருப்பதும்,
அறி வுணர்தல் இல்லாரிடத்தில்
படிப்பிருப்பதும்,
ஏழைகளின் துயரம் அறியாரிடத்தில்
அரசியல் நிர்வாக மிருப்பதும்,
ஆராய்ச்சி ஒழுக்க மில்லாரிடத்தில்
ஞானம் பேசுவதும், எதுபோன்ற தென்றால்,
மனித நடமாட்ட மில்லாவிடத்தில் ருசி யுள்ள
பொருள் விளைந்தும் பயன்படாதது போன்றே !

---

# 15 பொருளாதாரம்

மக்களின் உபயோகத்திற்கு வேண்டிய பொருள்கள் உலகின் பல பாகங்களில் விளைவதாலும், அப் பொருள்களைக் காரணமாகக்கொண்டு எல்லா நிர்வாகங்களும் நடந்து வர வேண்டியிருந்ததாலும், அறிவின் தெளிவு இல்லாது வெகு

காலம்வரை பண்டமாற்றும் முறையில் நிர்வாகம் நடந்து வந்தது. மக்களுக்கு அவைகளால் ஏற்பட்ட சிரமத்தை அறிந்த அரசாங்கம் அதை நீக்கவேண்டி, எப்பொருளையும் சுலபமாக மதிப்பிட்டு மாற்றிக்கொள்ளத் தகுந்த முறையில் முத்திரையிட்ட மதிப்புச் சீட்டுகள் வெளியிட்டது. அறிவின் நுட்பத்தால் ஓலை, தோல் முதலியவைகளில் அரசாங்கத்தார் முத்திரை யிடுவதைப்போல் மக்களும் செய்ய, முற்பட்டார்கள். இதைத் தடுக்க அரசாங்க நிர்வாகத் திறமை, மக்கள் எளிதில் அடைய முடியாத உலோகங்களாகிய வெள்ளி, தங்கம் ஆகியவைகளில் முத்திரையிட்ட நாணயங்கள் உபயோகத்திற்குக் கொண்டுவரப்பட்டன. நாணயங்களைக் கொண்டே எந்தப் பொருளையும் சுலபமாகப் பெற்று விடலாம் என்ற சௌகரியம் அனுபோகத்தில் தெரிந்தவுடன், ஒரு வியாதிக்கு ஏற்படுத்திய மருந்தால் அநேக வியாதிகள் உண்டாவது போன்று பணத்துக்குள்ள மரியாதையால் பணத்தை அதிகமாகச் சேகரித்த மக்களால் அநேக தீமைகள் ஏற்படலாயின.

**ஆகையால் பணத்துக்குள்ள மரியாதையை ஒழித்து ஒரு மனிதனின் வயது, தொழில், அறிவின் திறமை, நிலைக்குத்தக்கவாறு போதிய இடவசதியும் ஒவ்வொரு ஆண்டிற்கும், உணவு, உடை, போக்கு வரத்து வசதிக்குள்ள தகுதிக் கார்டும் ஒவ்வொருவருக்கும் அவரவர் போட்டோ, பெயருடன் கொடுத்து நிர்வாகம் நடத்துங்கள்.**

உபயோகத்திற்கு உதவாத உலோகப் பொருள்களை எடுக்கும் தொழிலாளரின் உழைப்பையும், அப்பொருள் சம்பந்தமான விவகாரங்களை கவனிக்கும் அதிகாரிகளின் உழைப்பையும், அதைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் வேலைக்காரர்களின் உழைப்பையும், மற்றப் பயன்படும் நிர்வாகத்திற்கும், தொழிலுக்கும், விவசாயத்திற்கும் பயன்படுத்துங்கள்.

எண்ணத்தாலேயே உலக நிர்வாக முழுமையும்
நடைபெறுகிறது.
இவ்வெண்ணத்தின் தடிப்பால் நல்லதையும்
கெட்டதையும் சுமந்து கொண்டு இருக்கிறது.
எல்லா வகையிலும் நல்ல எண்ணத்தையும் நன்
நடத்தையையும், நல்ல வார்த்தைகளையுமே
உபயோகித்து வாருங்கள். எல்லோரும் என்றும்
நலமாக வாழலாம்.

கேள்வி :— நான் எண்ணிய காரியங்கள் எல்லாம் எனக்கு நடக்கவேண்டும். அதற்கு நீங்கள் அருள் புரிய வேண்டும்.

பதில் :—மகிழ்ச்சி! யாவர்க்கும் நல்ல பிள்ளையாக நடந்து நல்ல பெயர் எடுத்துக்கொள். நீ எண்ணிய காரியங்கள் யாவும் நடக்கும்.

நாடுகிற நாட்டங்கள் நல்லனவாகவே இருந்தால் கால தாமதத்தோடு துன்பம் மிகுதியாயிருப்பினும் நீ நாடியதற்கு மேல் மிக நல்லனவாகவே முடியும்.

அச்சமும், விரைவும், நம்பிக்கையும், அன்பும், ஒன்று கூடிய உள்ளத்தில் ஆகாத நற்காரியம் ஒன்றுமில்லை.

அச்சமும், விரைவும், இருந்து நிலையும் பொறுமையுடன் எண்ணுதலும் இல்லையேல் எடுத்த காரியம் நல்லதாய் இருப்பினும் நடைபெற நாள் செல்லும்.

## 15/1 மனிதனுக்குத் துன்பம் எதனால் ஏற்படுகிறது

செலவுக்கு வேண்டிய வருவாய் இல்லாத குறையாலும், வருவாய் மிகுதியாய் இருந்து, அளவு மீறிய உணவால் வியாதிகளும் செலவுக்கு வேண்டிய வருவாய் இருந்தும், மிகுதியாகச் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையாலும், கடவுளின் தத்துவம் அறியாத சந்தேகத்தாலுமே துன்பம் ஏற்படுகின்றன.

## 15/2 குற்றங்கள்

**உலகில் உள்ள குற்றங்களை மூன்றில் அடக்கலாம். 1. இயற்கைக் குற்றம். 2. அரசியல் குற்றம். 3. தன் குற்றம்.**

1. மழை, வெய்யில், காற்று, பனி, குளிர் ஆகிய இவை எல்லாம் உரிய பருவந் தவறுதலும், அப்பருவங்களில் அளவுக்கு மீறுதலும் இயற்கைக் குற்றமாகும்.

2. எல்லாவற்றையும் ஆராய்ந்து மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் ஆற்றலில்லாத நிர்வாகமாயிருப்பின் இது அரசியல் குற்றமாகும்.

3. பிறர் சொல்லும் நலத்தைக் கேட்காததும், தன் அறிவில் தெளிந்து சரியாக நடந்து கொள்ளாததும் தன் குற்றமாகும்.

---

## 16 உயிர்

அணுக்களின் கூட்டுறவின் வேகமே இரத்தம். இரத்த ஓட்டத்தால் உள்ள ஸ்பரிச உணர்ச்சியின் பிடிப்பே உயிர். தடித்து வளரும் பெரும் மரத்தின் உள் ஈர உணர்ச்சியின் வளர்ச்சிக்குத் தடை ஏற்பட்டவுடன் மரம் எப்படிப் பட்டு விடுகிறதோ, அதுபோல் இரத்த ஓட்டத்தின் வேகம் நின்று விட்டால் (வேகம், விவேகம், ஊற்றுணர்ச்சி இல்லாது உடம்பு விழுந்துவிட்டால்) உடம்பில் உயிர் இல்லை என்பதாகும்.

இரத்த ஓட்ட வேகத்தாலும், நிதானத்தாலும் வளர்ச்சியும் தளர்ச்சியும்; இரத்த ஓட்டத்திற்குள்ள தடைகளால் நோய்களும் ஏற்படுகின்றன.

ஆகாயம், காற்று, உஷ்ணம், உணவு, நீர் ஆகிய அணுக்கள் ஒன்றோடொன்று மோதுதலினால் ஏற்படும் போரின், அல்லது இடம்புரிச் சுற்றின், அல்லது சுழலின் வேகமே உயிர்.

ஒரு சக்கரத்தில் ஒரு இடத்தில் ஒரு புள்ளிவைத்து அந்தச் சக்கரத்தை வேகமாகச் சுழலச் செய்யும்போது அப் புள்ளி சக்கரத்தில் வட்டமாகக் கோடுபோட்டது போலத் தெரியுமே தவிரப் புள்ளியாகத் தெரியாது. அச்சக்கரம் சுழல்வதை நிறுத்திவிட்டால் புள்ளியாகத் தெரியுமே தவிர, வட்டக்கோடு போலத்தெரியாது. அதுபோலவே நமது உடலில் இரத்தம் வேகமாக சுழன்று ஓடிக்கொண்டிருந்தால் உயிர் இருப்பதாகும். இரத்தம் நின்றுவிட்டால் உயிர் உடம்பில் இல்லை என்பதாகும்.

**உயிருக்கு அழிவில்லை என்பதன் பொருள் :**—வாழும் உயிரினங்களிடமும், மக்களிடமும், இரத்தமும் விந்தும் மாறி மாறி எப்பொழுதும் இருந்துகொண்டிருப்பதால் உயிருக்கு அழிவில்லை எனலாயிற்று. இறந்தபின் உயிர் தனியாக இல்லை. ஒருவன் இறந்தால் அவன் விந்து பிள்ளைகளாக் உடலெடுத்து உயிருடன் இருக்கின்றன.

# 17 மனிதன்

மற்ற ஜீவராசிகளுக்கும் மனிதனுக்குமுள்ள வித்தியாசம் என்னவென்றால் அநேக அனுபோக வாயிலாகத் தூரத்திலுள்ள விஷயத்தைக் கண்டு பிடிப்பதும், துரிதமாகச் செல்லும் வாகனங்களைச் செய்து வேகமாய்ப் போக முயற்சிப்பதும் போவதும், அறிந்த செய்திகளை விரைவில் பரப்பி மக்களுடைய துன்பங்களைப் போக்குவதுமாகிய நிர்வாகத்திலும், ஆயுதத்திலும், அறிவு நுண்ணுணர்வு மிகுந்து இருப்பதே மனிதனின் உயர்வாகும். உடம்பிற்குப் பின் எதற்கும் முடிவு ஒன்றே. இதற்காக வேண்டியேதான் அநேக சொற்பொழிவுகளில் மனிதனுக்கு மனிதன் என்ற பெயரை மாற்றி, **கடவுள்** என்று அமையுங்கள். எல்லா நிர்வாகங்களும் நுண்ணறிவோடு பெருந்தன்மையாக நடக்குமென்று சொல்லியிருக்கின்றேன்.

## 17/1 மனிதனின் உயர்வு.

பறந்து செய்திகளைக் கொண்டுபோவதில் உயர்ந்தது புறா. ஒருவருக்கொருவர் எண்ணிய எண்ணத்தால் எல்லையற்ற தூரத்தில் ஞாபகம் ஊட்டுதலில் உயர்ந்தவன் மனிதன்.

தந்திரத்தால் உயர்ந்தது நரி. ஏற்றத்தாழ்வை யறிவதில் உயர்ந்தவன் மனிதன்.

நன்றியில் உயர்ந்தது நாய். நன்றி மறவாது நன்னடத்தையில் உயர்ந்தவன் மனிதன்.

நின்ற நிலையில் உயர்ந்தது மரம். நீதி நிலையில் உயர்ந்தவன் மனிதன்.

கண்பார்வையில் உயர்ந்தது கருடன். கண்ணோட்டத்தில் உயர்ந்தவன் மனிதன்.

தன் மலத்தை மறைப்பதில் உயர்ந்தது பூனை. தன் துர்க்குணத்தை உணர்ந்து உயர்ந்தவன் மனிதன்.

பாய்ச்சலில் உயர்ந்தது சிங்கம். பலத்தை அறிந்து உயர்ந்தவன் மனிதன்.

உயிரினங்களில் உருவத்தில் உயர்ந்தது யானை, சிங்கம், புலி, கரடி, பாம்பு, மீன். எதையும் அடக்கி ஆளும் ஆயுத அறிவில் உயர்ந்தவன் மனிதன்.

ஆடல் அழகில் உயர்ந்தது மயில். உடை ஒழுக்கத்தில் உயர்ந்தவன் மனிதன்.

கூவுதலிலும், கொஞ்சுதலிலும் உயர்ந்தது குயில், கிளி. இனிய சொல் அன்புக் குரலில் உயர்ந்தவன் மனிதன்.

காதலியோடு இணைபிரியாது வாழ்வதில் உயர்ந்தது அன்றில் பட்சி. குடும்பப் பிளவு இல்லாது வாழ்தலில் உயர்ந்தவன் மனிதன்.

ஊரில் உள்ள கொடிய வியாதிக்காகக் கவலைப்படுவதில் உயர்ந்தது கழுதை. அந்த வியாதியை அறிந்து மருந்தால் தவிர்ப்பதில் உயர்ந்தவன் மனிதன்.

எதிரிலிருக்கும் அபாயத்தை அறிவதில் உயர்ந்தது குதிரை அபாயத்தை நீக்க நினைத்து வெற்றிகொள்வதில் உயர்ந்தவன் மனிதன்.

சுறு சுறுப்பிலும், பாதை உண்டாக்குவதிலும் உயர்ந்தது எறும்பு. எல்லாருடைய மேன்மைக்கும் நீதி, சட்டத்தை வகுப்பதில் உயர்ந்தவன் மனிதன்.

கூடு கட்டுவதில் உயர்ந்தது தூக்கணங்குருவி. குடிசை, மாடமாளிகை கூடகோபுரம், பாலம் கட்டுவதில் உயர்ந்தவன் மனிதன்.

உலகத்தைச் சுற்றிவருவதில் உயர்ந்தது அக்கா குருவி (Cuckoo). குறிப்பிட்ட நாளில் சுற்றிவந்து செய்தி சொல்வதில் உயர்ந்தவன் மனிதன்.

அசுத்தத்தையும், சுத்தத்தையும் உண்டு உரு வளர்வதில் உயர்ந்தது பன்றி. அசுத்தத்தை நீக்கிச் சுகாதார முறையில் உயர்ந்தவன் மனிதன்.

புழுவை மாற்றித் தன் உருவ மாக்குவதில் உயர்ந்தது குளவி. அனுபோக அறிவை மக்களுக்கு உண்டாக்குவதில் உயர்ந்தவன் மனிதன்.

உடம்பில் தன் விகாரத்தை மாற்றி ஊர்ந்ததைவிட்டு அழகான வண்ணத்திப்பூச்சியாய் (Butterfly) பறப்பதில் உயர்ந்தது கம்பளிப்பூச்சி. தன் விகார விவகார எண்ணங்களை விட்டு, சந்தேகமில்லா, தன் நிலையில் அமர்வதில் உயர்ந்தவன் மனிதன்.

வயதில் உயர்ந்தது தேரை. இருக்கும் வயதில் எல்லாம் அறிந்து நீதியாய் அனுபவித்துப் போவதில் உயர்ந்தவன் மனிதன்.

எப்பொருளும் எச்செயலும் அந்தந்த இடங்களுக்கும் நேரங்களுக்கும் அது உயர்வே.

எப்பொருளையும், எச்செயலையும் அந்தந்த இட நேரங்களில் பொது நீதியாக அனுபவிக்கும் அறிவில் உயர்ந்தவனே மனிதன்

அவரவர்களின் கருத்து அவரவர்களுக்கு அவ்வக்காலத்திற்கு உயர்வே. எக்கருத்தானாலும் அக்கருத்து எல்லா நாட்டுப் பொதுமக்களுக்கும் பயன்படக்கூடியதாய் இருந்தால் எக்காலத்திலும் அக்கருத்து நிலைக்கும்.

**எண்ணம், செயல், சொல்**
**இம் மூன்றிலும் சீராய் இருப்போரே**
**உலகில் கடவுளாவர்.**
**சக்தியில் உயர்ந்தது (பலம் மிகுந்தது) ஜீவராசிகள்**
**அறிவில் உயர்ந்தவன் மனிதன்**

**உதாரணம்** :—ஈ, எறும்பு, மூட்டைப்பூச்சி, கொசு முதலிய உயிரினங்களின் சக்திக்கு, மிகப் பெரிய சக்தியுடையவர்களாகக் கருதப்படும் ஞானிகளும், சக்கரவர்த்திகளும், சர்வாதிகாரிகளும், யுத்த வீரர்களும் பயப்படவே செய்கிறார்கள். பயப்படாதவர்கள் யாருமே இல்லை. ஆனால் அந்த உயிரினங்களின் சக்திகளிலிருந்து பாதுகாத்துக் கொள்கின்ற அறிவில் உயர்ந்தவன் மனிதன்.

---

# 18 உணவுத் திட்டம்

அவரவர்கள் எந்த ஆகாரத்தை மேலாகக் கொண்டுள்ளார்களோ அதுவே சிறந்தது.

கடுமையான உடல் உழைப்பில்லாத அறிவாளிகள், பகல் 11-மணிக்கு மேல் 2-மணிக்குள் போதுமான அளவு ஒரு வேளை ஆகாரம் உண்பதில் உடம்புக்கு நலமுண்டு. நோய் அணுகாது.

இதனால் குடும்பம் தொழில் தவம் ஆகியவற்றிற்கு யாதொரு தடையுமில்லை.

விருப்பமுடன் உண்போரைத் தடுப்பதும், விருப்பமில்லாதவரை உண்ண வைப்பதும் கூடாது.

மழைக்காலங்களிலும், குளிர் காலங்களிலும், பௌர்ணமி காலங்களிலும், செரிப்புத்தன்மை (சீரணித்தல்) குறைவாகையால், உணவைச் சுருக்கிச் சாப்பிடுதல் நல்லது. எதையும் பசித்தபின் சாப்பிடுவதனாலும், சோற்றை மிகவும் குழையவிடாமல் பதமாக வேக வைத்துச் சாப்பிடுவதனாலும் இரத்தப் பெருக்கமும் மனவன்மையும் உண்டாகும்.

உடல் உழைப்பாளிகளுக்குப் பழஞ்சோறு நன்மை பயக்கும். அறிவின் உழைப்பாளிகளுக்குச் சூடான உணவே நன்மை பயக்கும்.

எல்லா உணவுகளிலும் அவ்வவற்றிற்குரிய சத்துக்கள் உண்டு. காரம் முதலிய கூட்டுப்பொருள் சேர்க்காமலும், கறிகள் மிகுதியாகச் சேர்க்காமலும், வேண்டிய அளவு ஒன்று அல்லது இரண்டு கறிகளுடன் உண்பது நல்லது.

---

# 19 உணவுக்குப்பின் தூக்கம்

படுக்கைக்குப் போகுமுன் கால், கை, பற்களைச் சுத்தம் செய்யவேண்டும். வலது கைப்பக்கம் திரும்பிப் படுத்தால் எச்சரிக்கையாகவும் உணர்வுடனும் தூங்கலாம். அதிகம் தூக்கத்தை விரும்பினால், இடது பக்கம் திரும்பிப் படுக்கவும். மார்பில் இடது கைமேல் வலது கையும், வலது காலின்மேல் இடதுகாலும் வைத்து மல்லாந்து படுப்பதில் மிக நன்மையுண்டு.

உடம்பில் நோய் ஏற்பட்டால் மேற்கண்டபடி மல்லாந்து படுத்து, உடம்பு அசையாது இரு புருவ மத்தியில் உள்ள சுழி முனையில், அரை மணி நேரம் நினைவு வைத்தால் உடனே தூக்கம் வந்து நோய் தீரும். வியாதியில்லாத சிறு குழந்தைகள் பசியில்லாது அழுது தூங்காமல் இருந்தால், காற்று வசதி இல்லை என்பதேயாகும். உடனே காற்று வசதி உள்ள இடத்தில் தூங்க வைத்தல் நல்லது. இரவு 8 மணிக்

குத் தூங்கி, காலை 4, 4½ மணிக்கு எழுந்திருந்தால் ஒரு வித வியாதியுமில்லை. சுறுசுறுப்பு மிக அதிகம் உண்டாகும். காலை 4½ மணியிலிருந்து பகல் 9 மணிவரை செய்யும் தொழில்கள் சுமார் ஒரு நாள் முழுமையும் செய்யக்கூடிய தொழில்களைக் காட்டிலும் அதிக மாகவே நடக்கும்.

**கண் விழிப்பால் உள்ள கனலால்**
**நாடிகளின் வீரியம் தளரும்.**

பிற்பகல் 4 மணிக்குமேல் எந்தத் தொழிற்சாலை களிலும் வேலை யில்லாமலும் அதிக வெளிச்சமுள்ள விளக்குகள் இரவுகளில் இல்லாமலும் இருந்தால் வியாதி களே ஏற்படா.

# 20 பருவ வயதில் போகம்

மக்கட் பெருக்கமில்லாத காலத்திலிருந்த மக்கள் பரு வத்தில் இணங்கிய பெண்ணுடன் போகித்துக் கொள்வதும் பின் தன் காதலியுடன் பிரியாது ஒன்று சேர்ந்து திரிவது மாக இருந்தனர். இன்றைக்கும் மலைப் பிரதேசங்களில் இருக்கும் மலைச்சாதியினர்கள் அப்படியே இருந்து வருகிறார்கள்.

மனிதப் பெருக்கம் மிகுதியாய் இருக்கும் இடங்களில் உடல் நல்வழியையும், தொழில் இடவசதியையும் முன் னிட்டு உறுதிப்பாடுடைய மணமுறை ஏற்பட்டது.

## 20/1 திருமணத் திட்டம்

பெண் குழந்தை பருவம் அடைந்ததை வெளிப்படுத்து வதும், அதற்குச் சடங்குகள் செய்வதும் கணிதம் கணிப் பதும் கூடாது.

18 வயதிற்குமேல் எக்காரணத்தை முன்னிட்டும் பெண் குழந்தையை விவாகமில்லாமல் வைத்திருக்கக் கூடாது.

22, 23, வயதுள்ள ஆணுக்கும், 18, 19, வயதுள்ள பெண்ணுக்கும் திருமணம் முடிப்பது நல்லது.

பெண்களின் வயதிற்கு 10 வயதிற்கு மேற்பட்ட ஆட வர்களுக்கு எத்தகைய விருப்பத்தை முன்னிட்டும் விவாகம் செய்து கொடுக்கக்கூடாது.

விவாகம் முடிந்த பெண் பருவமடையுமுன் கணவன் இறந்துபோனால், விதவை என்று சொல்லாது உடனே மறு விவாகம் செய்து வைக்கவேண்டும்.

40 வயதிற்குக் கீழ்ப்பட்ட விதவைப் பெண்கள் குழந்தை இல்லாதிருந்தால் மறுமணம் செய்து கொள்ளுவதே உத்தமம்.

30 வயது ஆடவர்கள் தம் மனைவி இறந்து போயிருந் தால் விதவையையே மறுமணம் செய்து கொள்ளவேண்டும்.

மனைவி இருந்து குழந்தை இல்லாததற்காக மறுமணஞ் செய்து கொள்வது கூடாது.

மணம் முடிப்பதில் உடல் நிலை, குணம் உயர்வு, தொழி லின் முயற்சி இவை பார்ப்பது இன்றியமையாதது.

நகைகள், பணம் கேட்டல், மிகச்செலவு செய்தல் திரு மணத்தின் பொருட்டு கடன் வாங்குதல், நன்கொடை விரும் புதல், மற்றவர்களுக்குச் செய்தல் ஆகிய இவை கூடாது.

மந்திர உருஏற்றல், அதற்கு ஒரு குரு, மாதம், கிழமை, நட்சத்திரம், பாகுபாடு சடங்குகள் கூடாது.

வீடு, பந்தல் அழகாய் அலங்கரித்தல், இன்னிசை யமைத்தல், இனிப்பு, கனி, வாசனை, மலர் வழங்கல் ஆகிய இவைகளைச் செய்யலாம்.

திருமணத்திற்கு வந்திருக்கும் கூட்டத்தில் ஒரு பெரி யோரால் மணமக்களின் ஒப்பத்தின் பேரில் மாலை சூட்ட வேண்டும். அக்கூட்டத்தின் மகிழ்ச்சியே மணமக்களை மகிழ்ச்சியாய் வாழச் செய்யும்.

தாய் தந்தை, மாமி மாமன் ஆகியோர் தேவையற்ற கட்டுப்பாடுகளை ஏற்படுத்தாமல் மணமக்கள் விருப்பப்படி வாழவைத்தல், வாழுதல் இன்றியமையாதது.

பெண்கள் திருமணமில்லாது கன்னியாய் இருப்பதில், வாழ்வமைதியை விரும்பிப் பொறுமையுடன் நீதியாக இருந்தாலும் அவர்களுக்கோ அவர்களின் இறப்பின் பின் உயிரமைதிக்கோ, அவர்களால் உலகத்திற்கோ யாதொரு பயனும் கிடையாது.

அறிவு உடையாருக்கே இன்பம், நீதி, சுவை அனுபவம் எல்லாம்.

விளைந்த அறிவு நுகரும் நுகர்ச்சிகளை அடக்குவதும் குற்றமே. நீதியில்லா வழியில் அனுபவித்து மடிவதும் குற்றமே.

உடம்பின் சிறப்பும், அறிவின் நீதியான அனுபவத்தின் இன்பமுமே உண்மையான இன்பம்.

அன்பு, பார்வை, பருவம், நீதி, உரிமை, கூடுதல் ஆகிய இவை சேர்ந்ததே இன்பம்.

**உதாரணம் :**—மரம் முளைத்து பூத்துக் காய்க்குமுன் அது பட்டு விட்டால், நெருப்பிற்கும், பல காரியங்களுக்கும் உபயோகப்படுகின்றது. அதுபோல் அறிவின் பெருக்கமில்லாமக்கள் அப்பெருக்கமின்மைக்கும், அறிவின் உயர்வுக்கும் இடை நடுவே பல வேலைக்கு உதவுகிறார்கள்.

## 20/2 குழந்தை பெறுதலின் திட்டம்

திருமணமானவர் இரண்டு குழந்தைகளைப் பெற்றால் போதும். ஆண் குழந்தை வேண்டுவோர் குழந்தை பிறக்கும் வரையிலும் புணரும்போதெல்லாம் 6 அடி நீளம், 3 அங்குல அகலம் உள்ள மெல்லிய துணியால் இடது விதையை மட்டும் மேல் தூக்கி வலது தோளில் கட்டிப்புணர ஆண் குழந்தை உண்டாகும். இவ்வாறே வலது புறம் மாற்றிக் கட்டிக் கொண்டால் பெண் குழந்தை தரிக்கும்.

மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு ஆண்டிற்குஒரு முறை குழந்தை தரித்தாலே தாயின் உடம்பு பலக்குறைவு

இல்லாமலும் உற்பத்தியாகும் குழந்தை உடல் நலத்துட னும் இருக்கும்.

குழந்தையே வேண்டாமெனில் மாதவிடாயாகி 23 நாளுக்கு மேல் கூடினால் குழந்தை உண்டாகாது.

பிருதியான புணர்ச்சி வேண்டுவோர் விந்துவைக் கீழே விட்டு விட்டால் குழந்தை உண்டாகாது. இதனால் உடம் பிற்கு யாதொரு தீங்குமில்லை.

புணர்ச்சி 25 வயதிற்குமேல் நாள் ஒன்றுக்கு ஒரு முறையும், 35 வயதிலிருந்து 60 வயது வரை வாரம் இரு முறையும், 60 வயதிற்குமேல் மாதம் ஒரு முறையும் புணர்ச்சி செய்தால் உடலுக்கு நலமுண்டாகும்.

விந்து ஊறுமுன் அடிக்கடி புணர்ச்சி செய்தால் கண் கள் கெடுவதுடன், வாதம், காசம் முதலிய நோய்கள் உண்டாகும்.

உணர்வாளர்கள் நெற்றியில் நினைவை வைத்துக் கண் களை இமையாது புணர்ச்சி செய்தால் உணர்வு நன்றாயிருப்ப துடன் உடல் நலமாகவுமிருக்கும்.

## 20/3 குழந்தை இல்லாக்கவலை

தன் ஆயுளுக்குப் பின் தன் ஆயுளின் நற்கதி கருதிச் செய்யும் பிறகடனுக்காகவும் வழிவழிப்பெயர் பட்டத்திற் காகவும், பிள்ளை வேண்டும் என்ற எண்ணமுடையோன் அறிவில்லாதவனே.

பிள்ளை இல்லாதவன் சொத்து அறவழியில் செலவிடு வதன் மூலம் எல்லோருக்கும் நிரவி வரட்டும் என்ற எண் ணத்துடன் பிள்ளை இல்லாதவன் பாவி என்றான் தந்திரி.

வேந்தரும், பெரும் பொருளுடையோரும் பிள்ளையில் லாக் குற்றத்திற்காக ஈகை, அறம் செய்தல், கோவில் எழுப் பித்தல், இவைகளில் முற்பட்டார்கள்.

தன் பணத்தை மற்றவர்கள் அனுபவிக்காது பாது காக்கப் பிள்ளை வேண்டுமென்ற எண்ணமுடையோன் பணக்காரன்.

பிள்ளைகள் மூலமாவது வறுமை நீங்கிச் சுகமடையலா மென்ற எண்ணமுடையோன் ஏழை.

போர் புரியக் குழந்தைப் பெருக்கத்தை நாடுவோர் யுத்த நாட்டார்கள். மனிதப் பெருக்கத்தாலும், ஏழை பணக்காரர் என்ற பாகுபாட்டாலும் வந்த தொல்லை இது.

இதுவரை இவைகளின் விவரம் அறியாத குறையால் பலவிதக் கற்பனைகளுக்கு, இயற்கை இயல்புள்ள மனித அறிவு ஈடுபட வேண்டியதாயிற்று.

கற்பனைக்குள்ளான அறிவு, கற்பனையை ஒழிக்கும் வரையிலும் வீண் காலப்போக்கிற்கும் பயன்படா எண்ணத் திற்கும் ஆளாகவேண்டியதாய் இருக்கிறது.

---

# 21 மணமாகாதவர் (பிரமச்சாரி)

எவன் தன் இன்பத்திலும், நீதியிலும் முறைபாய் இருப்பவனோ அவனே பிரமச்சாரி. சிற்றின்பம் மட்டும் விலக்கியவன் பிரமச்சாரி யாகமாட்டான். உடல் அனுபவத் தில் இது இன்றியமையாதது.

**உதாரணம்** :—கனவில் கண்டது, விழித்துப் பார்த் தால் ஒன்றும் இருப்பதில்லை. ஆனல் ஒரு பெண்ணைப் புணர்ச்சி செய்யக் கனவு காண்பவன் விந்து வெளிப்பட்டி ருக்கும். இதைப்பற்றிய கனவுகள் தோன்ருத பிரமச்சாரி யாய் இருப்பின் வைராக்கிய பக்தனே ஆவான். முக்திக்கும் இதற்கும் யாதொரு சம்பந்தமுமே கிடையாது. உதாரணம்:— ஆணவமில்லாப் பேடிகளைப் பிரமச்சாரியாக யாரும் போற்று வதில்லை.

அறிவு விளக்கம் பெறுமுன், அறிவு விளக்கத்தை அறிய முற்படும் பகுதியில் இது ஒரு முறையாகக் கை யாளப்பட்டது.

## 22 மலடு

ஆண்களின் தாதில் (விந்தில்) அல்லது பெண்களின் கருப்பப்பையில் கெட்ட கிருமிகளிருந்தால் குழந்தைகள் உற்பத்தியாகாது. மலட்டுத்தன்மை ஏற்படுகிறது. ஆண் பெண் இருவரில் யாருடைய உடலில் கெட்ட கிருமிகளிருக்கின்றன வென்பதை அறிவதற்கு, இருவரும் தனித்தனியாக ஒவ்வொரு பாத்திரத்தில் நல்ல மண்ணை நிறப்பி, அதில் நல்ல, பெரிய வெள்ளை மொச்சை 10 அல்லது 20-ஐ பதித்து அதில் காலை எழுந்ததும் தனித்தனியாக 4 நாள் வரை இருவரும் சிறு நீர் கழித்து வந்தால் யாருடைய பாத்திரத்திலுள்ள மொச்சை முளைக்காதிருக்கிறதோ அவர்களே மலட்டுத் தன்மைக்குக் காரணமாவார்கள்.

மக்கள் இடம் விட்டு இடம் மாறுவதாலும் பல ஊர்களுக்கு யாத்திரை போய் வருவதாலும், ஒருவர் பெயரில் ஏற்படும் விசுவாசத்தாலும், பருவ வளர்ச்சியால் உடல் நிலை மாறுவதாலும், தட்ப வெப்ப நிலைகளாலும், மருத்துவத்தாலும் அவர்களிடமுள்ள கெட்ட கிருமிகள் அழிந்து மலட்டுத்தன்மை நீங்கிவிடும்.

உடல் நலத்துடன் வாழும் ஆண், பெண்ணின் கூட்டுறவால் தரிக்கும் கருப்பமும் 4 அல்லது 5 தினங்களுக்குள் அதிகக் குளிர், அல்லது அதிக வெப்பமுடைய நீர் பெண்ணின் மறைவிடங்களில் பட்டால் கலைந்துவிடும். இவ்வாறு நிகழ்வது ஒரு சிலருடைய உடற் கூறேயாகும்.

பல குழந்தைகளைப் பெற்றவர்கள் அக் குழந்தைகளின் வளர்ச்சி கருதி, அடிக்கடி தங்கள் பொருளைச் செலவிட்டு, அநுபவமடைந்திருப்பதால், அப்பெற்றோர்களுக்கு தயாளம் பொறுமை, கருணை, இரக்கச் சிந்தனை இயற்கையாகவே ஏற்பட்டு விடுகின்றன. குழந்தைகளைப் பெறாதவர்கள் பலரில் ஒரு சிலர், செலவு செய்து அனுபவமின்மையால் அவர்களிடம் தயாளம், பொறுமை, கருணை, இரக்கச் சிந்தனை பெரும்பாலும் இருப்பதில்லை. இதன் காரணமாகவே நற் சிந்தனை இல்லா இவர்களை குழந்தைகளில்லா மலட்டுப் பாவிகள் என்று அழைக்கலானார்கள். இவைகளைத் தவிர்த்து மக்களிற்

சிலர் முன் ஜென்மத்தில் செய்த கொடிய பாவத்தின் காரணமாக இந்த ஜென்மத்தில் குழந்தைகளைப் பெருது மலடாகி, பாவிகளாகி விடுவதாகச் சொல்லும் கற்பனையை நம்பிச் சோர்வடைவதைவிட, அக்கற்பனையை ஒழிப்பதற்கு "முற்பிறவிகளில் குழந்தைகள் பெற்று, அக்குழந்தைகளால் சலிப்பேற்பட்டு, இனிக் குழந்தை வேண்டாம் என்ற ஏக்கத்தால் முடிவு கட்டியதின் பலனே பிள்ளையில்லாமல் இருக்கின்ருர்கள். இது அவர்களுக்குத் தெரியாமல் பிள்ளை வேண்டுமென்று இப்பிறவியில் ஏங்குவதால் மறு பிறப்புக்கும் துன்பத்திற்கும் விரைகின்றவர்களாகின்ருர்கள்," என்ற கற்பனையாக மாற்றி தைரியம் கொள்ளுங்கள்.

பிள்ளை இல்லாப் பெரியோர் நன்மையிலும் நன்மையுடையோர்கள். இப்படிச் சொன்னதிஞல் பிள்ளையுடையவர்கள் தீமையுடையவர்கள் என்று தீர்ப்பல்ல. இவர்கள் இல்லையேல் அவர்கள் இல்லை.

மக்கட்பேறு சிறந்தது. மக்களைப் பெருதிருத்தல் அதனினுஞ் சிறந்தது. இவ்வுண்மைகளை அறிந்திருத்தல் யாவற்றினுஞ் சிறந்தது.

## 22/1 குழந்தைகள் தாமே சொல்லிப் பழகவேண்டிய வாக்கியங்கள்

எத்துறையிலும் நல்லவஞய் நடப்பேன்
எல்லாம் அறிந்தே முடிப்பேன்
அன்பாய் இருப்பேன், அறியாமை அகற்றுவேன்
குறைச் செயல் செய்யேன், குற்றம் அகற்றுவேன்
நல்வழியில் ஒழுக்கமாய் இருப்பேன்
இறையுணர்வைப் பரப்புவேன்
யாருக்கும் பணியேன், எவரும் பணியச் சம்மதியேன்.
ஒத்தவுரிமை கோள்வேன், அமைதியைப் பரப்புவேன்
எதையும் வணங்கேன், என்னில் நான் அறிவேன்.

உலக நல்லடியார்களே ! என் இருதயச் செல்விகளே ! செல்வர்களே ! உங்கள் குழந்தைகளிடத்தும் துணைவியிடத்திலும், கணவன்மாரிடத்திலும் புன்சிரிப்பாய்க் கண்டியுங்கள், இதில் எல்லோரும் நல்லவர் ஆவார்கள். புன்சிரிப்பின் பார்வையால் பழைய குற்றம் எல்லாம் நீங்கப் பெற்று, புதிய குற்றத்திற்கும் ஆளாகமாட்டார்கள்.

சுன்னத்து செய்துக்கொள்ளும் வழக்கமுள்ள உணர்வாளர்களுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகளுக்கு, பிறந்த ஐந்து திங்களிலிருந்து ஒரு ஆண்டிற்குள் எவ்விதச் சடங்குகளும் இல்லாது டாக்டர் நாவிதர் மூலமாகச் சுன்னத்துச் செய்தே தீரவேண்டும்.

அநேக கொடிய வியாதிகள் தொடராததற்கும் விவாகத்திற்குப்பின் ஆண், பெண் புணர்ச்சிக்கு வேண்டிய சுகத்திற்கும் இது பயன்படுகிறது.

இவ்வுலகங்களாய் நிறைந்து மனித உருவமாகி மனிதனின் அறிவுப் பெருக்கமாதற்குப் பல காலங்கள் கழிந்தன. மனிதப் பெருக்கால் அவனவன் விரும்பிய அனுபவங்களை அனுபவிக்கத் தடையேற் பட்டபோது அத்தடைகளைத் தகர்த்தெறிந்து, இருப்பனவற்றை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்து ஆளத்தெரியாத அறிவில்லா அக்காலத்திலிருந்து, அறிவுப் பெருக்கமாகிய இக்காலம் வரையிலும் ஏற்பட்ட பேதங்கள் எவை என்றால் அது: விரைவு, துன்பம் துணிவு, கொலை, களவு, உட்பகை, தோல்வி, சோர்வு, மரணம், பிறர்க்குதவி செய்தல், செய்யாமை, வழக்கிடுதல், பிறனில் விழைதல், விருந்தோம்பல், சொற்பொழிவு—வறுமை, பொறுமை, பெருமை, இரக்கம், உருக்கம், கெஞ்சல், கேட்டல்—தொழில், வியாபாரம், நுட்பம்—பொய், மெய், முன்னோர் வழக்கம், வைத்தியம், முதுமைத் தன்மை—ஏழ்மை சேகரித்தல், சேர்த்தல், ஏழை தனவந்தர்—உழைப்பு, படிப்பு, வெறுப்பு—பக்தி, யோகஞான தவங்கள்—வேத, மத, போத பேதங்கள் அறிவாளி, அரசர் ஞானிகள் என்ற அநேக விதமான நிர்வாகங்களும், பேதங்களும் ஏற்பட்டு விட்டன. இவை ஏற்படக் காரணம் என்னவெனின் பசி நீக்கித் தன் உடல் நுகர்ச்சிகளை நன்றாக அனுபவிப்பதற்காகவே.

# 23 பாடல் நடிப்பு உற்பத்தி விளைவுகள்

உணவு, தூக்கம், புணர்ச்சி இவைகள் குறையில்லா காலங்களில் நடிப்பும் இனிய குரலும் உண்டாகும்.

முதன் முதல் மக்கள் உணவிற்கு யாதொரு தடையுமின்றி வயிறு நிரம்பிய ஆனந்தத்தில் குரலிட்டுக் கைதட்டி, உடம்பை ஆட்டி மகிழ்ந்ததால் உண்டான களிப்பின் மிகுதியால் ஓய்வு வேண்டி உறங்கினார்கள். இன்றைக்கும் மலைநாடுகளிலுள்ள காட்டு மனிதர்களிடமும் மற்ற உயிரினங்களிடமும் இச்செய்கை இருந்து வருகிறது.

இன்னிசை, மேளதாளங்கள் ஏற்பட்டதும், உடம்பை ஆட்டி நடிப்பது அறிவில் நாணமாகத் தெரிந்ததால் தோல், துணி, மண் இவைகளால் பொம்மைகளைச் செய்து அவற்றை இசைக்குத் தக்கவாறு ஆட்டி மகிழ்ந்தார்கள்

அதன்பின் ஒழுக்கக் கதைகள் ஒவ்வொன்றாக ஏற்படுத்தி அதைப் பொம்மலாட்டக் கூத்தாக நடத்தினார்கள். அதன்பின் ஆண்களே பல வேடங்கள் தாங்கி நாடகமாக நடித்து வந்தார்கள்.

தற்காலத்தில் கற்பனையினால் களவு, மருள், பகைமை, காமம், சூழ்ச்சி, நிரம்பிய நாவல்களாக எழுதி; அவற்றை ஆண், பெண்கள் அறிவு நாணத்தை மறந்து நடிக்கும் நாணமிலாச்செய்கைகள் இன்று நிரம்பிவிட்டன. சில நாவலும் கதையும் சிறிது காலத்திற்குப்பின் மக்கள் உள்ளத்தில் இடம்பெற்றுக் கொண்டாடும்படி ஆகின்றது. அதனால் கோயில்களும் கல்லறைகளும் தோன்றுகின்றன.

பணமே முதன்மை எனக்கருதிச் சிறு தீங்கு விளைவிக்கும் குடி, சூது, விபசாரம் இவைகளை மக்களுக்குக் காமச்சேட்டை உண்டாகக் கூடியவிதத்தில் பெண்களை அலங்கரித்துப், பாட்டு நிர்வாண நடனங்களோடு படம் பிடித்து, மக்கள் பார்வை படும் இடங்களிலெல்லாம் காமத் தீ மூட்டக் கூடிய கவர்ச்சியான வர்ணப்படங்களை ஒட்டி, மக்களைச்

கெடுக்கும் நாடக மேடைகள் மிகுந்துவரும் இத்தகைய அறிவு ஆராய்ச்சியில்லாப் பொருள் தேடும் முறைகளால் கேவலத் தொழிலென்று ஒதுங்கி நிற்கும் விபசாரத்திற்கு ஆதரவும் சம்மதமும் ஏற்படுகின்றன. இச்செய்கைகளைக் கண்டிக்க எல்லோரும் முன் வருதல் வேண்டும்.

**வெறியில்லாக் கட்குடியால் உலகத்திற்கு**
**லாபம் மூன்று பங்கும், நாடகப் படக்காட்சியால்**
**உலகத்திற்கு நஷ்டம் ஆறு பங்குமாகும்.**
**குடியைக் காட்டிலும் ஒழுக்கக் கேடான நாடக**
**நடிப்புப் படக்காட்சியை ஒழிப்பதே மேல்.**

**கட்குடி:**—குடி குளிருக்கும், உடல் உழைப்புக்கும், உறக்கத்திற்கும் ஏற்பட்டதாகும். ஒரு மனிதன் பெரும் உழைப்பாளியாக இருந்து குடித்துவிட்டு வெறியில்லாமல் படுத்துவிடுவானாகில், நல்விதமாக உறங்கி எழுந்திருக்கையில் உடல் அலுப்புத் தீர்ந்துவிடும். அதனால் பெரு முயற்சியாளர்களாகிய அறிவாளிகள் குடிக்கவேண்டும் என்பது பொருந்தாக் கூற்றாகும். சாதாரண மக்கள் குடித்துக்கொள்வதில் 3 லாபம் உண்டு. (1) உடல் உழைப்பால் ஏற்படும் அலுப்பைத் தீர்த்துக்கொள்வது. (2) தன் நினைவில்லாமல் நன்றாகத் தூங்கி விடுவது. (3) நாம் குடித்து விட்டோமே என்று உணரும் அறிவு இவைகளாகும். நாடகப் படக்காட்சியால் உலகத்திற்கு ஆறு வகைக் கேடுகளுண்டாகின்றன. அவையாவன: கண் விழிப்பு, வியாதி, மரணம், அழிதல், கெட்ட எண்ணங்கள் உற்பத்தி, உடலுழைப்புக் குறைதல் ஆம். இவ்வாறு குடியால் 3 லாபங்களும், நாடகப் படக்காட்சியால் 6 நஷ்டங்களுமாகும்.

என் உளத் தமருஞ் செல்வப் பெண்மணிகளே! பெண்கள் நாணமில்லாது நடிப்பதையும், வியாபார விளம்பரங்களில் உடை ஒழுக்க மில்லாப் பெண் உருவமுள்ள படங்(லேபில்) களை அச்சிடுவதையும் அதைக் கண்பார்வை படும் இடங்களில் ஒட்டு வதையும் அரசாங்க அதிகார மூலமாகத் தடுக்க முற்படுங்கள்.

# 24 ஒழுக்கம்

கட்டடம் உயர உயர அடிப்படை பெருத்தும், வலுத்தும் இருக்க வேண்டியதுபோல் அறிவு ஓங்க ஓங்க ஒழுக்கம் உயர் நடை பெருந்தன்மை மிகவேண்டும்.

இருப்பு, நடை, பார்வை, சொல், உடை ஒழுக்கத்தோடு இருப்பதோடு, மிக மறைவாய் மலங்கழிப்பதும், முழங்கால் வரை உடையால் மறைத்துக் குளித்தலும் வேண்டும்.

ஆண்கள் எவ்வித நகைகளும் அணியலாகாது. 30 வயதிற்கு மேற்பட்ட ஆண்கள் 10 வயதிற்கு மேற்பட்ட பெண்களுடன் நாடகம் நடிப்புக்குச் செல்லக்கூடாது.

செபம், பூசை, விரதமிருத்தலும், பல குறிகள் சரீரத்தில் இடுதலும், தாயத்துக்கள் கட்டுதலும், சூரியன், தீபம், நாணயங்கள், படங்கள், சிலை, சமாதிகளை வணங்குவதும் கூடாது.

உணவு உண்போர் முன்னும், விருந்து நடக்கும் இடங்களிலும், பெருங் கூட்டங்களிலும் துப்புதலும், மூக்குச் சிந்துதலும், மலக்காற்றை விடுதலும் கூடாது.

நகங்களை வாரந்தோறும் குறைக்கவேண்டும். அதனால் கெட்ட அழுக்குகளும், நகத்தினுடைய நஞ்சும் உடலுக்குள் செல்லாது. உண்ட உணவு செரியாததால் உண்டாகும் நோய்கள் உண்டாகா.

சவரம் அடிக்கடி செய்துக் கொள்வதில் உடலில் உஷ்ணம் ஏற்படும். முகம் அழகாக இருக்கும். அலுவலுக்குத் தக்கபடி சவரம் செய்துகொள்வது மிகவும் நல்லது. தலைமுடியை மிகுதியாக வளர்க்காமல் அரை அங்குலம் வரை வைத்து, அழகு படுத்திக்கொள்வது நல்லது. பிறருக்கு உற்சாகம் கொடுப்பதோடு நீர்க்கோர்வை ஏற்படாது. ஆண்கள் தலைமுடியை மிகுதியாக வைப்பது கூடாது. கத்தியால் சவரம் செய்வதினால் உடல் சூடு மிகும். கத்திரிக்கோலால் வெட்டுவது நலம்.

வயிற்றில் சிறுநீரைத் தங்க விடாதபடி நல்லபடியாக வெளிப்படுத்திக் கொள்ளவேண்டும். அதனால் நீர்க்கடுப்பு

உண்டாகாது. நாள் ஒன்றுக்கு ஒரு முறையாவது மலம் கழிய வேண்டும். அப்படி முடியா திருந்தால் மாதம் ஒருமுறை அல்லது இரு முறையாவது, வயிற்றில் நோய் உண்டாக்காத பேதி மருந்துகளைச் சாப்பிட்டுக் கொள்ளவேண்டியது. அடிக்கடி பேதிக்குச் சாப்பிட்டால் குருதிப் பெருக்கங் குறையும். குருதியுங் கெடும். கீரை, சூப்பு, வெறுங்காப்பி இவைகளால் மலச்சிக்கல் நீங்கும்.

ஒரு மனிதன் தினம் சுமார் மூன்று நான்கு மைல் நடப்பானுனல் அவன் உடல் நலமாயிருக்கும்.

மாதவிடாயாகும் காலங்களில் மெத்தையில் படுப்பதும், கிணற்றில் இறங்கிக் குளிப்பதும், பொது இடங்களில் செல்வதும் கூடாது. தண்ணீர் இறைத்துக் குளிப்பதும் மிகப் பாதுகாப்போடு இருப்பதும் பெண்களின் பொறுப்பு ஆகும்.

படுக்கைக்குப் போகுமுன் கால், கை, முகம், அக்குள், பெரும் அறை, இடை, பல் இவைகளைத் தவருது நன்ருகக் கழுவி விட்டுப் படுக்கைக்குச் செல்க. அதனுல் மிக நன்மையும் நல்ல உறக்கமும் உண்டாகும். மூலம், படை, அரிப்பு, தலை நோய்கள் ஏற்படா.

உண்ணும்போதும் உறங்கும்போதும் மலம் சிறுநீர்
கழிக்கும்போதும் நன்மையான ஆராய்ச்சியில்
இருக்கும்போதும் தன் மனைவி மக்களுடன் மகிழ்ச்சியாய்
இருக்கும்போதும் தவத்தில் இருக்கும்போதும்
மெய்யுணர்வாளர்கள் கவலை, மகிழ்ச்சிக் குறைவு,
மனத்துன்பம், பயம் இல்லாமல் இருந்துகொள்ள வேண்டும்.

இப்படி ஒரு மாதகாலம் பழக்கப்படுத்திக் கொண்டீர்களானுல் எல்லாம் உங்களுக்குத் துணையாகவே நடந்தேறும். இவற்றை எல்லோரும் நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டியது இன்றியமையாதது.

## 24/1 போதனை

ஆடுகளும், மாடுகளும், மான்களும், யானைகளும், ஒன்று கூடிப் பெருங்கூட்டமாக, மேய்ந்திட்ட போதிலும்

அங்கு அஞ்சாத நெஞ்சம் கொண்ட, சிறுத்தை, புலி, சிங்கம் ஒன்று வந்தால் சிதறி வெருண்டு எல்லாம் ஓடுவது போன்று; நற்குணம், புத்தி, ஆராய்ச்சி, அறிவு, பெருகியபோது, மடமை, சினம், காமம், உட்பகை யாவும் ஒழிந்து, ஈசனைப் பிரகாசிப்பீர்கள்.

எத்தீங்குடையோரையும் தீங்குடையோர் என்று
நினையாத நம் நன்னெஞ்சத்தால், எவர் தீங்கும்
நமக்குத் தீங்களிக்காததோடு, அத்தீங்குடை யோரையும்
அத் தீய செயலினின்றும் விலக்கும்.

குற்றமுடைய குணங்களை நீங்களே சேர்த்துக்கொண்டு ஒன்றுமில்லாச் சக்தியின் பேரில் குறை சொல்லாதீர்கள். பொருளுடையவர்கள் இவ்வுலகத்தில் திருடர்களுக்குப் பயப்படுவதுபோல, அருளுடையவர்களாகிய நீங்கள் குறையுள்ள குணங்களுக்கு இடம் தராதீர்கள்.

பிறர் குற்றத்தைக் குற்றம் என்று நினையாது, தான் எக்குற்றமும் செய்யாது, அதனால் தான் பெரியோன் என்று நினையாது இருப்பதே பெருந்தன்மையாகும்.

மாவும் தென்னையும் ஒன்றாய் வளர்ந்தால்,
தென்னை உயரும், மா படரும். அதைப்போல்,
அன்பில் பரவி, அறிவில் உயர்ந்திருங்கள்.

ஊரையும் பெயரையும் சொல்லிப் பேசுவதாயிருந்தால்
நல்ல பொருளைக் குறித்தே பேசுங்கள்,
கெட்டதைப் பேசும்போது ஊரையும் பெயரையும்
சொல்லாது பேசுங்கள்.

நடுப்பகலும் நடுநிசியும் நெடுநேரம் நிலைப்பதில்லை
அதேபோல் உலகத்தின் நெருக்கடியும் மனிதர்களின்
துன்பங்களும் நெடுங்காலம் நிலைத்திருக்கா.
வறுமையில் பொறுமையுள்ளோர் வல்லவர் ஆவார்.

*எவனொருவன் தன் மதத்தில் ஒழுக்கமுடையவனோ, அவன் பிற மதத்தைக் குறை சொல்லாதவனாவான்.*

*நெருப்பு வெப்பத்தின் சுடர், அலையால் மக்களுக்கு மிகுந்த கொதிப்பு ஏற்படுவதுண்டு. அதுபோல நாகரிக உடைகளால் காம அலைகளைப் பரப்பாதீர்கள்.*

*நல்ல காற்றின் அலைகளின் நலம் போன்று, உயர் நடை ஒழுக்கத்தால் மதிப்பாகிய அலையை நிரப்புங்கள், பரப்புங்கள்.*

என் இருதயச் செல்வர்களே! செல்விகளே!
யாவற்றிலும் சீராய் சிறப்பாய் நடந்து கொள்ளுங்கள்.

சீர் கேட்ட காரியங்களில் சிறிதளவாவது உங்கள் செருப்பைக்கூட நழுவ விடாதீர்கள். இவர்களே என் இருதய மலர்கள். நழுவ வைத்திட வேண்டுமென்று நினைப்போர் முன் செருப்பை அழுத்தி நடங்கள். அப்போது நீங்களும் சிறப்பாளர்களே, அவர்களும் சீராவார்கள்.

வீண் ஆடம்பரத்தைச் சுருக்கி அறிவைப்
பெருக்கிக் கொள்வது உண்மை நிலை.

*கருவைக் காப்பது பெண்களின் கடமை. கற்பைக் காப்பது தம் குலத்திற்கழகு.*

கொடை கொடுக்கும் நெஞ்சமும் பொருளிருப்பிருக்கும்
இருகண்ணின் கருணையும் அறிவறிந்து ஒப்புக்கொண்ட
நன்னடையும் நய வஞ்சக வேறு பாடில்லாச்
சொல்லினிமையும் நான் கொண்டேன்னை
மணந்த என் இருதய மலர்களாகிய
மெய்யுணர் வாளர்களிடம் இருக்கும்.

சுவாமி ! *என்னிடத்தில் பயப்படுகிறீர்களே !*

அம்மா ! *மிக மகிழ்ச்சி. நான் எப்போதும் பயந்தவன் அல்லன். உலகத்தின் கண் காதையே பாதுகாக்கின்றேன்.*

அரசும், வேம்பும் பின்னி வளர்ந்தாலும் சுவை தோற்றம் மாறாததுபோல், அறிவுடையோரைச் சார்ந்தும் வேறுபாடு தீயகுணங்கள் ஆகியவைகளை மாற்றாமல் இருந்திடாதீர்கள்.

பல நாடுகள் சுற்றித்திரிந்து பழகிப் பார்க்கப் பார்க்கப் பலவகை உணவுகளின் செயலால் பக்தியின் முடிவறியா-பணத்தாசையின் அளவறியா—வயதின் முடிவறியா—வந்த மனுவகையறியா-தன்னியல்பு தானறியாது தத்தளிக்கும் மக்களுக்குமேல் அறிவையூட்டும் வகை எது? பணத்தின் பெருக்கத்தாலேயோ? பண்டை முறை, சொல், செய்கை ஆகியவற்றின் திறமையாலேயோ? பல வேடம் பூண்ட சந்நியாசுக் கோலத்தாலேயோ? என்று யோசிக்கும்போதே—போதும்! போதும்!! இவைகளின் ஒரு நிலைப்பாடு அறியாமல் அறிவு கெட்டு மடிந்ததெல்லாம் இம்மூன்றாலேயே. அவனவனின் உள்ளுள்ள அறிவை யறிவித்து விட்டால், அவனவன் அனுபவத்தாலேயே எல்லாம் முடியும்.

---

# 25 சத்சங்கம்

மக்கள் கூட்டுறவாக வாழும் உலகத்தில், அவர்களுக்கு காலம், பருவம், சூழ்நிலை மானாபிமானங்களால் கேடுகள் வராமலும், பின் சூழ்நிலையைப் பாதிக்காமலும் அவர்களின் உடல்களில் தோன்றும் பசி, சாந்தம், காமம், குரோதம், உலோபம் (பற்றுள்ளம்) மோகம், மதம், மாச்சரியம் (உட்பகை-பொறாமை) ஆகிய இவைபோன்ற உணர்ச்சிகளை அளவோடு அனுபவித்தற் குரிய அறிவை அறிவிக்கும் கூட்டங்களின் பெயரே சத் சங்கங்களாகும்.

முற்காலத்தில் ஏனைய உயிரினங் (ஜீவராசி) களைப் போலவே மக்களும் இருந்தனர். நாளடைவில் மக்கள் கூட்டம் பெருகியதிலிருந்து, அவர்களுக்கு ஏற்படும் உணர்ச்சிகளை அறிந்து அனுபவித்துக் கொள்ளவேண்டிய இடம், பொருள், ஏவல் போன்ற வசதிகள் குறைந்து வந்தன. அக்

குறைகளை நிறைவு செய்துகொள்ள வேண்டிச் சிந்தித்தார்கள். அச்சிந்தனையால் அறிவின் திறமை நாளுக்கு நாள் கூடி வந்தது. பின்னர் அவற்றைத் தேடவும் சேகரிக்கவும் பாதுகாக்கவும் முற்பட்டதோடு எந்தக் காலங்களில் எப்படி அனுபவிப்பது என்கின்ற விதிகளையும் ஏற்படுத்திக்கொண்டார்கள். அந்த விதிகளின் அளவைத் தெரிந்துகொள்ளும் பொருட்டும், அளவிற்கு மீறி அனுபவிக்கும் இன்பங்களால் பின்வரும் கேடுகளை (எச்சரிக்கையாய்) முன் கூட்டித் தெரிந்துகொள்ளும் பொருட்டுமே சத்சங்கங்களின் கூட்டுறவு அடிக்கடி ஏற்படவேண்டியது அவசியமாயிருக்கிறது. இத்தகைய சத்சங்கங்களால் உலக மக்கள் நல்லறிவு பெற்று, நல்வாழ்வு வாழ வாய்ப்புகள் ஏற்படுகின்றன.

இதைத் தவிர்த்து சத் சங்கங்களென்று பெயர்வைத்தும் அதில் சேர்ந்தும், இயற்கையாக எழும் உணர்ச்சிகளை அடக்க முற்படுவதும், அவ்வுணர்ச்சிகள் முழுமையும் அடக்கப்பட வேண்டுமென்று பொதுமக்களுக்குப் போதிப்பதும், போதித்தவாறு தான் செய்ய இயலாதபோது தானும் தம்மைச் சார்ந்தோறும் குற்றங்கள் செய்யத் துணிந்துவிடுவதுமாகிய சங்கங்களால் உலகில் அதிகக் குறைபாடுகள் ஏற்பட இடமாகின்றன. இத்தகைய சங்கங்கள் ஏற்படாமலிருப்பதே மக்களுக்கு நன்மை பயக்கும்.

மேற்கண்ட உணர்ச்சிகள் யாவும் உடலில் தோன்றி எழுவது இயற்கை. அதில் ஏதாவது ஒன்று இல்லை என்றாலும், அல்லது குறைவு என்றாலும், அவர்கள் உடலில் ஏதோ கோளாறிருப்பதாகக் கருதவேண்டும். இயற்கையாக எழும் உணர்ச்சிகளை காலம், இடம், பொருள், ஏவலுக்குத் தக்கவாறு அனுபவித்தற்குரிய திட்டத்தைத் தெரிந்துகொள்வதுதான் அறிவின் மேலான உணர்ச்சியாகும்.

**உதாரணம்:**—மக்களுக்குக் காம இச்சை இல்லை என்றால் அவர்கள் பேடி-அலி ஆவார்கள். அவர்களின் மூளையில் கோளாறிருக்கும். அவர்களால் நன்கு அறிவோடு வேலை செய்ய இயலாது. மக்களுக்குக் காம இச்சை உண்டாவது

இயற்கை. உண்டானதும் அதை அனுபவிக்க வாய்ப்பில்லாத-அறிவின் கட்டுப்பாடுள்ள - உகைமாக இருப்பதால், அந்தக் கட்டுப்பாட்டிற்கேற்ப பருவ வய்தானதும் தத்தமக்கு வேண்டிய பெண்ணை, அல்லது ஆடவனை மணந்து கொள்ளவேண்டும். அதுவரை பொறுமையும், கட்டுப்பாடும், முயற்சியும் வேண்டும் என்பதை, விளக்கமாக அறிந்து அனுபவித்தற்கே சத்சங்கங்களின் கூட்டுறவு வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லுகிறோம். எனவே இத்தகைய சத்சங்கங்களில் கூடி நன்மை பெறுவீர்களாக.

---

# 26 கல்வி

## மொழி தோன்றுதல்

எண்ணிய எண்ணங்களையும் கண்களால் பார்த்தவைகளையும், காதுகளால் கேட்டவைகளையும், மீண்டும் ஞாபகத்திற்குக் கொண்டுவர வேண்டியதற்காகச் சமயத்திற்கேற்பச் சைகை, குறிகள், புள்ளிகள், நீண்ட கோடுகள், நெளிவு கோணல் சுழித்த கோடுகள் ஆகிய இவை ஏற்படுத்தப்பட்டன.

பின்னால் அந்தந்த, தேசங்களின் தட்ப வெப்பத்திற்கேற்ப உச்சரிக்கும் வார்த்தைகளுக்கு இசைவாகவும், கருத்துகளுக்குத் தக்கவாறும் அக்கோடுகளுக்குப் பேர் வைக்க எழுத்தாகியது. உதாரணம்:—படியாத குழந்தைக்கு எழுத்தைக் காண்பித்தால் அது உண்மையாகக் கோடுகள் என்றே சொல்லும்.

நெடுங்காலம் உழைப்போடு அனுபவ வாயிலாகக் கண்டு பிடித்த விவரங்களைப் பின்வரும் மக்கள் எளிதில் அறிந்து, ஒவ்வொரு துறையிலும் முறையாக நடந்து கொள்ளவேண்டியதற்குப் படிப்பு அவசியம்.

எந்நாட்டு மொழியும் எழுதப் படிக்கத் தெரிந்திருந்தால் அங்குள்ள கருத்தைத் தெரிந்து கொள்ளவும் தன் கருத்தை அந்நாட்டினர்க்குத் தெரியப்படுத்தவும் உதவியாயிருக்கும்.

எந்நாட்டு மொழி யாயினும் தன் அனுபவத்தில் புரியக் கூடிய மொழியா யிருப்பின் அது தன் மொழியேயாகும்.

நடைமுறையி லிருக்கும் மொழியை நீக்கிவிட்டு ஒவ் வொரு நாட்டு மாகாணங்களிலும் அவ்வக் காலங்களில் வரும் அரசியலார்கள் அவரவர்தம் நாட்டு மொழிப் பற்றால் வேறு மொழியைக் கொண்டு வருவது எதைப் போன்று என்றால் விளைந்திருக்கும் வேளாண்மையை அனுபவிக்காது அழித்து விட்டு மறு வேளாண்மையை விளைவிக்கும் சிரமத்தைப் போன்று, மக்களுக்கு என்றைக்கும் துன்பத்தையே விளை விப்பதாகும்.

தற்போது உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலும் பெரும் பாலும் ஆட்சி முறையில் அனுபவத்தில் இருக்கும் எந் நாட்டு மொழியாயினும் சரி, அம்மொழியை எல்லோரும் எழுத, படிக்க, பேசக் கற்றுக் கொள்வது வீண் காலக்கழி வைத் தடுத்து நன்மை பயப்பதாகும்.

அரசியல் அலுவலுக்காகவும் உழைப்பில்லாது இருந்த இடத்தில் பொருள் தேடுவதற்காகவும், மற்றவர்களைத் தன் ஆணைக்குட் படுத்துவதற்காகவும், புகழுக்காகவும் படிப்பே தலைமையாகக் கருதுகின்றனர். அதனால் படிப்பு பெருகி வருகின்றது.

## 26/1 விவேகமில்லாக் கல்வியால் விளையும் தீங்குகள்

ஏழைகள் மிகத் துன்பங்களின் வாயிலாக 100-க்கு இரண்டு பேர்கள் பணக்காரர்கள் ஆவது போன்று; தனி ஒரு எழுத்துக்கோ. செப, மந்திர, யந்திர எழுத்துக்களுக்கோ மரியாதை கொடுப்பதில் நூற்றுக்கு இரண்டு பேர்களுக்கு அறிவு வளர்ச்சியாயினும் 98 பேருக்கு அறிவு அடிமைப் படுகிறது. ஆகையால் செப, மந்திர, யந்திர எழுத்துக்களுக்கு யாதொரு மரியாதையும் கொடுக்காதீர்கள்.

தனக்குப் புரியாத மொழியைப் படிப்பதாலும் மனதில் நெட்டுருச் செய்வதாலும், அதைப் பெரும் மரியாதையாகக்

கருதிப் பேசுவதாலும் தன் ஆராய்ச்சி குறை படுவதோடு மற்ற மக்களையும் வீண்காலப் போக்கிற்கு ஆளாக்குகின்றனர்.

படிப்பின் காரணத்தால் உடல் அழகாக அமைவதோடு ஆராய்ச்சி அறிவு பெருகுகிறது. அந்தந்த நாடுகளில் உள்ள வெப்ப தட்ப நிலைக்குத் தக்கவாறு வயது வந்த குழந்தைகளை அந்தந்தப் பருவத்தில் விவாகம் செய்து முடிக்காமல் வைத்திருப்பதிலும், பெண்குழந்தைகளைப் பருவ வயதுக்கு மேல் படிக்க வைப்பதிலும், அக்குழந்தைகள் தம் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டித் தம் இச்சா சக்தியை அடக்கிப் பொறுமை கொள்வதிலும் ஏற்படும் கனலால் அநேக கொடிய வியாதிகள் உண்டாகின்றன.

**தாசி வீட்டில் பேசும் கிளிக்கு உள்ள மரியாதையை விடத் தாழ்ந்ததே ஆராய்ச்சி இல்லாப் படிப்பாளிக்கு உள்ள மரியாதை.**

தன் அறிவுக்குப் பொருத்தமாயுள்ள விவேகமாய் இருந்தாலும் அதை ஏற்றுக் கொண்டால் தன் வழக்கத்தை விட வேண்டுமே என்ற எண்ணத்தால் சமய அறிவாளிகள் இடையில் ஒருவருக்கொருவர் அமைதியில்லா வீண் குழப்பத்தால் ஏற்படும் பாதகச் செயல்களால் விவசாயிகளும், தொழிலாளிகளுமே கேடுறுகின்றார்கள்.

ஓ, கல்வி ஆராய்ச்சி உத்தியோக அறிவாளிகளே! உங்களுக்கு வேண்டிய ஆகாரத்திற்குச் சத்தும் ருசியுமாயுள்ள விளை பொருள்கள் இன்றியமையாதன. விவசாயிகள் உங்கள் நிலைமையையே பெரிதாகக் கருதிப் படிக்க முற்படுவதால் ஆகாரப் பொருள்கள் விளைவிக்க வேண்டிய விவசாயிகள் இவ்வுலகில் குறைந்து கொண்டே வருகிறார்கள்.

மூளை அறிவு நன்றாயிருந்தாலும், தலைக்குக் கீழுள்ள அவயவங்கள் நன்றாயிருந்தாலே பயன்படுவதுபோன்று, உடல் உழைப்புள்ள தொழிலும் உழவும், விளைவும் இருந்தாலே அறிவோடு கூடிய ஆணை பிறப்பிக்கும் அரசாங்கம் நிலைக்கும்.

அரசர்களும் உழவர்களும் ஒரே நிலையில் இருக்க முற்படுங்கள். உழவர்கள் தங்கள் உழவுத் தொழிலை விட முற்

படவே மாட்டார்கள். நிலத்தை உழும் கலப்பைகள் குறைந்து, கடுதாசுகளைக் கீறும் பேனாவாகிய கலப்பைகள் கூடிவிட்டதால் பஞ்சம் ஏற்பட்டு இரக்கம் மிகுந்துவிட்டது. பேனாக்களைக் குறைத்துவிட்டு எக்காலத்திலும் கலப்பை களை மிகுதிப் படுத்துங்கள்.

அரசியலார் உழவர்களுக்கு வேண்டிய உணவு, உடை, குடியிருப்பிடம் ஆகியன குறையில்லாது கவனிக்கவேண் டியது முதற் கடமையாகும்.

கோயில் சமாதிகளைப் பெருக்கி ஆராய்ச்சியைக் குன்ற வைப்பதுபோல், படிப்புக்கு வேண்டிய பள்ளிகளைப் பெருக்கி விவசாயத்தைக் குறைத்து விடாதீர்கள்.

## 26/2 மறை வல்லுநர் (வேதாந்தி)

ஞானிகள், முக்காலம் உணர்பவர்கள், சமய குரவர்கள், அறிவாளிகள் ஆகியோர் சொல்லை, அநேக எடுத்துக்காட்டு களுடன் விளக்கிக் காட்டுபவர்கள் மறைவல்லுநர் (வேதாந்தி கள்) ஆவார்கள். பல நூல்கள் படிப்பதைவிட, ஒரு வேதாந்தி யின் சொல்லைக் கேட்பது மேல். படித்த படிப்பை அவ் வேதாந்தி உணர்வானானால் அறிவாளியாகப் பிரகாசிக்கலாம். படித்தும் உணராது போனால் பல நூல்களுக்குப் பதிலாக மக்களுக்கு அவன் ஒரு நூலாக உதவுகிறான்.

## 26/3 செய்தித்தாள் ஆசிரியர்கள்

**செய்தித் தாள் ஆசிரியர்களே!** உங்களுடைய பேனா முனை

**பேனாமுனை**

யினால் உலகத்தை அழிக்கவும் தகுதி ஆக் கவும் செய்யலாம். அழிவை விட்டு தகுதி யான ஆக்கத்தையே விரும்பி எழுதுங்கள்.

உலகிலுள்ள எல்லா மக்களையும் நல்வழியோடு கூடிய ஒரு நிலையான சீர்திருத்த அறிவுக் குள்ளாக்குவதோடு, தொலை தூரத்தில் ஏற்படும் அறிவுப் பெருக்கமாயுள்ள வியக்குஞ் செய்திகளை எல்லோருக்கும் விரைவில் அறிவிப்

பதிலும், யாருக்கும் வெறுப்பு, துன்பம் ஏற்படாதபடி பெரும் முக்காலம் உணர்பவர்களின் (தீர்க்கதரிசிகளின்) தன்மையைக் காட்டிலும் மிக நுட்ப ஆலோசனைகளோடு காலம் இடம் ஆகியவற்றிற் கேற்பப் பொது நிலையாய் எழுதி வெளியிடுவதிலும் முற்படுங்கள்.

**உங்களுடைய நன்னோக்கத்தால் உலகில் சண்டைகளே ஏற்படாது.**

## 26/4 நூல்கள்

ஆராய்ச்சி அனுபவச் செயலில் உள்ள நூல்களால், மற்றவர்கள் அதன்படி அனுபவிக்கவும், கடந்த அனுபவத்திற்கும் மேல் சீர்திருத்தங்களைச் சுலபமாய்க் கண்டு பிடிக்கவும் வாய்ப்பு உண்டாகிறது.

முன் கற்பனை நூல்களை உதாரணம் காட்டி, பெருகும் கற்பனை நூல்களால், ஆராய்ச்சியில்லாத மக்கள் வியப்போடு நம்ப உதவியாய் இருப்பினும் செயலில் பயன்படாது.

## 26/5 ஏமாற்றுகிறவர்கள் எழுதும் நூல்கள்

இயற்கைக்கும் அறிவிற்கும் பொருத்தமில்லாமலே ஏமாற்றுகிறவர்கள் நூல்கள் எழுதுவார்கள். இந் நூல்களை நம்புகிறவர்களின் முயற்சியும், காலமும், பொருளும் வீண் விரையமாகும்.

## 26/6 ஏமாற்றம் அடைந்தவர்கள் எழுதும் நூல்கள்

கேள்வியால், படிப்பால் ஏமாற்றமடைந்தவர்கள் தங்களுக்குத் தாங்களே கற்பனை செய்துகொண்ட எண்ணத்தின் பிரதி பலிப்பில் தோன்றிய தோற்றங்களை நம்பி, ஆராயாது, அவர்கள் எழுதும் நூல்கள் எல்லாருடைய அனுபவத்திற்கும் ஒத்ததாயிராததோடு செயலிலும் பயன்படாது போகும்.

## 26/7 கற்பனை

அந்தந்தக் காலத்திற்குத் தக்கவாறு கற்பனையைக் கற்பித்து விடலாம். ஆனால் அந்தக் கற்பனையைக் கற்பனை

என்றறிய மக்களுக்கு மிக்க கால தாமதமும் துன்பமும் ஏற்பட்டு விடுகின்றன. கற்பனையை ஒழிப்போரே வீரமும் அறிவும் நிறைந்தோராவர்.

கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்துப் போரிடும் சிட்டுக் குருவி அலுத்து மயங்கி விழுவது போன்று, கற்பனைக் கதைகளை நம்பி உண்மையை ஏற்றுக்கொள்ளாது வழக்கிட்டு மருள், பகை அறிவின்மையோடு மாளாதீர், உலகீர்!

**நாக்குமுனை**

உலக நல்லடியார்களே! உங்களின் அன்பான சொற்களால் எவருக்கும் பொறுமையும் ஒற்றுமையும் விளைவிக்கலாம். நீங்கள் நற்பார்வையுடன் பெருந்தன்மையாய்ப் பேச முற்படுங்கள்.

**சுழிமுனை**

**ஓ வீரர்களே! ஆராய்ச்சியாளர்களே! விவேகிகளே! உங்கள் நெற்றிக்கண் சுழி முனையால் வீரமும், விவேகமும், பேரின்பமும் அடையவாரீர்! நீங்கள் எதிலும் சீர்திருத்தவாதியாயிருந்து உலகிலுள்ள துன்பத்தைப் போக்க முற்படுங்கள்.**

---

# 27 மதி விதி வினை

மதியால் உண்டாகும் சட்டங்களே விதியாகும். விதி என்ற சட்டங்களின்படி நடப்பது அல்லது நடவாத தவறுகளே வினையாகும்.

பருவம், வயது, ஆண்மை, சூழ்நிலை, உத்தியோகம், பதவி சமயம், இருக்கும் இடம்—இவைகளின் அந்தந்த எல்லைவரை அப்போதைக் கப்போது அங்கங்கு நடந்து கொள்ள வேண்டிய முறைகளுக்குத் தக்கவாறு நிர்ணயித்துள்ள சட்டங்களே விதியாகும். அதனால் வரப்பட்டுள்ள சுகாதாரம், உடல் நலம், வினைபொருள், பெருமதியான லாபம், அதனால் உள்ள பயன் எல்லாம் விதி எனப்படும். இவைகளில் மறதியாலும், தவறுகளாலும் ஏற்படும் எல்லாவகைத்

துன்பங்களும் **வினை** அல்லது வினைப்பயன் எனப்படும். இதையும் விதி என்று சொல்லுவார்கள்.

கால பருவ சமய இடத்து வரையே ஒவ்வொரு விதியும் செல்லும். காலம், பருவம், சமயம், இடம் மாறும்போது விதியும் மாறும்.

**உதாரணம்** :—குழந்தையாய் இருக்கும்போது விதி வேறு. அவனே தகப்பனாகும் போது விதி வேறு.

தொழில் அனுபவ அறிவே மதி. மதியின் திட்டங்களே விதி. விதிகளின்படி நடப்பது அல்லது நடவாத தவறுகளே வினை.

இதைத் தவிர்த்து முன் பிறப்புக்களில் உள்ளபடியே நடக்கும் என்று சொல்வதும், அறிவாற்றல் இல்லாது எதையும் விதிப்படி நடக்கும் என்று சொல்வதும் தவறாகும்.

## 27/1 மதி (அறிவு)

எல்லாம் கடவுளாகவே இருக்கின்றன.
கடவுளின் செயலாற்றல்கள் கடவுளைத் தேடுகின்றன.
செயலாற்றலின் அனுபவ அறிவு கூடி அனுமானிக்கும்
யூக அறிவால் எல்லாம் கடவுளாக இருக்கின்றதை
அறிந்துகொள்வதே முக்தியாகிய ஞான முடிவு.

அறிவின் அறிவால், அறிவின் தெளிவால்
தெளிவிலும் தெளிவாய்த் தேர்ந்தது ஞானம்.
ஞானமே உணர்வு, உணர்வே உயர்வு உயர்வே
உணர்வை உணர்வது உங்களின் அறிவு. [உணர்வு

மதியே மனிதன், மதி மறந்த மனிதன்
மதி தேடும் மனிதன், மதியில் மதியாய்
அறிவோடு நிலைத்தவன் மனித ஈசன்

விதியென்ற விவகாரமற்ற சொல்லில்லா
மக்களிடமே எல்லா ஆட்சியும்.

அறிவை அறிய முற்படும் அறிவாளி, விதியென்ற சொல் சொல்வானுனல் அது வெறி பிடித்த நச்சுச் சொல்லே ஆகும்.

சிலையைப் போன்றது விதி, சிலையை எதற்காகச் செய்தது என்று அறியும் ஆற்றலில் சிலையும் மதியே.

ஒவ்வொரு துறை அனுபவத்திலும் தெளிந்த திடமுள்ளவர்களாகிய ஆசிரியர், வைத்தியர், கொத்தர், வாகன மோட்டி, ஆராய்ச்சி நிபுணர், ஆட்சியாளர், ஞானசிரியர் ஆகிய இவர்களை நம்பி உலகத்தோர் அவர்களுக்கு வேண்டிய காரியங்களிலும், ஓட்டும் வாகனங்களிலும் கூசாது, களங்கமற்ற துணிவுடன் செல்லவும், செய்யவும் முற்படுகிறுர்கள்.

பெருங் கப்பல் ஓட்டியின் எச்சரிக்கைக் குறைவால் ஏற்படும் அபாயம் அவன் ஒருவனை மட்டும் பாதிக்காமல் அவனை நம்பிய எல்லோரையும் பாதிக்கின்றது.

ஒவ்வொருவனின் எச்சரிக்கை (ஜாக்கிரதை)யால் மற்றவர்கள் தாம், தாம் குறித்த இடங்களுக்கு நலமாய்ப் போய்ச் சேருகிறுர்கள். அதைப் போன்றே அறிவின் நுட்பம், மேல் உயர்வுக்குத் தக்கவாறு அநேகவித அரசியல் அலுவலாளர்களின் விழிப்பால் அரசியல் நிர்வாகங்கள் யாவும் நடைபெறுகின்றன. எல்லாம் மதியுடன் இருந்தால் யாதொரு தாமதமும் அபாயமுமில்லாமல் நினைத்த காரியங்கள் எல்லாம் எளிதாய் நடந்தேறுகின்றன. ஆகையால் யாவற்றினும் சிறந்தது மதியே.

ஒருவன் வேகமாய் வண்டி ஓட்டிக்கொண்டே போகின்றுன். இதை அறியாத ஒருவன் குறுக்கே சென்று கொண்டிருக்கின்றுன். அதைக்கண்டு மற்றொருவன் வண்டியை எங்கு அவன்மேல் ஏற்றிவிடுகிறுனே என்ற பயத்தோடு நினைக்கிறுன். பாராது சென்று கொண்டிருந்த வண்டியோட்டி திடுக்கிட்டு விபத்து ஏற்படாது காப்பாற்றிக் கொண்டான். வெகு சுலபமாய் இதையறிந்து எழுதியும் விட்டான். இவ்வளவிலும் படிப்படியாக ஏக்கத்தோடு உயர்ந்திருப்பது மதி.

முற்காலத்தில் நூறு வருடங்களில் அனுபவித்த காரியங்களை இக்காலத்தில் ஒரே வருடத்தில் அனுபவித்து முடிக்கின்றார்கள். அக்காலங்களில் உடல் உழைப்பால் அறிவின் வளர்ச்சி மேன்மைக்கு வந்துள்ளது. இக்காலத்திலே நுண்ணறிவின் உழைப்பால் அறிவின் வளர்ச்சியும் மகிழ்ச்சியும் உண்டாகின்றன. இனி இவ்வுலகில் பிறப்போர்கள் முற்கால ஆயிரவருட அனுபவங்களை ஒரு வருடத்தில் அனுபவித்து முடிப்பார்கள். **உதாரணம்**:-கீழே வீழ்த்தும் அறிவிற்கு மேலாய அறிவு அதனினின்றுந் தப்பிக்க வழிகாட்டுகின்றது. இப்படியே அறிவினுடைய தெளிவு ஏற்பட ஏற்பட அத்தெளிவு மனித உடம்பில் அறியவேண்டியதை விரைவில் அனுபவித்து முடிக்கக் காரணமாயிருக்கின்றது.

அக்காலத்தில் 1000 மைல் தூரத்தைக் கடந்து செல்ல ஆறுமாதங்களாயின. விஞ்ஞான அறிவு பெருகி வருகின்ற இக்காலத்தில் 1000-மைல் தூரத்தை அரைமணி நேரத்தில் கடப்பதற்குரிய கருவிகளையும் நுட்பமான இயந்திரங்களையும் மனிதன் கண்டு பிடித்து விட்டபடியால், எந்தத் தொழிலை, எப்படிச் செய்வது, எவ்வளவு விரைவில் செய்வது எதை அறிவது எதை எந்த நேரத்தில் அனுபவிப்பது என்று காலத்தைக் காட்டுவதற்காகவே, கடிகாரங்களும், சங்குகளும், மணிகளும் ஓசைகளை எழுப்பி, நேரத்தைக் காட்டிப் பொழுதைப் பொன்னேபோலப் போற்றுங்கள் என்று எச்சரிக்கை செய்கின்றன.

ஒரு அறிவாளி கண்டுபிடித்த நுண் கருவியினால் பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு வேலையுண்டாகிறது. பார்க்கக் கூடியன எல்லாம் நுட்பமாக யந்திரங்களால் ஒருவன் செய்து முடித்தபோது அந்த ஒரு மனிதனிடத்தில் இருக்கும் அறிவின் நுட்பம் எத்தனை அறிவுகளுக்கு வேலை கொடுக்கின்றதென்பதை ஆராய்ந்தால் மனிதன் ஆறறிவுள்ளவன் தானா, அல்லது பலகோடி அறிவால் அரசாளும் **மனிதக் கடவுள்** தானா என்பது தெரியும். இதற்குத்தான் மக்கள் அறிவு வேட்கை கொண்டு அலைகின்றார்கள். அதை அறிந்துவிட்டால் அவனன்றி வேறொன்று இல்லவே இல்லை.

பூமியின் சூட்டால் பூகம்பம் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் ஏற்படும் என்று கண்டு பிடிக்கும் கருவி அநேக மக்களை அழிவினின்றும் நீங்குமாறு எச்சரிக்கை செய்கிறது.

ஒருசில அறிவுள்ள மக்கள் ஆராய்ந்து அறியக்கூடிய அறிவில்லாததால் விதி என்ற சொல்லைச் சொல்லி எதனிலும் அமைதி செய்துகொள்வர்.

மேற்கண்ட மக்களிடம் அறிவுடையோர் விளக்கிக் காட்டி அமைதி செய்வதைவிட, விதியென்ற சொல்லின் சுருக்கத்தால் அமைதி செய்வதும் உண்டு.

எடுத்ததற்கெல்லாம் விதியென்று சொல்லி அறிவுடையோன் பேசுவானாகில் எவ்வளவு அறிவாளியாகக் கருதப்படுகிறானோ அதைவிடப் பன்மடங்கு குற்றமுடையவனாகிறான்.

விதியைப்பற்றித் திடமாகப் பேச முற்படும் அறிவாளி உருவத்தில் நன்றாக இருந்தும் சப்பாணியே.

கூர்மையான ஆயுதத்தைத் தானே செய்து தவறுதலாகத் தன்மீது பட்டபோது தன் மறதியை மறைக்க விதியென்ற சொல்லைச் சொல்லிக் கொள்பவன் அறிவில் குறையுடையவனே.

ஆராய்ச்சியுள்ள உலகில் மதியின் குறையை மறுத்து, உன்னில் நீ ஒளிந்திடாமல் உணர்ந்து, உன் அறிவில் நிலைத்தாயானால் எல்லாம் உன் மதியே.

**அடிப்பதும், அடித்த அடிக்குத் திருப்பி**
**அடிப்பதும் மதியே, அடித்ததை ஏற்று**
**உணர்வதும் மதியே, அடித்ததிலும் ஏற்றதிலும்**
**குறை நிறைவை நிறைவிப்பதும் மதியே.**

விரைவு, நுட்பம், சூழ்ச்சி வாய்ந்த சொற்களால் வழக்குகள் ஏற்படாமல், அவற்றால் விளைந்துள்ள வழக்குகள் எல்லாம் வீழ்ந்து, அழுது மடிதல் வேண்டும்.

கப்பலோ நன்னிலையில் வேகமாய் ஓடிக்கொண்டிருக்கிறது. மதியால் செய்த கருவியோ இத்தனை மைலுக்கப்பால்

சூறுவளிக் காற்று வருகிறது என்பதை அறிவித்துக்கொண்டிருக்கிறது. கப்பலோட்டும் தலைவனே தன்னலத்தால் மறவாது அதைக்கண்டு கருவியின் மேலுள்ள குற்றமோ காற்று வருவது நிஜமோ என்றறிந்து அப்பேரிடரிலிருந்து எல்லாவற்றையும் காப்பாற்றிக்கொள்ளும் தன்மையுடையவனாகின்றான்.

**யார் எதை வேண்டினாலும் அதை அடைய,**
**காப்பாற்ற அனுபோகிக்க அறிவே பிரதானம்.**

ஓ! படி ஏறுகின்றவனே! முன்னும் பின்னும் பார்த்து ஏறு. அசைவுமில்லை. இடருமில்லை.

நுட்பமில்லாது வேகம் மட்டும் இருந்தால் பயனில்லை. நுட்பமிருந்து வேகமில்லாமலிருந்தால் நினைத்தவாறு எதுவும் முடியாது. வேகமுள்ள வானவூர்த்தியைத் திறமையாக ஓட்டுவதுபோல் அறிவின் வேகமும் நுட்பமும் இருந்தால் எதுவும் விரைவில் முடியும்.

## 27/2 குற்றம்

அறிவில்லாதவர்கள் பெரும் குற்றம் செய்யினும் அது குற்றமே ஆகாது. அது எதுபோன்றதென்றால், நல்ல தூக்கத்தில் இருப்போருக்குத் தன் உடையின் உணர்ச்சி தெரியாதது போன்றும், கண்விழித்து இருப்போர்க்கே உடை உணர்ச்சி ஒழுக்கம் தெரிவது போன்றும் ஆகும். பெரும் அறிஞன் ஒரு சிறு குற்றம் செய்யினும் அது பெரும் குற்றமே யாகும்.

தன் கை, கால்களைத் தாமே வெட்டிக்கொண்டு, மன்னிப்புக் கோருவீர்களானால் கை, கால், வந்து கூடாதது போன்று, தனக்குக் குற்றம் என்று தெரிந்து குற்றத்தைச் செய்துவிட்டு மன்னிப்பு வேண்டுவதைவிட, குற்றம் செய்யும் முன்னே உணர்ந்து, குற்றம் செய்யாதிருப்பீர்களானால் உங்களுக்கும் உங்களால் மற்றவர்க்கும் அபாயமோ, துன்பமோ, பிணியோ எப்போதும் ஏற்படுவதில்லை.

# 28 எண்ணம்

அணுக்களின் கூட்டுறவால் உடலும், உடலால் இரத்த ஓட்டமும், இரத்த ஓட்டத்தால் எண்ணமும், எண்ணம் இயங்குதற்கு அவயவப் புலன்களும், எண்ணத்தின் நிர்வாக உயர்வால் அறிவும், ஞானமும் உண்டாகின்றன.

எண்ணத்திற்குப் பீடம் உடலும், மூளையுமாகும். எண்ணம் ஒரு நொடிப் பொழுதில் 8,00,000 மைல் வேகத்தில் செல்லும் இயல்புடையது.

உலக தத்துவங்கள் 14-ல், 14-வது தத்துவத்தின் உட் பிரிவுகளில் ஒன்று "**எண்ணம்**". வேகம், விவேகம், நுட்பம், ஆகிய இவற்றை உண்டாக்கி, இதன் மூலம் இன்ப துன்பங்களை அனுபவிப்பது எண்ணமேயாம்.

(10/2 பாரா பார்க்க)

ஒருவன் மிகுந்த நல்லெண்ணமும், உயர்ந்த ஒழுக்கமு முடையவனாக இருந்தால் அவனுடைய எண்ணத்தின் வேகம் பொதுமக்களின் மூளையில் தாக்கிப் பெரும்பான்மை யான மக்களுக்கு நலனைத் தரத்தக்க ஆராய்ச்சி செய்து, அனுபவிக்கத் தூண்டுவதோடு, அவனது பண்பாட்டிற் கேற்ப, சுற்றுச் சார்பிலுள்ள மக்கள் ஒத்துழைக்க முற்படு வதுடன் அவர்கள் துன்பம் நீங்கி இன்பமாக வாழ்வார்கள்.

மிகுந்த நல்லெண்ணம் உங்களிடமிருக்கு மானால், ஒழுக்கம், சகிப்புத்தன்மை, பொறுமை, பெருந்தன்மை ஆகிய பண்பாடுகள் இயல்பாகவே மிகுதிப்படுவதுடன் கட்டளை (ஆக்ஞை) பிறப்பிக்க வீரமும், திறமையும் உண்டாகிவிடும்.

அரசியல் நிர்வாகிகளின் நல்லெண்ணங்களைக் காட்டிலும், பொதுமக்களின் நல்லெண்ணமே பன்மடங்கு உயர்ந்ததாகும். இவ்விரு சாராரின் நல்லெண்ணத்தால் ஏற்படும் அரசியல் நிர்வாகம், உலக மக்களுக்கு நன்மை பயப்பதோடு, சிறப்பாக செழிப்பாக என்றென்றும் நின்று நிலவும்.

**எண்ணத்தின் ஏக்கம்:**—உடல் அயர்ச்சியைப் போக்கிக் கொள்ளப் பசி, தூக்கம், போகம் இவைகளே உலக இயல்பின் இயற்கை. இவற்றைத் தவிர்த்து மற்ற எண்ணங்

கள் ஏக்கமெல்லாம் நாளடைவில் சேர்க்கையால் நேர்ந்தனவேயாகும்.

உயிர் நீங்குந் தருவாயிலுள்ள உடலை, அந்த உடலிலுள்ள உள் நோக்கத்தின்படி எண்ணத்தைத் திடமாக ஊட்டினால், அந்த உடலிலிருந்து உயிர் நீங்கிவிடாத வகையில் ஒரு கால அளவுவரை காப்பாற்றலாம்.

நல்லெண்ணத்திற்குக் கேடு எவ்வகையிலும் ஏற்படாது. உலக மக்களுக்கு ஏற்படும் எண்ணத்தின் அலையால்தான் உலக நிர்வாகம் நடைபெறுகிறது.

**நல்லெண்ணமே இருதயத்தையும் மூளையையும் குளிரவைக்கும்.**
**நல்லெண்ணமே இருதயத்தையும் மூளையையும் திடப்படுத்தும்.**
**நல்லெண்ணமே ஊக்கத்தை உண்டாக்கி, உலகத்தையே சிறப்பிக்கும்.**

ஒருவர் திண்ணமாக எண்ணுகின்ற நல்லெண்ணங்களின் செயலாற்றல்கள் ஓராயிரம் ஆண்டுகள் வரை பொது மக்களிடையே நின்று நன்மையை உண்டாக்கும்.

**உதாரணம் :**—அரசியல் நிர்வாகம், சுகாதாரம், ஒழுக்கம், விஞ்ஞானம், தத்துவ விளக்கம் ஆகியவை போன்று.

## 28/1 எண்ணங்களின் செயல்கள் நால்வகைப்படும்

(1) எண்ணியபடி அடைய முயற்சிப்பது.

(2) எண்ணியபடி அடையமுடியாமல் தோல்வியடைவது.

(3) எண்ணியபடி அடைந்து அதைக் காப்பாற்றிக் கொள்வது.

(4) எண்ணுததை அடைந்து அதைக் காப்பாற்றிக் கொள்வது அல்லது அதை விட்டுவிடுவது.

எண்ணமே கடவுள். எண்ணமே உயிர். எண்ணமே உலகம்.

அறிவோடுள்ள விரைவு, மாறுபாடில்லா நன்னடத்தை யுடன் நன்னோட்டத்தையே நாடும், அதனால் நாடு செழிக்கும், நல்ல அனுபவ அறிவு பெருகும்.

---

# 29 செயலால் கடவுள் மதம்

கடவுளைச் சேர்ந்தவனே மனிதன். மனிதனின் பெருக்கம் ஏற்பட்டதிலிருந்து மனிதர்களின் அறிவின் உயர்வு ஒன்றை (அதாவது, ஆதி அல்லது துணிவு, நினைப்பு, நாதம், அக்கினி, ஆகாயம், தண்ணீர், பூமி, காற்று, நெருப்பு, இவைகளில் ஒன்றை) அடிப்படையான கடவுளாகக் கருதுவதுடன், மனிதர்களின் வாழ்க்கைக்கு வேண்டிய நலங்களை உண்டாக்கிக் கொடுக்கும் மனிதர்களையும், விளை பொருள்களாகிய தானியம் மற்றவைகளையும், தொழில்களையும், ஆயுதங்களையும், யுத்த வீரர்களையும், அமைச்சர், அரசர்களையும், நல் வழியையும், ஒழுக்கத்தையும் அறிவை அறிவுறுத்திய அறிவாளிகளையும், ஆசிரியர்களையும், உயர்ந்தோர்களையும், கலை இன்னிசைகளையும், கடவுளாகக் கொண்டாடுவதோடு, அவர்கள் இறந்த பின்னர் அவர்களை நினைத்தற் பொருட்டுக் கொண்டாடுவதனால் மதங்கள் நாளடைவில் ஏற்பட்டன. பழைய அரசியல்களையே நினைவாகப் பின் மக்கள் கொண்டாடுவதே கடவுளும் மதங்களுமாகும்.

**உழைப்பில்லாச் சரீரமும்**
**ஆராய்ச்சி யில்லா அறிவும்**
**உணர் வில்லா உண்மையும்**
**குற்றமில்லா தண்டனைக்குள்ளானோர் போன்றே.**

அறிவின் வளர்ச்சிக்குத் தொழில் அவசியம்.

மனிதன் வாழ்வு உண்டு, உறங்கி, இன்பந்துய்த்து அடையும் நலத்தோடு முடிவதல்ல; இது காட்டு மனிதனின் நிலையாகும். அறிவின் நிலைக்கேற்ப, தொழிலின் ஏற்றத் தாழ்வால் அறிவு வளர்ச்சியடைகிறது.

மனிதனுக்கு வேண்டியது அனுபவ அறிவு. அவ்வறிவால் தன்னைத்தெரிந்து கொண்டானானால், பிறவியின் நோக்கமும் அதன் பலனும் முடிவடைகின்றன. உலகத்தில் பிறக்கும் மக்களின் ஏக்கம், உணவு வசதி, போகவசதி, அறிவின் உயர்வு வசதி, ஆகிய இம்மூன்று வசதிகளால் வரும் நலன்களை நன்றாய் அனுபவித்த பின் அவ்வேகம் முடிவடைகிறது. இதற்குப் பெயர் முக்தி.

பிறக்கும் அறிவுடைய மக்களுக்கு இம்மூன்று வசதிகளும் சேர்ந்திருந்தாலே அவர்கள் நலம் அடையலாம்.

பிறக்குமுன், ஒரு நலமும் இல்லாதிருந்ததாலும், உடல் எடுத்து அனுபவித்த அனுபவம் போதாததாலும், எப்படி அனுபவித்து முடிப்பதென்று தெரியாததாலும், எவ்வளவு வயது உடையோராய் இருப்பினும், வருந்தும் பெருநோய் இருப்பினும் உயிர் உடம்பை விடச் சம்மதிப்பதில்லை. எவ்வளவு வெறியனாயினும், உணவு உண்ணாதிருப்பதில்லை. பிரம்மச்சாரியாயினும், காமக் கனவில் இந்திரிய நீக்கம் ஆகாமல் இருப்பதில்லை. பெரும் இராச யோகத்திலிருந்தாலும் கடைசியாக எல்லாம் விட்டு அறிவைத் தேடி முடிவு தெரிந்து கொள்ள முற்படாதவனுமில்லை.

உணவுப்பொருள் அதிகமாகவும், மக்கள் குறைவாகவும், இருந்த காலத்தில், உண்டு, இன்பம் துய்த்து, நலமடைந்தும், இன்ன நலத்திலிருக்கிறோம் என்று தெரியாது இருந்தார்கள்.

மக்கள் பெருகிய பின், மக்களின் அறிவு உயர்ந்து வரும் போது, நாணத்தை மறைக்கவும், பருவ வயதில் ஆண் பெண் கூட்டுறவை அறிந்து இன்பந்துய்க்கவும், விவசாயம் செய்யவும், பக்குவமாக வேக வைத்துச் சுவைத்து உண்ணவும், வீடு கட்டவும், உடை சொல் ஒழுக்கச் சீர்திருத்தங்களும் ஏற்பட்டன. இச் சீர்திருத்தங்களோடு கூடிய அறிவு உயரும்போது, உருவங்களின் பாகுபாடுகளையும் மக்களின் அறிவு ஏற்றத் தாழ்வையும் பார்த்து அதன் காரணத்தை அறிவுடையோர் ஊன்றிச் சிந்திக்கும்போது அவரின் உருக்

கத்தால் அவரின் பிரதிபலிப்பு உருவமே பல தோற்றங் களாய்த் தோன்றி மறைய, அது ஓர் சக்தி, என்று எண்ணி, அதை மற்றவர்களுக்குச் சொல்லவும், அத்தோற்றங்களைச் சிலைகளாகச் செய்து வணங்கவும் செய்தார்கள். பாடகர்கள் பாடியதைச் சிற்பிகள் சித்திரித்தார்கள்.

கண்ணுக்கு முன்னால் இருக்கும் தோற்றம் கண்மூடித் திறந்த போதும், அத்தோற்றம் இருந்தே தீரும். உருக்கத்தில் ஏற்படும் அறிவின் மயக்கத்தில் தெரியும் எதிர் நிழல் அறிவு விழித்துப் பார்க்கும்போது இராது. ஆராய்ந்து அறிவுக்குப் புலப்படும் இத்தகைய தத்துவங்கள் அழிவதில்லை. அதுவே எல்லா உலகத்தோற்றத்திற்கும் காரணமாகும். அதற்கு மேல் அறிவு உயர்ந்த போது, அறிவிற்குத் தெளிவாய்ப் புலப்படும் தத்துவத்தை முடிவாக வைத்து, கலைகளுக்கும் சிலை களுக்கும் வணக்கங்கள் செய்யாது, சீர்திருத்தங்களைப் பரப் பியவர்களே தீர்க்க தரிசிகள் (அறிஞர்கள்).

---

# 30 மதங்களின் கருத்து

மடப்பேய், மதப்பேய், பயப்பேய், மனப்பேய் ஆகிய இப்பேய் எல்லாம் மதியுயரவிடாப் பேயென்று உணர்ந்து தேருவீர் உலகீர்.

ஒவ்வொருவரும் தத்தம் உடம்பைப் பாதுகாத்துக் கொள்ளவும், தம்மைப்போல் பிறரை நேசிக்கவும், அன்பு, ஒழுக்கம், கருணை, அறிவின் விளக்கம், ஒற்றுமை, ஆகிய இவை உண்டாவதற்காக வேண்டியும், அந்தந்த நாட்டுத் தட்ப வெப்ப நிலைக்குத் தக்கபடி, அறிவு வளர்ச்சியில்லா மக்களுக்குக் கற்பிக்கவேண்டியவைகளைக் கற்பனைக் கதை களோடு உற்சாகப்படுத்தி ஒவ்வொருவரும் நடை, உடை, உணவு, சொல், இருப்பு, படுக்கை இவைகளில் இருக்க வேண்டிய ஒழுக்கங்களைத் தொழுகையால், நினைவால், நோன்பால், செலவால் (யாத்திரையால்) இறைவனை வேண்டு தலால், யோகத்தால் போதிப்பதே மதங்களின் கருத்

தாகும். இவற்றை நன்ருய் ஆராய்ந்து பார்த்தீர்களானல் இவற்றின் மூலம் நடைமுறையில் வீட்டில் உள்ள ஒழுக்கம், நல்வழி முதலியவை பெருகியிருப்பதை அறியலாம். இதுவே மதங்களால் ஏற்பட்ட நன்மை. இதை அறியாது மதபோதனைகளில் ஏற்படும் குழப்பங்களுக்குக் காரணம் என்னவென்ருல், மனித வாழ்க்கைக்கு வேண்டிய அளவுக்கு நிரவிவர உணவு முதலிய இன்றியமையாப் பொருள்கள் இல்லாததால் இருக்கும் பொருள்களைச் சேகரிக்கக் கூட்டுறவாளர்களைச் சேர்த்துக்கொள்ளும் செய்கையே தத்தம் மதம் உயர்வு என்று பேசும் குழப்பத்திற்குக் காரணமாகும்.

## 30/1 எளியவர்க்கும் செல்வந்தர்க்கும் இடையில் அறிவாளி கற்பித்த தீர்ப்பு

சொர்க்கம், இன்பம், அற்புதம் என்று வியப்பான கருத்துக்களைப் பேசினல் பசி, வறுமை, நோய், கவலையுள்ளவர்கள் பொறுமை நிம்மதியுள்ள ஆறுதல் அடைவார்கள் என்றும்; நரக வாதனை, நெருப்பு, விடம், விபத்து, பயம், துன்பம் ஆகியவைகளைப் பேசினல் கொடிய பாவச் செயலுடையவர்களும் பணக்காரர்களும் இவைகளுக்கு அஞ்சி, ஒழுக்கத்தோடும், அன்பு ஒத்த அறநெறியோடும், தருமத்தோடும் இருப்பார்களென்றும், அறிஞர்களால் நீதிக்காக வேண்டி இவைகள் கற்பிக்கப்பட்டன. நாளடைவில் அறிவாளியும் மற்ற எல்லோரும் ஆராய்ச்சி இல்லாது இதை நம்புவதால் அறிவு வளர்ச்சிக்குத் தடையாகவே இருந்து வருகிறது.

தம் மதப்பற்றுதலை விடாது அறிவை அறிய முற்படுவோர்களின் நிலை ஆடுகளோடு ஒரு வேங்கையைச் சேர்த்து வளர்ப்போன் நிலையைப் போன்றதே.

**மதுவெறி, மதவெறி, மண்வெறி, தனவெறி,**
**புகழ்வெறி, காமவெறி, இவ்வெறியெல்லாம்**
**தன்னிலை அறிவு அறிய விடாவெறியென்**
**றுணர்ந்து தேருவீர் உலகீர்!**

பறக்கும் பறவையைக் கூண்டில் அடைத்தது
போன்றது மதபோதனை
மதமுடையோர் மதியடைவோர்
மதங்கடந்தோர் மதியுடையோர்
மதியுடையோர் விதிகடந்தோர்
விதிகடந்தோர் விண்ணில் அவனே ஈசன்.

ஓ மதபோதகர்களே! மக்களை மதுக் கொடுத்தாவது மயக்குங்கள். மதபோதனையால் மயக்காதீர்கள். மதுவின் மயக்கம் நொடிப்பொழுதே. மதபோதனையின் மயக்கம் வெகு காலம்வரை தீங்கு செய்யும்.

---

# 31 கோயில்

உடல் உழைப்பால் ஏற்படும் களைப்பை நீக்கி நல்ல சிந்தனை ஆராய்ச்சியோடு அமைதியாக இருக்கவேண்டியதற்குள்ள நல்ல இட அமைப்பும் கட்டிடமும் கூடியதே கோயிலாகும்.

## 31/1 இருக்கும் இடம்

வீடு, முற்றம், கொல்லை, தெரு இவைகளைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். உடுக்கும் உடைகளை அடிக்கடி அழுக்குப் போக்கி உலர்த்தி உடுத்தவேண்டும். பொழுது புலர்ந்தகாலை குளித்து, முழுகித் தூய்மையாயிருக்கவேண்டும். படுக்குமுன் கை, கால், முகம் தூய்மை செய்துகொண்டு, நான் எண்ணியபடி எல்லாம் நன்மையாகவே நடக்கும் என்ற நல் எண்ணத்துடன் அதே எண்ணமாகப் படுத்திடவேண்டும். காலையில் கண் விழித்ததும், நான் பேசுவதெல்லாம் நல்லதாகவே பேசுவேன் என்று எண்ணிக்கொள்வதுடன் நல்ல முயற்சிகளில் பாடுபட்டால் எவ்விதத் தீங்குமில்லாது எல்லாம் மேன்மையாகவே நடக்கும். இதற்குமேல் பெரிய, நல்ல ஜெபம் உலகில் எதுவுமே இல்லை.

# 32 நாடு சுற்றிப் பார்த்தல்
## (யாத்திரை)

ஆராய்ச்சியுடன் பல நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதில் தொழிலுக்கு வேண்டிய சீர்திருத்தங்களும், ஒற்றுமையையும், அன்பும், அறிவும், பெருந்தன்மையும், உண்மைத் துணிவும், உலக நடைமுறைப் பழக்க வழக்கங்களை அறியும் அறிவும் ஏற்படுகின்றன. ஆராய்ச்சியில்லாப் பணமுடையோர் செய்யும் செலவால் (யாத்திரையால்) அவருக்கு யாதொரு பயனுமில்லா திருப்பினும் நாடு சுற்றிப் பார்த்தலில் செலவாகும் பொருள் மற்றத் தொழிலாளிகளுக்கு திரவி வருகின்றது. முயன்றும் தொழில் கிடைக்காத எளியவர்களும், தொழிலே செய்ய விருப்பமில்லாத சோம்பேறிகளும், செலவுக்குப் பொருளில்லாது இருப்போர்களும் செய்யும் உல்லாச யாத்திரையால் பலருக்கும் துன்பத்தையே விளைவிக்கின்றார்கள்.

மூட நம்பிக்கையால், கோயில் சமாதி காண்டற்குப் பணம் செலவழிக்கக் கூடியவர்கள் செய்யும் பிரயாணம் அவருக்கும், அவர்போன்ற மக்களுக்கும் அறிவை அடிமைப் படுத்தும் மூட நம்பிக்கையைப் பெருக்குவதோடு, கோயில் சமாதியின் மூலமாகச் சம்பாதிக்கக் கூடியவரிடத்தில், தொழில் முயற்சியில்லாச் சோம்பேறித்தனத்தையும் அறிவுக்கு முரணான ஏமாற்றத் தந்திரங்களையும் உண்டாக்குகின்றது.

---

# 33 சுயேச்சை, நிம்மதி

ஐயுறவு (சந்தேகம்) நீங்கும் வரை சிந்தனையும், தியானமும் இருந்தே தீரும். உலகில் ஒவ்வொருவரும் தத்தம் விருப்பம் போல் எவ்விதத் துன்பமுமின்றி இருக்கவே நாடுகின்றனர். அந்தந்த நாட்டத்தோடு தமக்கு எல்லாவித நலங்களும் வேண்டுமென்று எண்ணுகின்றனர். பிறர் எவராலும் எவ்வித உதவியுமில்லாமல் தமக்கு வேண்டிய எல்லாவித நலங்களையும், தாமே செய்து கொள்ள முடியாமலும் இருக்கின்றனர். அப்படிச் செய்து கொள்ளக்கூடியதாய்

இருப்பினும், காலதாமதத்திற்கும் தமக்கு வேண்டிய பொருள்கள் தம் அருகில் இல்லையே என்றும் ஏங்குகின்றனர். இதை யோசித்துத்தான் :

**"ஒன்றுக் கொன்று உதவியில்லாமல் ஒரு உருவமோ, செயலோ, உலகில் இல்லை. நன்றியுடையோர்க்கும், நல்ல ஒரு பொது நிலையத்திற்கும் செய்த உதவி என்றென்றைக்கும் பயன் தந்தே வளரும்."**

என்று ஒரு பொழுது சொல்லியிருக்கிறேன். இதை அறிந்து கொண்டீர்களானால், ஒருவருக்கொருவர் உதவி செய்தல் என்பது தத்தம் கடமையேயாகும் என்பதை அறிவீர். ஒவ்வொருவரும் தம் கடமையாகிய பயன்படும் தொழில்களை வஞ்சகமும், சோம்பேறித்தனமும் இல்லாது சரிவர எல்லோரும் செய்வோமானால், எல்லாவகை நலங்களுடன் மனவமைதியாக எல்லோரும் இருக்க முடியும்.

இதை அறியாது, தம் விருப்பப்படி இருக்கவேண்டும் என்று எண்ணுவோர் மக்கள் நடமாட்டமில்லாத இடத்திலேயே இருக்கவேண்டும். மக்கள் இருக்குமிடத்தில் பிறர் ஊதியத்தைக் கொண்டு தாம் தனியாக இருந்து உண்பதைத் தம்மிச்சை என்று எண்ணுவது உலக இயல்புக்கும், மக்களின் தொன்று தொட்ட வழக்கத்திற்கும் துரோகமாகும். ஒவ்வொருவரும் மக்களுக்கு வேண்டிய நலங்களுக்குள்ள தானியம் மற்றப் பொருள்களை மிகுதியாக உற்பத்தி செய்து பங்கிடும் முறையுள்ள சரியான நிர்வாகத்தை அரசியலாக வைத்து எல்லோரும் சுகமாக வாழ முற்படுவதே, மக்கள் கடமையில் மிகவும் உயர்ந்த நிம்மதியாகும்.

## 33/1 விருப்பு வெறுப்பு

சரிவர ஆலோசிக்காது எதன்பேரிலாவது விருப்பம் ஏற்பட்டு, அதை அடைய முயற்சித்து அது கிட்டாவிட்டால், அதற்காக அதை வெறுத்தாலும் அது வெறுப்பாகாது.

தன் ஆயுள் உள்ளவரை அந்த விருப்பம் இருந்து கொண்டே தானிருக்கும். விரும்பியதை அடைந்து அனுப

வித்த பின்னாவது அல்லது அடையாதபடி ஆலோசித்துப் பார்த்தபோதாவது வெறுத்ததின் பேரில் விருப்பமும், விரும்பியதின் பேரில் வெறுப்பும் ஏற்படலாம். ஆகையால் எதையும் ஆலோசித்து விரும்புவதும், வெறுப்பதுமே நலமாகும்.

---

# 34 சாதிகள்

முற்காலங்களில் தொழில்களின் பெயர்களே சாதிகளாக அழைக்கப்பட்டன.

உலகில் சில காலம் வரை அந்தந்தச் சாதியினர்களே அந்தந்தத் தொழில்களைச் செய்துவந்தார்கள். நாளடைவில் படிப்பாலும், நடைமுறையாலும், அறிவாலும் அந்தச் சாதியினர்களும் மற்ற தொழிலாளர்களும், எல்லாத் தொழில்களிலும் இருந்து வருவதால் அவரவர்கள் பார்க்கும் தொழில்களே அவரவர்கள் சாதியாக இப்போது வைத்துக் கொள்ள வேண்டும். எந்தக் காலத்திலும் ஒரே தொழிலால் எல்லா ஆட்சி முறையும் நடைபெற முடியாததலால், எல்லோரும் ஒரே சாதியாக இருக்கமுடியாது.

எந்தத் தொழில்களையும் ஏற்றத் தாழ்வு என்று நினையாது, அந்தந்த இடங்களுக்கும், காலங்களுக்கும், வேண்டிய நலங்களைச் செய்து முடிக்க வேண்டியது மனிதனின் முக்கிய கடமை என்று அறியாமல் தன் சாதியை உயர்வாகப் பேசுவது அறிவீனமாகும். எல்லாத் தொழில்களும் இன்றியமையாதவை என்று தெரிந்துகொண்டீர்களானால், எல்லாத் தொழிலாளர்களிடத்தும் அன்புமிகும். எத்தொழிலையும் தாழ்வாகக் கருத இடமிராது.

ஒரு கொள்கையை, ஒரு அரசியலை, ஒரு மதத்தைப் பின்பற்றியவர்களையும், ஒரு சாதியாராக அழைப்பதுண்டு.

ஒரே சாதியிலும், அல்லது தொழில்களிலும், ஏற்றத் தாழ்வு இருப்பதின் காரணம் அவரவர்களின் ஒழுக்கம்,

நடத்தை, எண்ணம், சீர்திருத்தம், நுட்பம், பயிற்சி இவைகளின் உயர்வு தாழ்வேயாகும். உலகில் இது எப்போதும் இருந்தே தீரும்.

கேள்வி :—சாதியில் உயர்ந்தவர் யார்?

பதில் :—பெரும்பான்மையான மக்களுக்குப் பயன்தரத்தக்க எவ்வகைத் தொழிலாயினும் அத்தொழில்களில் பேரிடர், அழிவு, கேடு, துன்பம், இடுக்கண், இக்கட்டில்லாது அந்தந்தத் தொழில்களைச் செய்யும் பெரும் அனுபவம் வாய்ந்தவர்களே உயர்ந்த சாதியார் ஆவர்.

# 35 மனிதனின் எண்ணமும் தொழிலும்

தான் சிறு நீரும் மலமும் கழித்துத் தூய்மைசெய்து கொள்ளும்போதும், உடை துவைத்துடுத்தும்போதும், தன் முகத்தைத் தானே சவரம் செய்துகொள்ளும் போதும், தான் இருக்கும் இடத்தைத் தூய்மை செய்துகொள்ளும் போதும், தன் அனுபவத்திற்கு மாறாக நடப்பவர்களைத் திருத்தும்போதும், மரியாதை நற்சொல் நன்கொடை அளிக்கும்போதும், விசாரணையிலுள்ளபோதும், அறிவிற்குப் பொருத்தமில்லாததைக் கண்டிக்கும்போதும், தன் விருப்பப்படி நிம்மதியாக இருக்கும்போதும், ஒவ்வொரு மனிதனும் எல்லா மத அரசியல் கொள்கைகளிலும், தொழிலாளிகளின் செய்கைகளிலும் நிமிடத்திற்கு நிமிடம் இருந்தே வருகின்றான்.

ஒவ்வொரு தொழிலையும், தன் வாழ்க்கைக்கு ஆதாரமாகக் கொண்டவர்களே; தோட்டி, ஓட்டன், நாவிதன், வண்ணான், கொத்தன், தொழிலாளி, செல்வந்தன், அரசன், சமயாச்சாரி, மெய்ப்பொருளுணர்வோன், அறிவாளி, ஞானி, ஆகியவர்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஓ தொழிலாளர்களே! உங்கள் தொழிலுக்கும், உங்கள் அறிவுக்கும் யாதொரு தொடர்புமில்லாமல் இருப்பதால், உம் தொழிலைத் தாழ்வாக நினையாது, அந்தந்தக் காலத்திற்கேற்றபடி தூய நடை உடையால் காத்துக்கொள்ள முற்படுங்கள்.

## 35/1 நினைவு வன்மையின் தொடர்பு

ஒரு மனிதனின் நினைப்பும், நினைவு வன்மையின் விரைவும் பல தொடர்புடையன. அறிந்த இடத்தின் வாயிலாகப் பார்த்த ஒருவரை அவர் எத்தனை ஆயிரம் மைலுக்கப்பால் இருந்தபோதிலும் அவரை நினைத்துப் பார்க்கலாம். ஒரு கூட்டத்தின் வாயிலாக ஒருவரைப் பார்த்திருந்தால், இவனுக்கு அவர் தெரியாதபோதிலும் இவன் அவரை நினைத்த மாத்திரத்தில் இவனுக்கு அக்கூட்டத்தின் நினைவு வந்துவிடுகிறது. ஒருவருக்கொருவர் பல காரணங்களால் தொடர்பு இருந்து கொண்டிருக்கிறது.

---

# 36 அறிவாளிகளின் கால இடவாய்ப்பு

ஒருவன் தனக்குத் தெரிந்த ஒரு இடத்தைப்பற்றி அறிவாளியிடம் கேட்பானாகில் அவ்விடம் அறிவாளிக்குத் தெரியாதிருந்தாலும், கேட்பவனின் நினைவிலிருப்பது அறிவாளியிடம் தோன்றிப் பதில் சொல்லிவிடுவார். இருவருக்கும் தெரியாத இடத்தைக் கேட்பானேயாகில், அதைத் தெரிந்த மற்றொருவர் அருகில் இருந்தால், அவர் நினைவில் உள்ளது, அறிவாளியிடத்தில் தோன்றி அறிவாளி அதையும் சொல்லிவிடுவார். ஒருவன் ஒன்றைக் கேட்கவேண்டுமென்று வந்து கேட்காமலிருந்தாலும், அதன் தொடர்பான பேச்சுகளை அறிவாளி தாமாகவே பேசுவார். இந் நிகழ்ச்சிகள் கால வாய்ப்புகளில் நடந்தேறும். பொதுவாக உலக மக்களிடையேயும் இதுபோல ஏற்படுவதுண்டு. ஆனால் அவர்கள் பெயர் வெளிப்படாததால் உலகிற்கு வெளிப்படுவதில்லை.

அறிவாளிகள் சென்ற காலத்தின் விவரங்களும், உலக தத்துவச் செய்திகளும், வருங்கால ஆட்சி நிலையும், தம் அறிவால் சொல்லுவார்கள். ஒரு அறிவாளியையோ, ஒரு மகானையோ பார்த்தோரும், பாராதவரும் வேண்டும் வேண்டுதல்கள் நிறைவேறுவதற்கும் நோய் பிணி தீருவதற்கும், அவர்கள் மேலுள்ள அன்பின் மிகுதியே காரணம். இவைகளை மேலாகக் கருதும் அறிவாளியோ அதற்காகப் பெரும் மரியாதை கொடுக்கும் உலகத்தார்களோ, அறிவினுடைய ஆராய்ச்சி குறைந்தவர்களாகவே இருப்பார்கள்.

தனக்குத்தான் நஞ்சுண்டு பார்ப்பதும், கொடிய பிராணிகளிடத்தில் நெருங்கிச் சோதிப்பதும், உலகத்தோர் அவர்களை அப்படிச் சோதிப்பதும் மூடத்தனமாகும்.

வழக்குத் தொடுப்போன், வழக்கெதிர் நிற்போன், வழக்கறிஞர், நீதிபதி ஆகிய இவர்கள், ஒருவருக்கொருவர் தெரியாமல் ஒரே குருவின் மேல் அன்புகொள்ளுகிறார்கள். தோல்வியும் வெற்றியும் யாரைச் சேர்ந்தது?

# 37 வானொலி (அசரீரி)

ஒன்றை நாடிச் செல்லும்போதும், ஒன்றை ஆராய்ந்து கொண்டிருக்கும் போதும், உறுதியான வார்த்தைகள் பேசிக் கொண்டிருக்கும் போதும், வெளியில் உள்ள மற்றவர்கள் அவர்களுக்கு வேண்டியதைப் பேசிக்கொள்ளும் போதும் அச் சொற்களில் சில நமக்குப் பொருத்தமானவையாகவே இருக்கும். இவை காலப்போக்கில் சொற்கள் பொருத்தமாகிக் கொண்டதே யொழிய வேறொன்றில்லை

ஒருவருமில்லாவிடத்தில் தன்னுடைய நினைவே ஒரு சில சமயங்களில் தோன்றிச் சொற்கள் கேட்பதுண்டு. இவைகளுக்குப் பெயர் வானொலி அல்லது அசரீரி எனப் படும். இதை நம்பி எதையும் செய்துவிடக்கூடாது.

ஆராய்ச்சிக்குக் கிடைக்கும் கருத்துக்களும் மறையின் கருத்துக்களும் உலகில் நடந்த காரியங்களும் நடக்க

வேண்டிய காரியங்களும் மக்களிடையே அறிவிப்பினாலும், எண்ணத்தின் நினைவினாலும் இருந்துகொண்டிருப்பதால், எந்தச் செய்தியையும் ஒரே காலத்தில் பலவிடத்தில், பலர் எண்ணிக்கொண்டும், பேசிக்கொண்டும் இருப்பதால் எண்ணத்தின் அலையாலும் பேச்சின் அலையாலும் யாரொருவர் எந்தப் பொருளை ஆராய்கின்றனரோ அந்தப் பொருள் மக்கள் எண்ணத்தின் அலைத் தொடர்பால், முற்கால நடைமுறை அறிவை அறியவும், அதற்குமேல் தற்காலத்திற்கு வேண்டியதைத் தன் மேலறிவு புகட்டுவதற்கும், வருங் காலத்திற்கு வேண்டிய ஆட்சி முறைச் சட்ட திட்டங்களை வகுப்பதற்கும் காரணமாகிறது.

எண்ணத்தின் அலையின் காரணங்களினால் சிறு குழந்தை சிலரிடமும், ஆராய்ச்சியில்லாத சில யோகிகளிடமும், அறிவு வேட்கையால் புத்தி சுவாதீனமற்ற சிலரிடமும் அன்போடு கூடிய நம்பிக்கை உள்ள சில அன்பர்களிடமும், சில புலவர்களிடமும் முற்காலச் செய்திகளும், தற்காலத்தில் வெளியில் நடக்கும் சில முக்கிய கருத்துக் களும் பாக்களாகவும் சொற்களாகவும், தோன்றி மக்கள் வியந்து கேட்கக் கூடியதாகவும் வருவதுண்டு. இவைகள் தத்துவ ஒழுங்குள்ளதாகவும் ஒரு காரியத்தொடர்புள்ளதாகவும் ஆராய்ச்சிக்குப் பொருத்தமுள்ளதாகவும் இருக்க மாட்டா. இவர்களை அறிவாளர்களாகவும் இவர்கள் சொற்களை வேதவாக்காகவும் கருதுவது கூடாது.

**எடுத்துக்காட்டு:**—வெகு தூரத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை மின்சார சக்தியின் அலைகளின் மூலமாக, மின்சாரப் பெட்டியில் அறிந்து கொள்வது போன்றும், பெட்டியும் அலையும் செம்மையாய் இல்லாதுபோனால், செய்தி முழுமையாகவும், தொடர்ச்சியாகவும் இல்லாதது போன்றும் ஆம். முன்னுள்ளோர்கள் இறந்துவிட்டாலும் அவர்கள் உயிருடன் இருப்பதாகச் சொல்வதின் கருத்து, அவர்களின் செயலும், சொல்லும் மக்களிடை நினைவிலும், செயலிலும் இருப்பதனாலேயே, மின்சார சக்தியைக் கண்டுபிடித்தோர்

மாண்டுவிட்டார். அச்சக்தி, நம்முன் பிரகாசித்துக்கொண்டு இருப்பதால், அதன் மூலம் அவர் உயிருடன் இருப்பதாகவே தோன்றுகின்றது.

# 38 சூது

சிறு தொகையைக் கட்டிப் பெருந்தொகையை எதிர் பார்த்து ஏங்கிக்கொண்டிருக்கிறீர்கள். ஏங்கிக்கொண்டிருந்த நேரத்தில் தன்னறிவின் முயற்சியை வீணாகக் கெடுத்துக் கொண்டீர்கள்.

(1) உங்கள் உண்மை ஊக்கம் நீதியைவிட்டு மாறிக்கொண் டீர்கள்.

(2) அப்படியே வென்றுவிட்டீர்களானாலும், பலரின் தோல்வியே உங்களின் வெற்றி.

(3) அவ்வெற்றியின் பரிதாபச் சொத்தால் அடையும் இன் பம் இன்பமா? இன்பமாகாது. அப்பொருளால் நுகரும் இன்பமோ கருணை நிறைந்த அருள் பெற்றிருக்காது.

(4) உன் தோல்வியின் பரிதாபத்தைப் போலவே; உன் வெற்றியிலும் பலர் பரிதாபம் அடங்கியுள்ளது.

(5) களவினால் கிடைக்கும் சொத்து ஒருவரைத் துன்பத் திற்குள்ளாக்கும். சூதினால் கிடைக்கும் சொத்தோ பலரைத் துன்பத்திற்குள்ளாக்கும்.

(6) ஆகையால் இன்றே சூதை விட்டுவிட்டேன் என்று சத்தியம் சொல்லி இதன் அடியில் கையொப்பம் இட்டுக்கொள்...............

**பலன் :**—நீ உன் குடும்பத்தோடு கவலையின்றி அறிவின் சிறப்போடு நல்வாழ்வு வாழ்வாய்.

# 39 ஊமை

ஊமைகளுக்குப் பித்தப் பையும், சுவரொட்டியும், ஈரலின் சவ்வால் பிணைக்கப்பட்டிருக்கின்றன. (Xray)

எக்ஸ்ரேயின் மூலமாகப் பார்த்து அந்தச் சவ்வை விலக்கி விட்டால் ஊமைகள் பேசுவார்கள்.

## 40 குருடு

கண் பாப்பா உள்ள பிறவிக் குருடருக்கு இரு கண்களுக்கு நேர் பின்பக்கம் பிடரியில் உள்ள நரம்பில் ஒரு கிருமி, பாப்பாவுக்கு வரும் ஒளியைத் தடுத்துக்கொண்டிருக்கிறது. இந்தக் கிருமியை மருத்துவர்கள் மின்சார சிகிச்சையால் அகற்றிவிடலாம்.

## 41 நரை

உடம்பின் சூடாலும்; ஆராய்ச்சிச் சூடாலும் நரை ஏற்படும். கொழுப்பின் பகுதி அல்லது அம்சம் மயிர். சூடு இல்லா உடம்பில் நரை ஏற்படாது. பல்லும் விழாது.

## 42 சோதிடம்

தன்முயற்சி இல்லாதவர்களுக்குத்தான் சாத்திரமும், சோதிடமும். அறிவாளி சோதிடம் பார்ப்பது எதைப் போன்றது என்றால், நல்ல நீர், உரம் உள்ள நிலத்தில் கல்லையும் முள்ளையும் விதைத்தல் போன்றதாகும்.

ஓ சோதிடர்களே! மக்கள் இருதயத்தில் ஊக்கத்தையே விளைவியுங்கள், நீங்கள் நல்லவர்களாவீர்கள்.

மெய்யுணர்வாளர்களே! உங்கள் குழந்தைகளுக்கு நல்ல பெயர் வையுங்கள். சாதகம் எழுதுவதோ, சோதிடம் பார்ப்பதோ அறவே கூடாது.

கிரகங்களுக்கும் உடல் நிலைக்குமே தொடர்புண்டு. கிரகங்களுக்கும், தொழில் நிலைக்கும் தொடர்பே இல்லை.

**கிரகங்கள் :**—சூரியன் சந்திரன் விண்மீன்களாகியவைகளே கிரகங்களாகும். இவைகளின் தட்ப வெப்ப நிலைக்கும், உடல் நிலைக்கும் அப்போதைக்கப்போது தொடர்புமுண்டு.

## 42/1 அதிர்ஷ்டம்

மனிதக் கூட்டுறவால் வைத்த சட்டங்கள் பெரும்பான்மையோருக்கு நன்மை பயப்பதால், இச்சட்டங்களே ஒழுங்கு முறை என்றும், இவ்வொழுங்கு முறையால் மக்கள் அடையும் நன்மைக்கு அதிர்ஷ்டம் என்றும் சொல்லலானார்கள். அந்த ஒழுங்கு முறைப்படி தொழில், திருமணம், பிரயாணம் இன்னோரன்ன பிறவும், விழிப்புடன் காலம் நோக்கிச் செய்வதில் இன்பம், ஊதியம், நன்மை உண்டாகும். ஒழுங்குமுறைகள் அல்லது சட்டம் மாறும்போது துன்பம், ஊதியமின்மை, பொருளிழப்பு, தீமை ஏற்படுவதும் உண்டு.

**உதாரணம்** :—அரசியலார் ஒரு லாட்ரி ஏற்படுத்தி, ஒரு டிக்கட் இன்ன மதிப்புடையது என்றும், அதன் விற்பனையைச் சேர்த்து, அதில் இத்தனை சதவிகிதம் பொதுநல உரிமைக்கென ஒதுக்கிவைத்து, எஞ்சிய தொகையை, டிக்கட் வாங்கிய பொதுமக்களுக்குள் மூன்று அல்லது நான்கு பெயர்களுக்கு மாத்திரந்தான் கொடுப்பதெனவும், முன்னதாகவே தீர்மானித்தபடி கொடுப்பதைப் பார்த்து அப்பெரும் பணம் முன் ஜென்மத்தில் செய்த நன்மையால், பூர்வ புண்ணிய அதிர்ஷ்டத்தால் அவர்களுக்குக் கிடைத்துவிட்டதென்றும், அவர்களுடைய கிரகப் பலனென்றும் சொல்வது தவறாகும். அரசியலார் குறித்தபடி கொடுத்தார்களே தவிர, முன் ஜென்மத்திற்கும், பெரும் பொருள் கிடைத்ததற்கும் கிரகங்கள், நட்சத்திரங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. நன்கு ஆராய்ந்து பார்த்தீர்களானால் அரசியல் நிர்வாகஸ்தர்களின் தவறால், மூன்று நான்கு பெயர்கள் பணக்காரர்கள் ஆனார்களே தவிர வேறு வகையாக இல்லை என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

நம் முன்னோர்கள் தாங்கள் சேகரித்த பொருளை, கால மாறுபாட்டால், அரசியல் குழப்பத்தால் இழந்துவிட மனமில்லாது பாதுகாக்கக் கருதிப் பிறரறியாவண்ணம் பூமிக்குள் புதைத்துவைத்து, இறந்தோ அல்லது எடுக்க மறந்தோ போய்விட்டதால், அவர்கள் புதைத்த பொருள், அவர்களின்

மறதியால் நமக்கு அப்புதையல் கிடைக்கிறதே தவிர, நமது பூர்வ புண்ணிய பலத்தால், அதிர்ஷ்டத்தால் கிரகங்களால் அல்ல என்பது தெளிவாகிறது. இதுபோலத்தான் தொழி லுயர்வு, அறிவு, பட்டம், பதவி, புகழ் எல்லாம் சூழ்நிலை, கால மாறுபாடு, சந்தர்ப்பத்தால் ஏற்படுவது தவிர வேறல்ல.

### 42/2 பில்லி சூனியம்

பில்லி, சூனியம், வஞ்சனை செய்பவர்களே! நீங்கள் உங்கள் உடம்பில் கத்தியால் குத்திப் பாருங்கள் வலி ஏற்படு மாகில் இனி எக்காலத்திலும் பிறருக்குத் தீமை செய்யத் துணியாதீர்கள்.

## 43 சித்து என்றால் என்ன?

வியக்குஞ் செய்திகளே சித்து எனப்படும் மக்களிடம் இதுவரை நடைமுறையிலிருக்கும் கருத்துக்களைவிட எளி தில் பயன்படக்கூடிய, பெரிய, வியக்கத் தக்க கருவி அல்லது புதினங்களைக் கண்டுபிடித்தவுடன், முதன் முத லில் அதை "சித்து" என்று வியப்பாகச் சொல்லுவதும், நாளடைவில் எல்லோருடைய நடைமுறையில் அது பயன் படும்போது அதையே விஞ்ஞானம் என்று சொல்வதும் வழக்கமாகும்.

**எடுத்துக் காட்டு:**—மின்சார சக்தி, நீர் ஆவிகளால் ஓடும் யந்திரம், விமானக் கருவி, ஆயுதம் வாகனங்களைப் போன்றவைகள் எல்லாம் சித்தேயாகும். "இதை அறிந்து தான் சித்தர்களின் விஞ்ஞான உலகம் இப்போது நடை பெறுகிறது. முக்தி என்னும் அறிவு விளக்கம் அறிந்து கொள்ள வாரீர் உலகீர்" என்று அழைத்திருக்கின்றேன்.

இதைத் தவிர தாம் ஏமாறவும், தாம் பிறரை ஏமாற் றவும் சில தந்திரங்களால் மக்களை ஏமாற்றிக் கெடுக்கவும், பிறர் சீக்கிரத்தில் கண்டு பிடிக்க முடியாதபடி மறைத்து ஒளித்துச் செய்யும் சிறு வித்தைகளையும் சித்து என்றும் அதைச் செய்பவர்களைச் சித்தர்கள் என்றும் சொல்வதுண்டு.

## 44 சேய்மைச் (தூரச்) செய்தி அறிதல்

தாம் ஒரு இடத்தில் உட்கார்ந்தாவது, படுத்தாவது இரு காதுகளையும் விரல்களால் அடைத்துச் சேய்மையிலிருக்கும், தமக்குத் தெரிந்த ஒருவரைக் கண்ணை மூடிப் பத்து நிமிடம் நினைத்தீர்களேயானால், அவர் எந்த நிலையில் இருக்கிறார் என்பது சிறிது சிறிதாகத் தெரியும். நெடுந்தூரத்தில் இருப்பவர்களாயிருந்தால், மிகத் தெளிவாக அறியலாம். அவர் நிழற்படமிருந்து அதைக் கூர்ந்து பார்த்து நீங்கள் எதை நினைக்கிறீர்களோ அது அப்பொழுதே அவருடைய ஞாபகத்தில் ஏற்படும்.

இதற்குக் காரணம் இருவர் எண்ணத்தின் விரைவும் ஒரே சமயத்தில் ஒத்துழைப்பதே.

## 45 உலகத்தில் இல்லாததை உற்பத்தி செய்யலாம்

ஒரு வயதுள்ள வியாதியில்லாத சுமார் 40 குழந்தைகளை, உலக மொழிகளை அவர்களிடம் பேசாமலும், உலகச் செய்திகள் எட்டாத இடத்தில், எல்லா நலத்தோடும் வைத்திருந்தால்; புதுமொழி, அறிவாளி, வீரன், அரசன் எல்லாம் அவர்களிலேயே ஏற்பட்டுவிடும்.

## 46 கண்ணாடி, உருவப் படங்களால் உள்ள நன்மை

சாதாரண மக்களுடைய உருவப்படங்கள், உடல் இருக்கும் வரை தான் இருக்கவேண்டும். உடல் மறைந்தபின் எக்காரணத்தை முன்னிட்டும் அப்படங்கள் இருக்கவே கூடாது. பெரிய அறிவாளிகள், மெய்ஞ்ஞானிகள், பெரியார்கள் ஆகியோர் படம் ஒவ்வொருவர் வீட்டிலும் இருப்பதில் மிக நன்மைகள் உண்டு.

வீட்டில் உடை ஒழுக்கம் இல்லாத படங்களும், பயங்கர உருவப் படங்களும், இருப்பதில் மிகக் கெடுதிகள் உண்டு பயங்கர உருவப் படங்கள் உள்ள வீட்டில் பிறக்கும்

குழந்தைகளும், பயங்கர உருவமாகவே பிறக்கக்கூடும். அழகான சித்திரப்படம் ஒன்று அல்லது இரண்டு வீட்டில் இருந்தால் போதும்.

நிறைந்த அறிவு, பெருந்தன்மை, வசீகரம், மிகுந்த அழகு, இராஜபார்வை, வீரம் பொருந்திய கருணையான பார்வை, உயர்நடை, உயர்வான உடை, ஒழுக்கம் ஆகிய இவை நிறைந்தவர்களுடைய உருவப்படங்களோ, சிலைகளோ, பொதுமக்களின் கண்பார்வை அடிக்கடி படும்படியான இடங்களில் இருக்குமானால் பிறக்கும் குழந்தைகளில் பெரும்பான்மை, அந்தந்த உருவங்களுக்குரிய சிறப்பியல்புகளோடு பிறப்பதுடன் பழக்க வழங்கக்களும் நடை, உடை பாவனைகளும் அந்தந்த உருவங்களுக்குரியவாறே இருக்கும்.

ஒரு நல்ல கண்ணாடியின் முன் நின்று, தன் முகத்தையே பார்த்து, "நான் நல்லொழுக்கமாக வாழ்வேன், நான் எண்ணிய காரியங்களை முடிப்பேன்" என்று ஒருவன் தினம் சொல்லிக்கொண்டு வருவானானால் சிறிது நாளில் தன் துற்செயல்களை விடுத்து, ஒழுக்கமாக வாழ்வதுடன் அவன் எண்ணிய காரியங்களைச் செய்தே முடிப்பான்.

**முக்கிய கவனிப்பு**:—ஒரு மனிதன் தன் உருவத்தைப் புகைப் படத்தாலேயோ, அல்லது கைச் சித்திரத்தாலேயோ, மிக்க கவர்ச்சியாக அழகு படுத்தி அதைக் காலையில் சுமார் ஏழு நிமிடத்திற்குக் குறையாமல் நல்ல நினைவுடன் கூர்ந்து பார்த்துவிட்டுத் தன் தொழிலுக்குச் சென்றால் சரீரம் தளராது, உடல் வளமும், நற்பெயரும், துணிவும், அறிவின் வளர்ச்சியும், மனவன்மையும், உண்மை நினைவுமாகிய பல நன்மைகளும் ஏற்படும். தன் வயதை இதனால் கூட்டிக் கொள்ளலாம். அங்கு வேறு எவ்விதப் படங்களையும் வைத்தல் கூடாது.

# 47 மரணம் ஏற்படுவதற்குள்ள காரணம்

முற்கால மக்கள் மிகுந்த வயது வரை இருந்து நாளடைவில் உடல் மெலிவடைந்து குன்ற, பின் நினைவற்று ஒன்றுக்

கும் உதவாததாக இருந்து மிருகம் முதலியவற்றிற்கு உணவாகி வந்தார்கள். அக்காலங்களில் மரணம் கிடையாது.

பிற்காலத்தில் அறிவின் தெளிவு சிறிது ஏற்பட்டு, இவர்களைப் பானையில் வைத்துப் புதைத்து வந்தார்கள். அக்காலத்தில் உண்டு, உறங்கி, போகிக்கும் நலங்களுக்கு எவ்விதத் தடையும், பயம், வெறுப்பு, கபடம், விரோதம், தந்திர யுக்தி, ஆகிய பேதங்களுமில்லாதிருந்தன. உணவு, சிற்றின்ப நலங்களுக்குத் தடை ஏற்பட்ட காலத்தில் அவைகளை நிறைவேற்றிக்கொள்ள முயற்சிக்கும் அறிவில், வேறுபாடு, பயம் முதலியனவும் உடற் பிணியும், பின் மரணமும் ஏற்பட்டன.

கொடிய நோயாளர்களை வீணை இரக்கத்தால் அரசியலார் வைத்திருப்பதால் உடல் நலமுள்ள மக்களும் பல வியாதிகளுக்கு ஆளாகிறார்கள். **எடுத்துக்காட்டு** :— ஒருவன் ஒருவனைக் கொலை செய்துவிட்டால், கொலை செய்தோனைத் தூக்கிலிட்டால், இருவரும் மிகக்குறுகிய காலத்துன்பத்தில் முடிந்து விடுகின்றனர். ஒரு தொத்து வியாதியால் படும் துன்பம் ஒருவனை பல காலம் வரை துன்புறுத்துகிறது. அவன் ஒருவனால் பரவும் வியாதி, நலமாய் இருக்கும் மக்கள் பலரைத் துன்பத்திற் குள்ளாக்குகிறது.

## 47/1 பிணம் அடக்கஞ் செய்யும் முறைகள்

உடல் பற்றிற்காகவும், மக்கள் சமூக ஒற்றுமைக்காகவும் ஏற்படுத்தியதே பிண அடக்க முறைகள். பிணத்தை ஒரு மணி நேரத்திற்குமேல் வைத்திருக்கவே கூடாது. உடம்பில் கை, கால், வாய் ஆகியவற்றில் புண் உள்ளவர்களும், நோயாளிகளும் பிணத்தின் அருகாமையில் செல்லுதலும், அதைத் தொடுதலுங்கூடாது. பிணத்தை ஆழக்குழியில் புதைப்பதும், கடல் நீரில் மூழ்குவிப்பதும், கழுகுகளுக்குக் கொடுப்பதும், நெருப்பால் சுட்டு எரிப்பதும் ஒன்றே.

ஓ மருத்துவர்களே ! மக்களுக்கு ஊக்கத்தை ஊட்டி, நோயைப் போக்குங்கள். தளர்வை ஊட்டி நோயை உண்டாக்காதீர்கள்.

## 47/2 மரணத்தைத் தடுக்கும் முறைகள்

மனிதன் இறப்பதற்கு 2½-மணிக்கு முன் உயிருள்ள பெரிய வௌவால் இரத்தத்தை வைத்திய முறைப்படி நரம்பில் செலுத்தி அவனைக் காப்பாற்றலாம்.

வாலிபனாக இருந்தால் மரணத்திற்கு 5-நிமிடங்களுக்கு முன் விந்து வெளிப்படாமலிருக்க ஆண் குறியை இரப்பரினால் இறுகக் கட்டி வைக்க உடல் சூடு ஏறிஉயிர் மீளும்.

ஒருவனை உயிர்போக 5-நிமிடங்களுக்கு முன் காற்றுப் போகாதபடி கெட்டி உலோகத்தால் செய்த பெட்டியில் வைத்து அடைத்து, சிறு உள் துவாரமுள்ள ஊசி கொண்டு, அவ்வூசிக்கும் பெட்டிக்கும் காற்று வெளியேறாத குழாய் பொருத்தி, உயிர்விட்டு ஒரு நிமிடத்திற்குமேல் ஆகாத ஒரு உடம்பின் குறுக் கெலும்புத் துவாரத்தில் மேற்கண்ட ஊசியைச் செலுத்திவைக்கப் பெட்டியிலுள்ளவன் உயிர் ஊசி பொருத்தியிருக்கும் உடம்பிற்கு மாறிப் பிழைத்திருப்பான். எல்லா நலங்களுமுடைய பெரிய மருத்துவசாலைகளில் மேல் சொன்ன முறைகளைக் கையாண்டால் தொடக்கத்தில் ஏறக் குறைய 100-க்கு 10-பேர்களைக் காப்பாற்றலாம்.

உலக மறைபொருள் (இரகசியம்) அறியாத காரணத்தால் தற்காலத்தில் மருத்துவ, சித்த, இரசாயன, ஆராய்ச்சிகளின் மூலம் மக்கள் இறவாமல் உலகத்தில் எப்போதும் உலக இன்பங்களை அனுபவித்துக்கொண்டு இருக்க ஆசைப்படுகிறார்கள். பெரும்பாலும் ஒருவனுக்கு 47-வயதுவரை உணவு, போக நலங்கள் துவிதப்பான்மையில்லாத விளக்கம் ஆகிய இவை குறைவில்லாதிருக்குமானால் அவனறிவில் விரோத குணங்களோ உடற்பிணிகளோ ஏற்படா, அப்போது மக்கள் 40-வயதுக்கு மேல் உலகத்தில் எவ்வித போகங்காரணமாகவும் இருக்க எக்காரணத்தைக் கொண்டும் விரும்பவே மாட்டார்கள்.

ஓ ஆராய்ச்சியாளர்களே! மக்கள் ஆயுள் வளர்ச்சிக்கு உங்கள் ஆராய்ச்சியை உபயோகிப்பதைவிட இருக்கும் மக்க

னுக்கு வேண்டிய வாழ்க்கை வசதிகளைப் பெருக்க ஆராய்ச்சியை உபயோகியுங்கள்.

# 48 ஒற்றுமை (ஐக்கியம்)

கூடுதல் என்பதும், ஒற்றுமை என்பதும், இணங்குதல் என்பதும், ஐக்கியம் என்பதும் ஒரே பொருட் சொற்களாகும்.

மாண்டது, செத்தது, மாண்டான், செத்தான், மறைந்தார், இயற்கை எய்தினார், மோசம் போனார், பரலோகம் அடைந்தார், ஒன்றுபட்டார் என்பதெல்லாம் ஒரு பொருளைக் குறிப்பனவாகும். இவைகளைச் சொல்லும் பெயர்களுக்குத் தக்கவாறு உபயோகிப்பது வழக்கம்.

**எடுத்துக்காட்டு :—** வண்டிக்காரன் ஒருவனைச் செத்தான் என்பதும், மற்றவரை மோசம்போனார் என்பதும், ஒரு பெரிய போக்கிரியை மாண்டான் என்பதும், யோகியாக இருந்தால் மறைந்தார் என்பதும், அறிவாளியாக இருந்தால் ஒன்றுபட்டார் என்பதும், ஞானிகள் ஐக்கியமானார், இயற்கை எய்தினார் என்பதும் உலக இயல்பு. இதில் ஒன்றுமே ஏற்றத் தாழ்வில்லை.

காய் கனிகள் கெட்டுவிட்டாலும், உயிரினங்கள் மடிந்து விட்டாலும் அறிஞர்கள் ஒன்றுபட்டாலும் இவைகளின் முடிவு ஒன்றேயாகும். இவர்கள் செயல்கள் உலக மக்கள் பலருக்குப் பயன் பட்டு வந்தன என்பதற்குத் தக, ஏற்றத்தாழ்வுக்கு உள்ளபடி இவர்களுக்குக் கொடுக்கும் மரியாதையே யாகும். பிறக்கும் முன்னும், செத்ததின் பின்னும் முடிவு எதற்கும் ஒன்றேயாகும்.

பாமரனும், சக்கரவர்த்தியும், எல்லாம் அறிந்த ஞானியும் நிலையில் ஒன்றே. பொறுப்பில் மட்டும் வேறுபாடு உண்டு.

பாமரன் எவ்விதமான மனப்பான்மையில்லாததும், இது தீயது, இது நல்லது என்ற வேற்றுமையில்லாததும் தன் உடம்

பிறகு வேண்டிய உணவுண்டும், தூக்கம், போகம் செய்து கொண்டும் தன் முயற்சியால் தன் பாதுகாப்பில் உள்ள 4 பேர்களுக்கு மட்டும் போதுமான வேலைகள் செய்துவிட்டு, தன்னையோ,உலகத்தையோ அறியவேண்டுமென்ற எண்ணமு மில்லாது முடிவு அடைந்து கொள்கிறான்.

சக்கரவர்த்தி தன் அறிவின் ஆற்றலால் குடி படைக ளைத் தன்னைப்போல் நேசித்து அந்தந்த நிலைக்கு ஏற்ப ஆட்சி நடத்தி, அதிலும் குழப்பம் வந்தவுடன் இதன் காரணம் என்ன? என்ற எண்ணம் உண்டாகும்போது கடவுள் என்ற நினைவால் தன் அறிவின் உள் குறையுடன் முடிவடைகிறான்.

மெய்யறிவினர் பல துன்பங்களை அனுபவித்ததோடு பார்த்து, கேட்டு, உணர்ந்து, அறிவின்மையால், சக்கரவர்த் தியால், குடிபடையால் வரும் ஊதியம் கேடு ஆகிய இவை களை அறிந்தும், தன் எண்ணத்தில் ஏற்பட்ட ஐயங்களை நீக் கிக் கொண்டும் பற்றற்ற நிலையில் முடிவடைகின்றனர். இதுவே உலகத்தின் செயல். இதுவே ஆட்சி ஆற்றலின் வேறுபாடு.

**நினைப்பானேன் நினைத்துப் பார்ப்பானேன்**
**பார்த்துப் பகர்வானேன் பகர்ந்து பிடிப்பானேன்**
**பிடித்துக் கசக்குவானேன் கசக்கி அணைப்பானேன்**
**அணைத்துக் கசித்திடுவானேன் கசித்து இன்பிப்பானேன்**
**இன்பித்து இன்பித்துத் தளர்வானேன்**
**தளர்ந்து தரையில் விழுவானேன்.**

**இவையெலாம் நினைப்பின் ஏக்கம் தெரியாததால்**
**நினைப்பின் இடம் தெரியாததால்**
**நினைவின் உருவ உணர்வு அடையாததால்**
**நினைவு தன் பேரின்பத்தில் இல்லாததால் தான்.**

**ஏக்க நினைவின் கசிவான கருவைத் தன் கடத்தில்**
**ஒப்பற்ற உயர்வின் சிறு இடத்தில் குருவால்,**

அறிவால் பரவிப் பிடித்து ஆக்கினையில் அழுத்தி
அம்பலத்தில் கசக்கி இருத்தி நிறுத்தக்
கசியாத பேரின்பத்தில் நிலையாய் நிலைத்து,
சிற்றின்ப சுகமும் சீராய் நடத்திப் பேரின்பப்
புகழில் மிக உன்னதமாக இரண்டறக் கலப்பீர்.

# 49 நோய்களுக்கு மருந்தும் ஊக்கமும்

*எந்த நோயாளிகளிடத்திலும், எவரும் மகிழ்ச்சியாய் ஊக்க மூட்டுஞ் சொற்களே பேசவேண்டும். அதனால் நோயாளிகள் குருதி தூய்தாவதுடன், நல்ல அணுக்கள் சரீரத்தில் புகப்பெற்று நலமுறுவர்.*

*கவலையை நிற்கவிடாதே, கவலையைத் தடுத்தால் நோய்க்கு இடமே இல்லை.*

**வருந்துவதேல்லாம் வல்லமைக்குறைவே. கிடைக்கும் துணிவை உணர்தல் வேண்டும். கடந்ததேல்லாம் அனுபவத்தில் உள்ளது. நடந்ததேல்லாம் நன்மையென்று கருதுவதினால் நடக்கப்போவதேல்லாம் நன்மையாகவே முடியும்.**

*உயர்வான இசையின்பங்களினாலும் நறுமணப் பொருள்களாலும், எழுச்சியைத் தரும் வெளிச்சத் தோற்றங்களாலும், ஊக்கமுள்ள திடச் சொற்களாலும், உருக்கமான மன ஊக்கத்தினாலும், அநேகப் பிணிகள் நீக்குவதுடன் மேலான அறிவு வளர்ச்சியும் உண்டாகும்.*

*நம்பிக்கையோடு கூடிய நன்மையான எண்ணத்தால் தீராத கொடிய நோய்களும் தீரும். உடலுக்குரிய உணவு, ஆகாயம், தட்ப வெப்பம் ஆகிய இவைகளால் உடம்பு வளர்கிறது. நாளடைவில் குருதியின் வேகத்தால் எண்ணம் ஏற்படுகிறது. உடலுக்கு அப்போது உணவு நான்காகிவிடுகிறது. அவை (1) ஆகாயம், (2) தட்ப வெப்பம், (3) உணவு, (4) எண்ணமாகும். எண்ணத்தால் வியாதிகள் தோன்றும். கெட்ட குருதியை நல்ல எண்ணத்தால் மாற்றுக. நோய் தீருவதற்கு எண்ணமே இன்றியமையாத முதல் காரணமாகும்.*

குருதி ஓட்டத்தால் எண்ணமும், எண்ணத்தால் குருதி ஓட்டமும் உண்டாகும்.

**தூய்மையில்லாதிருந்தும் துணிவு விரைவிருந்தால் நோய் இல்லை. தூய்மையிருந்தும் துணிவு விரைவில்லையேல் நோயுண்டு.**

**காய்ச்சல்** :—ஏறக்குறைய 3 நாளிலிருந்து 11 நாள் வரை உள்ள வெப்பு நோய்களுக்கு ஒரு வெற்றிலைக்குள் ஒரு பாவை இலையை வைத்துக் கடுகளவு நல்ல சுண்ணும்பும் வைத்துக் காய்ச்சல் வரும்போது கொடுத்தால், வேர்வை உண்டாகிக் காய்ச்சல் நின்றுவிடும். மூன்று வேளை கொடுத்தால் போதும்.

**கக்குவான்** :—கக்குவான் 90-நாளைக்குமேல் இருக்காது. பல மருந்துகளைச் செய்து உட்கொள்ளுவதைவிட பூசணி, தயிர், கொத்தவரங்காய் நீங்கலாக, சத்தான ஆகாரங் கொடுத்து வருவது நல்லது. குழந்தைகளுக்குக் காய்ச்சிய பாலைத் தவிர்த்துப் பச்சைப் பால் கொடுக்கக் கூடாது.

**கடுவாளப் புண்** :—கடுவாளப்புண்ணுக்கு 10, 20 பச்சரிசியை ஒரு அவுன்ஸ் காய்ச்சிய பாலிலரைத்து மேற்படி புண்ணுள்ள குழந்தை தூங்கும்போது புண்ணின் மேல் பூசி விடுக. காலையில் நல்ல சோப்பைக்கொண்டு கழுவி விடுக. 3 அல்லது 7 நாட்கள் இவ்வாறு செய்தால் போதும் குணமாகும்.

**இருதயத் தொடர்பான வலிகள்** :—இவ்வலிகள், மகிழ்ச்சியைத் தரும் செய்திகளை நினைத்தலாலும், நினைக்கப் பண்ணுதலாலும் நீங்கும்.

**நாய்ச்சொறிக்கு** :—ஓமம் கால் பலம், வேப்பங்கொழுந்து 20 இலைகள்; இவைகளைச் சேர்த்து 2 அவுன்ஸ் ஆட்டுப் பாலில் அரைத்து நல்லவிதமாகக் காய்ச்சி உடம்பின் மேல் தேய்த்து 2 மணிக்குப்பின் வெந்நீரில் குளித்திடுக. இவ்வாறு மூன்று நாள் குளித்தால் நலமுண்டாகும்.

## தேத்தண்ணீரால் தீரும் வியாதிகள்

1. காலையில் எவ்வித உணவும் உட்கொள்ளாமல் பால், சீனியுடனாவது, பால் சீனியில்லாமலாவது ஒரு வீசம் அல்லது அரைக்கால் படி தேத்தண்ணீர் மட்டும் குடித்தால் வயிற்றுப்புண், மூலப்புண், தொண்டைப்புண் உடம்பின் உட்பாகங்களிலுள்ள புண் ஆகியவையெல்லாம் தீரும்.

2. வெறும் தேத்தண்ணீரால் சிறு சூடுடன், ஆசனப்புண், மூலப்புண், மற்ற உடம்பிலுள்ள புண்களைக் கழுவினால் அவை ஆறும்.

3. மெல்லிய துணிகளைத் தேத்தண்ணீரில் போட்டு, வேகவைத்து, அத்துணியை எடுத்து வெய்யிலில் நன்றாகக் காயவைத்து எடுத்து பலவகைப் புண்களுக்கு மேல் வைத்துக்கட்டினால் புண்கள் ஆறிவிடும்.

4. தேத்தண்ணீர் சாப்பிடுவோர் ஆறிய பின்னும், ஆறியதைச் சூடவைத்தும் சாப்பிடக்கூடாது.

**நீர் அழிவு :**—சோற்று உப்பை வறுத்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு டீ, அல்லது காப்பியில் ருசிக்கு வேண்டிய அளவு போட்டு குடித்து வந்தால் நீர் அழிவு நீங்கும்.

**மற்றொரு முறை :**—இளந்தேங்காய் ஓட்டைச் சிறு, சிறு துண்டுகளாக உடைத்து, அதைச் செந்நிறமாக வறுத்து, தூள் செய்து, அதில் வேண்டிய அளவு எடுத்து நீரில் கலந்து, கொதிக்க வைத்து பின் சிறிது உப்புக்கலந்து காப்பியைப்போல, காலை மாலை அருந்திவர நீரழிவு குணமாகும். இனிப்பு வேண்டுமானால் சிறிது சேர்த்துக்கொள்ளலாம்.

பதனிடப்பட்ட புலித்தோலில் இரவில் படுத்து நித்திரை செய்து வந்தால் நீரழிவு குணமாகும்.

**மஞ்சள் :**—அமைதி, குருதித்தூய்மை ஆகியவற்றை உண்டாக்கும். மிகுந்தால் போகத்தைத் தடைப்படுத்தும். இரத்த ஓட்டத்தைக் குறைத்துத் தளர்வை உண்டாக்கும்.

**மல்லி** :—அளவுக்கு மீறி இருந்தால் குடல் சம்பந்த மான வியாதிகளும், பெண்களுக்குக் கருப்பப்பை தொடர் பான நோய்களும் உண்டாகும்.

**மிளகு, மிளகாய்** :—அமைதியும், குருதித் தூய்மையும் உண்டாக்கும். எழுச்சி தரும். மிஞ்சினுல் தாது வீணுகும், போகத்தில் நிலேக்கவிடாது.

**ஏலம், கிராம்பு, பட்டை** :—இவைகளேச் சிறிதாகச் சேர்த்துக்கொள்வது நல்லது.

**புளிப்பு** :—புளி, காடி நீர், இவைகள் பெரும் நன்மை யைத் தருவதுபோல் காட்டி, அதிகத் தீமைகள் உண் டாக்கும். முதலில் உலகப் பற்றுதல் மிகவுண்டாக்கும். அதை அனுபவிக்கக்கூடிய பொறுமையும், தன்மையும் உண்டாக் காது. மேலும் அறிவுக்குறைவை உண்டாக்குவதோடு ஒன் றிலும் நிலேக்காதபடி உழலச் செய்யும். தன் ஆண்மையால் எதுவும் செய்து முடிக்க விடாது. ஊக்கத்தையும் ஒப்புக் கொண்டு, சிறிது காலத்தில் அதையும் விட்டிடச் செய்யும். உணவு மிகுதியாக உண்ணச் செய்யும். அதில் உறைந்தி ருக்கும் சத்தின் விந்து, வன்மைக் குறைவாக இருக்கும். தயாள குணமும், இரக்க நினேப்பும் இருந்தாலும் சொற்ப அளவே இருக்கும்.

**வெங்காயம்** :—சிறு வெங்காயம் ஆறு தோலா எடை யும், சீரகம் 10 ஐயும், வீசம்படி துவரம் பருப்பையும், நீரில் வேகவைத்து சூப்பைப்போல் காய்ச்சி ஒரு பத்து விழுங்கு அளவு காலே வெறும்வயிற்றில் குடித்திடுக. விவாகமில்லாத வர்கள் ஒரு வாரத்திற்கு மேல் சாப்பிடக்கூடாது. விவாக முள்ளவர்கள் 20 நாள் சாப்பிடலாம். இதனுல் நகத்திலி ருக்கும் கறுப்பும், சிறு மேகமும் எடுபடும். குருதிப் பெருக் கத்துடன் தாது வலுவும் உண்டாகும். சோகையும் எடுபடும்.

சிறு வெங்காயம் பன்னிரண்டை உரித்து வைத்துக் கொண்டு, குளித்ததின் பின் ஈரம் போக்காது வெங்காயத் தைச் சாப்பிட்டுவிட்டுத் தலையை ஈரம் போக்கிக் கொண்டால்

உடலில் கெட்ட குறுதி நீங்கி நல்ல குருதி உண்டாகிறது. இவ்வாறு 10 நாட்கள் சாப்பிடுதல் நலம் பயக்கும்.

**குருதிக் கொதிப்புக்கு :**—யோகம் செய்தவர்களாயிருந்தால் செய்யாதிருத்தலும், அடிக்கடி சவரம் செய்துகொள்ளாதிருத்தலும் நல்லது. இளம் பருவத்தினர் 4 நாளைக்கொரு தடவை சிற்றின்பம் நுகர்தல் நல்லது. குளிர்ந்த ஆகாரமும், நல்ல காற்றும், இருட்டுமுள்ள இடங்களில் வாழ்ந்திடுக. புலாலுண்போர் கொழுப்புச் சத்துள்ள உணவுண்டலும், மரக்கறியுண்போர்கள் புடலங்காய், சுரைக்காய், அவரைக்காய் உண்டலும், அடிக்கடி மூளைக்கு வேலை கொடுக்காதிருத்தலும், நீராகாரம் அடிக்கடி குடித்தலும், பேசாதிருத்தலும், மேலும் ஒரு சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டு தன் கால்களைக் கெரண்டை வரையும் ஒரு பாத்திரத்தில் சுட வைத்து ஆறிய தண்ணீரில் ½-மணி நேரம் வைத்திருத்தலும், நெற்றியில் எண்ணெய்த்தை வைத்துக் கொண்டிருத்தலும், வாசனைப் பொருள்களை உபயோகப் படுத்தாதிருத்தலும், பன்னீரை உபயோகப் படுத்தலும் நல்லது.

**பீனசம் :**—குடை மல்லிகைப்பூவை 20 நாள்வரை அடிக்கடி நுகர்ந்து பார்த்து வந்தால் பீனசம் நீங்கிவிடும்.

**மூல நோய் :**—மிகக்கார்ப்பு (உறைப்பு) ஒரே இடத்தில் இருப்பான வேலைகள், நெடுந்தூரம் சைக்கிளிற் செல்லுதல், அளவுக்குமீறிய கால்நடை ஆகிய இவைகளால் மூலநோய் ஏற்படுகிறது. சிறு வயதில் அளவு மீறிய இன்ப நுகர்ச்சியாலும் இது ஏற்படலாம். மேற்கண்டவைகளில் அளவாக இருப்பதுடன், சிவப்புக் காராமணி—தட்டைப்பயறு வீசம் படி அளவு நீரில் வேகவைத்துக் காலையில் வெறும்வயிற்றில் 40 நாளைக்கு உண்டால் குணமாகும்.

**தாதுப் பெருக்கம் :**—கால் ரூபாய் எடையுள்ள முருங்கைப் பூவைச் சிறிது கற்கண்டு சேர்த்து, அரைக்கால்படி பசுவின் பாலில் நன்றாகக் காய்ச்சி எடுத்து, ஒரு சேர் அளவு 7 நாள் குடித்தால் தாதின் பெருக்கமும், ஆண் தன்மையின் வளர்ச்சியும் உண்டாகும். படுக்கைக்குப் போகுமுன் அரை

மணி நேரத்திற்கு முன்னே சாப்பிடுக. மிகுதியான போகத்தை விரும்புகிறவர்கள் ஒரு வாரமும், வாலிபர்களா யிருந்தால் 3 நாளைக்கு மேலும் சாப்பிடக்கூடாது.

**பைத்தியம் :**—சோற்றுக் கத்தாழை இரண்டும், ஒரு கைப் பிடியளவு வெந்தயமும் சேர்த்து, உரலில் போட்டு இடித்து, எடுத்து தலையில் தடவி வைத்து, மூன்று மணி நேரமாகியதும் குளிர்ந்த நீரில் நீராடினால் பைத்தியம் நீங் கும். இப்படி 10 நாள் செய்தல் வேண்டும். சளி பிடித்தி ருந்தால் ஒரு நாள் இடைவிட்டு நீராடுதல் நலந்தரும்.

**கண்டமாலை :**—முர்தாஜிங், ஹர்டுதால் இரண்டையும் தூள்செய்து வரகு வைக்கோலைச் சுட்டுச்சாம்பலாக்கி, மூன் றையும் சம எடை தேங்காய் எண்ணெயில் குழப்பி, கோழி இறகால் நோயுள்ள இடத்தில் தடவி வந்தால் புண்ணாய் இருந்தாலும் கட்டியாக இருந்தாலும் ஆறிவிடும். இந்த மருந்து வாயிலும், கண்ணிலும் படக்கூடாது.

**சிறங்கு :**—10, சீயக்காயைச் சுட்டுத்தூள் செய்து அறை வீசம்படி தேங்காய் எண்ணெயில் குழப்பி மேலே மூன்றுநாள் பூசக் குணமாகும்.

**தொழுநோய் (குட்டம்) மேகம் :**—எருக்கு வித்துக்களைக் காயவைத்துத் தூள் செய்து நல்ல மூடியுள்ள கண்ணாடியில் போட்டுவைத்துக் கொள்ளவேண்டும். 15-நாளைக்கு ஒரு முறை 5-நாளைக்குத் தொடர்ந்து காலையில் 31 குன்றிமணி எடை வீதம் தூளை எடுத்து வாயில் போட்டு 10 விழுங்கு வெந்நீர் அல்லது குளிர்ந்த நீரை அருந்தவேண்டும். இப்படி ஆறுமாதம் உண்டால் மேகம், குட்டம் குணப்படும்.

**நரம்பு வியாதி :**—மேற்படி மருந்தை அதே அளவு முன்போலக் கொடுத்திடுக. குணமாகும்.

**மாத விடாய் :**—30-நாள் கழித்தும் மாதவிடாய் ஆகா திருந்தால் மேற்சொன்ன மருந்தைக் காலையில் ஒருநாள் அல் லது இரு நாள் மேற்சொன்ன அளவு சாப்பிட்டு வந்தால்

மாதவிடாய் உடனே ஆகும். எவ்விதத் துன்பமும் உடம்பிற்கு உண்டாகாது. மாதவிடாய் மிகுதியாய்ப் போய்க் கொண்டு இருந்தால் தாசாணிப்பூ அல்லது சப்பாத்திப் பூ 7ஐ வெந்தயத்தோடு பாலில் வைத்து அரைத்துக் காலையில் 3 நாள் சாப்பிட்டால் மாதவிடாய் நின்று அளவாய்ப் போகும். (தாசாணிப்பூ, குலாப்பூ வென்றும் சப்பாத்திப்பூ மந்தாரைப்பூ அல்லது செம்பருத்திப்பூ வென்றும் பெயர் பெறும்.) மாதவிடாய் அறவே இல்லாதிருந்தால் மேற் சொன்ன பூவை மேற்கண்ட முறைப்படி 7-நாள் காலை நேரத்தில் கொடுக்க மாதவிடாயாகும். உடல் நலமாக இருக்கும். இதற்குப் பத்தியம் 7-நாட்களுக்குப் பாற்சோறு கொடுக்க வேண்டும்.

**வெட்டை :**—செம்பருத்திப் பூவைக் காலையில் மூன்று வீதம் 10 நாட்கள் உண்டால் ஆண் பெண் இருவர்களுக்கும் வெட்டை நோய் குணமாகும்.

**மற்றொரு முறை :**—ஆவரம் பூவையும் ரோஜாப் பூவையும் வெயிலில் நன்கு உலர்த்தி எடுத்து வைத்துக்கொண்டு அதில் வேண்டிய அளவு எடுத்து தண்ணீரில் போட்டு, கொதிக்க வைத்து வடிகட்டி அதில் பால், சீனி கலந்து, டீ, காப்பி போல அருந்தி வந்தால் வெட்டைச் சூடு குணமாகும்.

**வெண் குஷ்டத்திற்கு :**—செம்பருத்திப் பூவில் வெள்ளை நிறப் பூவின் இலைக்கொழுந்து 10 ஐ பொடியாக அறுத்துக் கேழ்வரகு (கேப்பை) மாவுடன் கலந்து ரொட்டியாகச் சுட்டுக் காலை வேளையில் உண்க. 20, 40 நாட்கள் சாப்பிட்டால் வெண்குட்டம் அறவே தீரும். காலையில் வேறு ஒன்றும் உண்ணக்கூடாது. மத்தியானம் வழக்கப்படி எதையும் உண்ணலாம். புளிகூடாது.

**காலரா :**—ஒரு எலுமிச்சம் பழத்தை அறுத்து அதன் சாற்றையும், வித்துக்களையும் ஒன்று சேர்த்து நன்றாக அரைத்துக் கொடுத்திடுக. ஒன்று இரண்டு மூன்று முறையில் உடனே காலரா நின்றுவிடும்.

**காசம் :—மருந்து இல்லாமல் ஈளை நோய் (காசம்) இளைப்பு, இருமல் ஆகிய நோய்களைப் போக்கும் வகை:** *தயிர், மோர், பால், வாழைப்பழம், ஆரஞ்சுப்பழம், ஒவல்டின், ஆர்லிக்ஸ், கோழி முட்டை, பழைய சாதம், ஆறிய தேத்தண்ணீர், குளிர்ச்சியான உணவுகள் ஆகியவற்றைச் சாப்பிடாமலும் பெருங்கடற் காற்றைச் சுவாசிக்காமலும் இருப்பதோடு, குளிர் நீரில் அடிக்கடி குளிக்காமல் இருப்பதும் உடம்புக்கு, சீயக்காய், குளிமைதரும் சோப்பு இவைகளைப் போடாமல் இருப்பதும், பகல் தூக்கம், பகல் போகம் இவைகள் இல்லாதிருப்பதும் மேற்கண்ட நோய்களைத் தடுக்கும்.*

*இந்த வியாதி உள்ளவர்கள் இரவில் சாப்பிடக்கூடாது. பகலில் ஒரு வேளை சாப்பிட்டால் போதும். அந்த ஆகாரத்துடன் துளசிக் கொழுந்து பச்சையாகவே சேர்த்து உண்ணலாம். இப்படி 40 நாட்கள் உண்டால் உடனே காசநோய் குணமாகும். மாலையில் ஆடு தின்னாப்பாளை என்னும் இலை இரண்டும், மிளகு மூன்றும் சேர்த்து வாயில் போட்டு மென்று உண்டாலும் குணமாகும்.*

**இந் நோயை அடியோடு நீக்குவதற்கு முறை :—***ஈளை நோயை அரசாங்க மருத்துவப் பகுதியினர் இரண்டு ஆண்டுகளுக்குள் போக்கிவிடலாம். உறுதியாய்ப் போய்விடும் இனி ஈளை நோய் எங்கும் உண்டாகாதென்றும், இருக்கும் ஈளை நோயெல்லாம் 2 ஆண்டிற்குள் நீங்கிவிடும் என்றும், கண்பார்வை எங்கெங்கே படுமோ அங்கங்கெல்லாம் விளம்பரங்கள் ஒட்டவேண்டும். இதனால் ஈளைநோய் இரண்டு ஆண்டுகளில் நீங்கிவிடும். எண்ணமே காரணமாக இருப்பதால் மேல்கண்டபடி செய்தல் நல்லது. துப்பாக்கி உள்ள ஒருவனிடம் கொடியோன்நெருங்காததைப்போன்று, அரசியலார் விளம்பரப் பதிவு எல்லா இருதயங்களிலும் பதிந்துவிட்டால், அப்பதிவுக்குப் பயந்து இக்காச அணுக்கள் மக்களிடம் நெருங்க மாட்டா.*

**மற்றொரு முறை :—***ஒரு சிறுதுண்டு சித்தரத்தையும்* 4-5 *மிளகையும் கல்லில் வைத்துத் தட்டி எடுத்துக் காப்*

பியைப்போல் சாறு இறக்கி வைத்துப் பாலுடனும், பால் இல்லாமலும் சீனி சேர்த்து 3 நாளைக்கு காலை, மாலை ஒரு கிளாஸ் வீதம் சாப்பிட்டால் தொடக்கமான ஈளைநோய் குணப்படும்.

**நீர்த் தொடர்பான வியாதிகள் :**—வெள்ளறுகு இலையைக் காயவைத்துத் தூள் செய்து ஒரு புளிய வித்து அளவு எடுத்து வாயில்போட்டு காலை மாலை சாப்பிட்டு நந்நீர் அல்லது வெந்நீரருந்தி வந்தால் எல்லாவித நோய்களும் குணமாகும். 7 நாட்கள் உண்டால் போதும்.

**மயக்கம் :**—பயம், மயக்கம், பதற்றம் இவைகளுக்கு இரவுகளில் படுக்கைக்குப் போகுமுன், கண்ணாடியில் தன் முகத்தைக் கூர்ந்து கவனித்துவிட்டு, குளிர்ந்த நீரை ஒரு சேர் குடித்துவிட்டுப் படுத்தால் இலகுவாக மயக்கம் பயம், பதற்றம் நீங்கிவிடும்.

மயக்கத்தாலும் மூர்ச்சையாலும் கீழே விழுந்து விட்டால் மூன்று நான்கு மூட்டைப் பூச்சிகளை நசுக்கி மூக்கினுள் வைக்க உடனே மயக்கமும் மூர்ச்சையும் குணமாகும்.

இந்த வியாதிகள் மண்ணீரலாலும், பித்தத்தாலும் ஏற்படுவதாகும். ஆட்டின் மண்ணீரலை வாங்கி, காலையில் சுட்டாவது, பொரித்தாவது, சாறு இறக்கியாவது 20 நாட்கள் உண்டால் எவ்விதமான பயமும், மயக்கமும், மூர்ச்சையும் குணமாகும்.

**நச்சுக்கடி வீக்கங்களுக்கு :**— 2 கொட்டைப்பாக்கு அளவு சுண்ணாம்பு, 2 புகையிலைக் காம்பு, இரண்டு அங்குல நீளம் எருக்கஞ்செடியின் வேர் இவை மூன்றையும் நன்றாக நீர்கலந்து அரைத்து, வீக்கத்தின்மேல் பற்றுப்போட்டுக் காலையில் வெந்நீரால் கழுவி விடுக. இவ்வாறு மூன்று நாட்கள் செய்யக் குணப்படும்.

**மற்றொரு முறை :**— நான்கு மாவிலைக் கொழுந்தைத் தன் வாயில்மென்று எச்சிலுடன் வீக்கத்தின்மேல் 2 மணிக்கு

ஒருமுறை பற்றுப்போட்டு வந்தால் 2 நாளில் பெரும் வீக்கங்கள் குணமாகும்.

**வீக்கங்களுக்கு :**—உடம்பில் அடிபடுவதால் ஏற்படும் வீக்கங்களுக்கும், வாதநோயால் ஏற்படும் வீக்கங்களுக்கும், பீஜம் சம்பந்தமான வீக்கங்களுக்கும், வீக்கமுள்ள இடங்களில் அதிக உப்புப் போட்டுக் காய்ச்சிய வெந்நீரால் (பகலில் அடிக்கடியும், இரவில் படுக்கைக்குப் போகுமுன்னும், காலையில் எழுந்ததும்) ஒத்தணம் கொடுத்துவந்தால், அவ்வீக்கங்கள் குணமாகி நன்மை பெறலாம். கடல் நீரைக் கொதிக்க வைத்து ஒத்தணம் கொடுக்கலாம்.

**விஷ கடி :**—நட்டுவாக்காளி கடித்தால் ஒரு வெற்றிலையில் சிறிது உப்பை வைத்துச் சாப்பிட்டால் விஷம் நீங்கிக் குணமாகும்.

**தேள் கடி :**— ஈரத்துணியாவது, பனிக்கட்டியாவது தேள் கடித்த வாயில் கட்டுக. உப்பு நீரைக் கொஞ்சம் கண்ணில் விடுக. உடனே நஞ்சு இறங்கிவிடும். உணர்வாளர்கள் தங்கள் உணர்வைக் கடித்த இடத்தில் செலுத்தினால் போதும்.

**குருதிப் பெருக்கத்திற்கு :**—குதிகாலில் சிறிது உயர்ந்த செருப்புக்களை அணிவதிலும் கைத்தடியைத் தலைகீழாகப் பிடித்து நடப்பதிலும் கிழவர்களுக்கு ஊக்கமும் குருதிப் பெருக்கும் உண்டாகும்.

**மேகப்படை, பித்த வெடிப்பு இவைகளுக்கு:**—சீத்தாச் செடியின் இலை 10ஐ கோழிமுட்டை ஒன்றின் வெள்ளைக் கருவுடன் சேர்த்து அரைத்து, நோயுள்ள இடங்களில் தடவிப் படுத்துக்கொண்டால் 3 வேளையிற் குணமாகும்.

**நீர் அடைப்பு:**—சிறுநீர் போகாமல் துன்பப்படும்போது மூட்டைப் பூச்சிகள் இரண்டு மூன்றை நசுக்கிச் சிறுநீர்த் துவாரத்தில் வைத்திடுக. உடனே சிறுநீர் வெளியாகி நீர் அடைப்பு நீங்கும்.

**ஜன்னிக்கு** :—மூன்று நான்கு மூட்டைப் பூச்சிகளை சிறிது பனை வெல்லத்தில் வைத்து உள்ளுக்குக் கொடுத்த வுடனே ஜன்னி நீங்கும்.

**மயிர் முளைப்பதற்கு** :— மயிர் உதிர்ந்த இடத்திலும், மயிர் முளைக்காத இடங்களிலும் 4 அல்லது 5 மூட்டைப் பூச்சிகளை நசுக்கித் தேய்த்து வருக. மயிர் முளைக்கும்.

**நல்லெண்ணத்தால் உடல் நலமும் உணவுக் குறைவும் உண்டாம்**
**தீய எண்ணத்தால் உணவு சுருங்குமாயினும் உடல் கெடும்.**

**கண்** :—வெள்ளைச் சுருமாவைக் கண்ணில் தடவி வந் தால் கண் சம்பந்தப்பட்ட எல்லா நோயும் தீரும். இரவில் படுப்பதற்கு முன் தன் எச்சிலை விரலால் எடுத்துத் தன் இரு கண்களின் ஓரங்களிலும், உள்ளேயும் தடவி வந்தால், கண் களிலுள்ள மாசு நீங்கிப் பிரகாசமாக இருக்கும். வெள்ளெ ழுத்தும் நீங்கும்.

**தடிமன் (ஜலதோஷம்)** :—ஜல தோஷத்தால் சிரமப் படுகிறவர்கள், தேயிலையை வெந்நீரில் போட்டுக் கொதி வந்ததும் அந்நீரால் மூக்கு, முகத்தை நன்கு கழுவி, ஆவி பிடித்தால் குணமாகும்.

**பச்சை வாதம் மேகப்படை** :—இந் நோய்களுக்கு முசுறு எறும்பை மூன்று கைப்பிடி அளவு பிடித்து, அரைக் கால்படி தேங்காய் எண்ணெய்யில் போட்டு, நெய்வாடை வரும்வரை அடுப்பில்வைத்துக் காய்ச்சி வடி கட்டி எடுக்கும் எண்ணெய்யை நோயுள்ள இடங்களில் தேய்த்து வந்தால் குணமாகும்.

**வழுக்கைத் தலைக்கு** :—நாற்பது வயதிற்குட் பட்டவர் களுக்கு, தலையில் மயிர் உதிர்ந்து வழுக்கை ஏற்பட்டிருந் தால் **ஈப்புலி** (இது எட்டுக்கால்களை உடையதும், ஈக் களையே பெரும்பாலும் உணவாக உண்டு வீடுகளில் காணப் படும் ஒரு வகைப்பூச்சி.)10 அல்லது 20 ஐ பிடித்து, நசுக்கித்

தலையில் தேய்த்து வந்தால், தலையில் மயிர் முளைத்து முடி நன்கு வளரும்.

**நரம்புப் பிடிப்பு, முழங்கால், முழங்கைப் பிடிப்பு அல்லது வாதம் :**—மாதருடன் போகம் செய்யுங்கால் முழங்கால் தரையில் (படாமலிருந்தால்) அழுந்தாதிருந்தால், இந் நோய்கள் அதிகப் படாமல், விரைவில் குணமாகிவிடும். போகிக்கும் பொழுது, முழங்காலுக்கு மெதுவான துணி, அல்லது தலையணைகளை உபயோகப் படுத்திக்கொண்டு வருவதில் மேற்கண்ட நோய்கள் அணுகாது.

**நயவஞ்சகக் குரோதம் உடையவர்களே ! :**—உங்களின் எண்ண அணுக்களின் அலைகள், உலகில் க்ஷய ரோகம், காசம் ஆகிய கொடிய வியாதிகளை மக்களுக்கு உண்டாக்குகின்றன.

**தீமையும் வஞ்சனையும் சூனியமும் செய்பவர்களே! :**— உங்களின் எண்ண அணுக்களின் அலைகள், மக்களுக்குச் சொறி, சிரங்கு, கக்குவான், கடவாளப் புண், சிறு காய்ச்சல் முதலிய நோய்களை உண்டாக்குகின்றன.

**கஞ்சத்தனமும் உலோப குணமும் உடையவர்களே! :**— உங்களின் எண்ண அணுக்களின் அலைகள் மக்களுக்கு வாதம், பாண்டுரோகம் முதலிய வியாதிகளை உண்டாக்குகின்றன.

எனவே, நீங்கெளல்லாம் இவற்றை உணர்ந்து நல்லெண்ணங்களை எண்ணுங்கள். உலகில் இவ்வியாதிகளே உண்டாகாது; மக்கள் நலமுறுவர்.

# 50 பற்றும் (தொந்தமும்) மாயையும்

அடிமூலத்திலுள்ள பொருளை அறியாதபோது; அடியேன் என்பது தகும்; அடிமூலத்திலுள்ள பொருள் அம்பலத்தில் ஏறி அப்பொருள் மெய்யுணர்வாய் இருப்பதால், அடியேன், ஊழியன் என்று இனி எழுதுதலும் பேசுதலும் வேண்டாம்.

தம் நலத்திற்கு வேண்டியவற்றைச் சேகரிப்போர் அல்லது அம் முயற்சியுடையோர் அளவுக்குமீறிச் சேகரிப்பதும், சேகரிக்க யோசிப்பதும் ஆசையுடையோர் செயல்களாகும். தம்மைச் சார்ந்தோர், அறிந்தோரின் உயிர் அறிவு நிலைகளில் அக்கரை செலுத்துபவர், அன்பும், கருணையும் உடையவர். உலக முழுவதும் சீர்திருத்தமாக இருக்கவேண்டுமென்று முயல்வோர், பெருந்தன்மையும் ஒற்றுமையும் விழையும் தன்மையராவர் இதில் ஓரளவு அமைதியில்லாதார் மாயையுடையோர், பற்றுடையோர், கட்சி பேதமுடையோர், நானென்ற அகந்தையுடையோர், மதவெறி பிடித்தோர் ஆவார்கள்.

பறவைகள், மிருகங்கள், கன்றுகள் தத்தமக்கு இரை தேடித் தாமே உயிரைக் காப்பாற்றிக் கொள்ளக்கூடிய வல்லமை வரும் வரை, பாதுகாத்து வளர்த்து விடப்படுகின்றன. அதுபோன்று மனிதர்களின் குழந்தைகள், தம்மைச்சார்ந்தோர்களை விட்டுவிட முடியாதற்குக் காரணம், மனிதருக்கு உணவு, உடை, தொழில், இடம் ஒழுக்கம், கல்வி, அறிவு ஆகிய இவைகளெல்லாம் வேண்டியதாய் இருப்பதாலும், இவை யாவும் அரசியல் ஆட்சிப் பொறுப்பில்லாதிருப்பதாலும், ஒருவர்க்கொருவர் ஆதரிப்பதிலும், ஒரு பொருளோடு ஒரு பொருள் சேகரிப்பதிலும் பற்றும் மாயையும் ஏற்படலானதே. சீர்திருத்த அறிவாளிகள், பற்றற்ற நிலையில் இருந்து நற்காரியங்கள் யாவும் செய்து முடிப்பார்கள்.

**உடலை நடத்துவது ஞாபகம்**
**உடலில் உணர்வது அறிவு**
**உடலாய் இருப்பது நினைப்பு**
**நினைப்பாய் உள்ளது "நான்"**

தோன்றும் நினைவுகளால், உலகத்தில் உள்ள எல்லா ஆட்சி முறைகளும் நடக்கின்றன.

தம் நிலைமைக்குத் தக்கவாறு உடம்பிலுள்ள குருதிச் சுழல் உள்ளவரை தம்மைப்பற்றிய நினைவுகளும் உலகி

ுள்ள சூழ்நிலைக் கேற்பவும், காலத்திற்கேற்பவும், ஆங்காங் குள்ள நினைவுகளும் எவருக்கும் ஏற்படுவதுண்டு. அதில் சீர்தூக்கிப் பார்த்து நல்ல வழியில் நடந்து கொள்பவரே அறிவாளியாவர். இதை யறியாது, இவ்விதமான சிந்தனைகள் ஏற்பட்ட உடன், தம் மனம் கட்டுப்படவில்லை என்று ஏங்கித் தம் தவத்தையும், நற்காரியங்களையும் விட்டு மடிந் தோர் பலர். ஆகையால் உணர்வைக் கவனிக்கும்போதும், நற்காரியங்களைச் செய்யும்போதும், இவ்வித நினைவுகள் தோன்றினால், மனம் நிலைபெறவில்லை யெனத் தோல்வி யடையாதீர்கள்.

கண் காதால், கண்டு கேட்டு, கொண்ட மாயைதனைக் கண் காதால், இனி கண்டு, கேட்டு, அறிந்து விட்டொழி யுங்கள்.

மலை ஏறத் தெரிந்த யானைக்கு, மரம் ஏறத் தெரியாது. மரம் ஏறத் தெரிந்த குரங்கு, மலையும் ஏறி மகிழும். அது போன்றே - ஊரார், உற்றார், குடும்பத்தினரை அறிந்த அனு பவம் உடையோர் மகிழும் மகிழ்ச்சியுமாகும்.

மலைமீது போய் இருந்தாலும் தூய்மையில்லாவிடில் அங்கும் ஈ, எறும்பு, கொசுக்கள் மொய்த்துத் துன்புறுவது போல், தெளிந்த தூய அறிவில்லாவிடில் பல வகையிலும் துன்புற நேரிடும். அறிந்தவன் இவ்வுலகத்துடனேயே ஒட்டி வாழ்ந்து முக்தியடையலாம்.

பற்றுக்களில் நாம் அழுந்தியவர்கள் என்று எண்ணி அலங்கோலமாய்த் திரிந்திடாமல், அப்பற்றுக்களெல்லாம் தன்னறிவுக்குள் அடங்கிபதே என்று தன்னறிவில் அறிந்து கொள்ளுங்கள்.

வாளா (சும்மா) இருப்பதே இன்பம் என்று சொல்லள வில் நின்று விடாமல் வாளாவிருக்கும் இடமும் பொரு ளும் அறிந்து, மூச்சை அடக்காமலே வாளா விருக்கத் தெரிந் துகொள்ளுங்கள்.

நான் என்ற ஆணவங்கொண்டு, தவநாட்ட மில்லாதி ருந்து விடாமல், நான் என்னும் ஆதியையும் அதன் பொரு

ளையும் அறிந்து உணர்வாய்க்கொண்டு, நான் என்ற இடத்தில், நாமாக இருக்க முற்படுங்கள்.

கண்டதெல்லாம் கடவுள் என்று கையெடுத்துக் கும்பிடாதீர்கள். முன் கும்பிட்ட பலனால் இறைவனே ஆனீர்கள். தலைவிதி, விதியென்று சொல்லி மதிமோசம் போகாமல் அவ்விதியை மதியால் வென்று, மாயையும் கண்டு, அறிவின் வெப்புத்தால், தன்னைத்தான் உணர்வீர்கள்.

# 51 பக்தி

உடல் உழைப்பிற்கு உறக்கம் இன்றியமையாமை போன்று அறிவின் நிலையை அறிவதற்கு 'பக்தி' இன்றியமையாதது. ஓ அன்பர்களே! பக்தர்களே! உங்கள் பெரும் பக்தியின் தூக்கத்தை விட்டு எழுந்திருங்கள். ஆராய்ச்சியுள்ள தீவிர பக்தன், அறிவாளியாக விளங்குவான். வீரமில்லா அமைதியுடன், ஆராய்ச்சியில்லாத பக்தனாக இருப்போனுக்கு, இரத்த ஓட்டக்குறைவு ஏற்பட்டுப் பல நோய்கள் ஏற்படலாம்.

தன் குற்றங்களை உணர்ந்து பக்திச்செயலில் ஈடுபடுவோன் பின் குற்றங்கள் செய்யாதிருந்தும், முன்செய்த குற்றங்களை நினைந்து, அடிக்கடி வருந்திக்கொண்டே இருப்பானானால், அவனுக்கும் வியாதிகள் தொடரலாம்.

பெரும் மூடநம்பிக்கையுள்ள பக்தனாக இருப்பவனால் பிறருக்கு நன்மையோ, தீமையோ பல ஏற்படலாம். அதனால் அவனுக்கு யாதொரு பயனும் கிடையாது.

உலகத்தோர்களின் பார்வைக்காகப் பக்தனாக வேடந் தரித்தோன் பலவகை இன்னல்களை மக்களுக்கு விளைவிப்பான்.

கீழ் இனத்தில் பிறந்து, மேலினத்திற்கு வந்து தன் இனத்தைத் தாழ்த்துபவனும், மேலினத்திற் பிறந்து, தன் இனத்தைப் பெரிதாகப் போற்றுபவனும் அறிவாளியாகான்.

'பக்தி' என்பது உடல் நல்வழிமை (சுகாதாரத்தை) உண்டாக்கிக் கொள்வதேயாகும். நல்வழியில் இருப்பீர்களானால் அறிவு பெருகும்.

ஓ பாலர்களே! எல்லாம் ஈசன் மயம் என்று வணங்கி வாலிபர்கள் ஆகிக்கொள்ளுங்கள். ஓ வாலிபர்களே! பல தெய்வங்களை வணங்கி பாலர்கள் ஆகிவிடாதீர்கள்.

**இருக்கும் இடத்தின் அழுக்கும்**
**உடுத்தும உடையின் அழுக்கும்**
**பருஉடலின் மேல் அழுக்கும்**
**உள்ளத்தில் மன அழுக்கும்**
**இல்லாதிருந்தால் அறிவாளியாவார்.**

## 51/1 அன்பு

உணவு, உடை, தொழில், இடவசதி, அறிந்த அனுபவம் ஆகிய இவற்றை ஒருவருக்கொருவர் பங்கிட்டுக் கொள்ளும் உயர்ந்த தன்மையின் விளைவே **அன்பு.**

உங்களின் அன்புக்குரிய மனைவியோடும் சுற்றத்தாரோடும் அன்பாய் வாழ்வதுடன் அறிவை ஆராய்ந்தறிந்து பெருக்கிக்கொள்ள வேண்டும் விரிவாய்ப் பேசுவதைக் காட்டிலும் சுருக்கிச் சுருக்கமான சொல்லொன்றால் விளக்குங்கள். நீங்கள் வீணாக ஆவியைப் போக்காமல் கருத்துடன் கண், காது, ஆகியவற்றில் உணர்வைச் செலுத்திச் செய்யுங்கள். அது பெரும் நன்மையாகவே முடியும்.

கேள்வி :—சுவாமி! குரோதமும், கோபமும் எப்போது என்னைவிட்டு நீங்கும்?

பதில் :—அப்பா! நல்ல கேள்வி. உணரும்போது உன்னை விட்டு அவை நீங்கும்.

கேள்வி :—யுத்தத்தால் என்ன நன்மை? யுத்தம் நடைபெற வேண்டியது அவசியமா?

பதில் :—சுமார் 20, அல்லது 30 ஆண்டுகளுக்கு ஒருமுறை யுத்தம் நடந்தே தீரவேண்டும். நடப்பதில் அறிவின் உயர்வும், புதிய ஆராய்ச்சி நுட்பங்களும், சுறு சுறுப்பும், துரிதமும், புதுச் சீர்திருத்தங்களும், புதிய தொழில் முறைகளும், உலக சுத்தமும், மனச் சமாதானமும் ஏற்படும்.

கேள்வி :—நான் உயர் நிலை அடைய எது மேலான வழி?

பதில் :—பிறரைத் தாழ்த்தி, தான் உயர்நிலை அடைவதை விட, பிறரை ஆமோதித்துத் தான் உயர்நிலை அடைவது மேலான வழி.

என் இருதய மலர்களே! வாழைக்கு நீர் பாய்ச்சுவது போலில்லாமல் ஆலமரத்திற்கு நீர் பாய்ச்சுவதுபோல் என் சொல்லில் இருந்து கொள்ளுங்கள்.

கருத்துக்களை விளக்கிச் சொல்லும்போது, பித்தளையைப்போல் பிரகாசிக்காமல், பொன்னைப்போல் பிரகாசிக்க வேண்டும். பிரகாசிப்பீர்கள்.

# 52 இயற்கை, செயற்கை

அணு இயற்கை, அணுக்களின் செயற்கையே எல்லா உருவங்களும்.

வெட்ட வெளியாயுள்ள அணுமயமே உருவங்களாகி, அவ்வுருவங்கள் அழிந்த பின்னர், முன்னுள்ளபடி அணு மயமாகிய வெட்டவெளியாகி விடுகிறது.

உலகத்தில் உள்ள அனுபவங்களெல்லாம் உருவங்களாகி, அது அழியும் வரையுள்ள இடைக்காலத்தில் மட்டுமே அவ்வுருவங்களிருக்கும். இதில் மனிதர்களுக்கு, அனுபவ அறிவு ஏற்பட்டு, அதில் மிகத்துன்பமோ, அல்லது அளவு கடந்த இன்பமோ ஏற்பட்டதன்பின், இவைகட்குக் காரணம் அறிய முற்படுகிறார்கள். இதில் சிலர் அறிவாலும், பல துணைக் கருவிகளைக்கொண்டும் அறிய முற்படுகின்றனர். மற்றும் சிலர் தவத்தாலும், பலவித யோகத்தாலும் அறிய முற்படுகின்றனர்.

அணுக்களின் கூட்டுறவுகளாயுள்ள உருவங்களின் தடிப்புக்களும், ஒலி அலைகளின் வேறுபாடுகளும், புலன்களும், செயல்களும், நிர்வாகங்களும் ஒரே பொருளினின்றும் உண்டாகியிருந்தும், பலவிதமான வேறுபாடுகளாகவும் பெருகி இருப்பதால் இதைப்பற்றி ஒரு மனிதன், தன் ஆயுள் உள்ளவரை ஆராய முற்படினும், எல்லாத் தத்துவ ஆராய்ச்சியும் உண்மையாகக் கண்டுபிடிக்க முடிவதில்லை.

அதனால் இதுவரை உலகில் ஒருவருக்குப்பின் ஒருவராக ஆராய்ந்து ஒவ்வொன்றையும் கண்டுபிடிக்கவேண்டியதாயிற்று.

இவற்றிலும் இயற்கைக்குமேல் ஒன்று இருப்பதாகக் கற்பித்துக்கொண்ட கற்பனையாளர்கள், இயற்கை தத்துவத்தைக் கண்டுபிடித்தோர்கள் என இருவகை உண்டு.

இவ்விரு வகையாளர்களில் இயற்கைத் தத்துவ ஞானமுடையோராய்க் கற்பனைக்குள்ளாகி, தன்னில் தான் குறைபடுவோர்களையும், இயற்கைக்குமேல் ஒன்று உள்ளதாகக் கற்பித்துக்கொண்டுள்ள கற்பனையாளர்களையும், உலக மக்களிற் பெரும்பான்மையோர் போற்றினாலும் அவர்களுக்கு இயற்கைத் தத்துவ விளக்கம் விளங்காதவரை அவர்கள் தம் அறிவில் பெரும் குறையாகவே இருப்பார்கள்.

ஆகையால் அறிவாளிகளே! இயற்கைத் தத்துவத்தையும், கற்பனையின் காரணத்தையும், ஒருவர் விளக்கமாக அறிந்துகொண்டால்தான், ஐயப்பாடில்லாமல் பெருந்தன்மையோடு நிம்மதியடைய முடிகிறது.

குருடன், தான் கண்களை இழந்த பாக்கியத்தால் கடவுளைச் சதா காலமும் பார்த்துக்கொண்டே இருக்கிறேனென்று சாமர்த்தியமாகச் சொல்லுவதை, உண்மை என நம்பித் தன் ஒளி பொருந்திய கண்களை இழந்து குருடர்களாகி விடாதது போன்று, கற்பனையை நம்பி விஞ்ஞான அனுபவ அறிவை இழந்து விடாதீர்கள்.

அணுக்களின் கூட்டுறவின் ஏற்றத் தாழ்வே, உருவங்களின் பலவகைத் தோற்றம்.

தொழில் அனுபோக அறிவு வேறுபாடே அறிவின் பாகுபாடு. ஒலி அலையின் வேறுபாடே மொழி, மந்திரம், மறை, முடிவு.

ஒரு பொருளே, பல பொருளாய் வேறுபட்டிருப்பதை அறிந்து கொள்வதே தன் அறிவிற்கு அமைதி தருவதாகும்.

உடல் நலத்தோடு கூடிய அழகும், நடத்தை, ஒழுக்கச் சிறப்பும், உள்ளத்தின் தெளிந்த தூய்மையும், அறிவு தன்னிலை விளக்கமும் பெற்றிருப்பதே மனித ஈசன் நிலை.

உலகத்தவர்களே! உலகில் இருக்கும் அறியாமையைப் போக்கி, அறிவைப் போதிக்கும் அறிஞர்களை, நாத்திகர்கள் என்று சொல்லும் மடமையைக் காட்டிலும் மிகுதியான மடமையைக் கற்பிக்க முற்படாதீர்கள்.

## 53 அறிஞர்களைப் புறங்கூறும் அறிவீனர்கள்

பெருந் திருட்டுக் குற்றம் செய்தவன் போலீஸ் அதிகாரிகளைக் கண்டவுடன் தான் தப்பித்துக் கொள்வதற்காகப் பயந்த நெஞ்சத்துடனும், இருண்ட பார்வையுடனும் திணரலான, தடுமாற்றமான வார்த்தைகளைச் சொல்லிப் புலம்பிப் பிதற்றுவதுபோல், மக்களை ஏமாற்றி ஊதியம் பெறுபவர்களும், பட்டம் பதவி பெறுபவர்களும், கற்பனை வாதிகளும், விஞ்ஞான அறிவில்லாதவர்களும், அறிவு இன்னதெனத் தெரியாது, அறிஞர் என்று பட்டம் பெற்றவர்களும் சொல்லொன்று செயலொன்றா யிருப்பவர்களும், ஆராய்ச்சி இல்லாப் படிப்பாளிகளும், உலக அனுபவமில்லாதவர்களும், பெருந்தன்மை, அன்பு, ஒழுக்கமில்லாதவர்களும், தான் எழுதிய நூல்களுக்குத் தனக்கே பொருள் தெரியாதவர்களும் இவர்களைப்போன்ற மடாதிபதிகள், மதக்குருக்கள் சந்நியாசிகள் ஆகிய பண்பாடற்றவர்களெல்லாம் இயற்கை, பரிணமம், விஞ்ஞானம், அனுபவ அறிவு ஆகிய இவற்

றிற்குப் பொருத்தமாகவும் உணவு உடை சீராகவும், நன்னடை ஒழுக்கங்களுடனும், மக்களுக்கு நல்லவையே பேசி, நன்மையே செய்யும் அறிஞர்களையும், மகான்களையும், அவர்களுடைய நூல்களையும் பார்த்தவுடனே, எங்கே நமது குற்றங்கள் வெளிப்பட்டுவிடுமோ என்று அஞ்சி, அவர்களை நாஸ்திகரென்றும், மதத்துரோகி என்றும் துவேஷ மனப்பான்மையால் ஆவேசமாகிப் பேசித் தூற்றித் திரிவார்கள். இத்தகைய பிரசாரத்தால் நல்ல காரியங்களில் மக்களுக்கு அன்பு குறைவதோடு, வீணே காலம் கழித்தற்கும் சிரமத்திற்கும் ஆளாவார்கள். ஆதலால் இத்தகையவர்களிடம் மக்கள் சிக்காமலிருப்பதே சிறந்த அறிவாகும்.

# 54 என் வாழ்க்கை வரலாறு

2-5-1903 இரவு 8½-மணியளவில் யான் எளிமையிற் பிறந்தேன். எவருக்கும் பணியச் சம்மதியேன், தொழில் உழைப்பில்லாதிருக்கவேமாட்டேன். உடலின்பம் விரும்பேன், என்னில் தோன்றும் எண்ணங்களை உணர்ந்து என்னை நான் உணர்த்துவேன். யாருக்கும் அஞ்சேன், எதையும் செய்து முடிக்கலாமென்று துணிவேன். எந்த (இரகசியத்தையும்) மறை பொருளையும் கண்டுபிடித்தே தீருவேன் என்று உறுதி கொள்வேன்.

உடல் நாணி, உரோமம் சிலிர்த்து, கண் கலங்கி, கண்ணீர் வடித்தேன். பிறர் காணாது தனித்திருந்து செபித்தேன், தொழுதேன், யோகங்கள் செய்தேன், உண்மையை நாடிப் புலம்பினேன். 19-8-1930 இரவு 2¼-மணி அளவில் கனவில் உபதேசம் பெற்றேன், 1932-ல் திருமணம் செய்து கொண்டேன். இரண்டு குழந்தைகள் பிறந்தன. ஆண் குழந்தை இறந்தது. பெண் குழந்தை இருக்கிறது.

உடல் உஷ்ணமாயிருந்தால் கடவுளை விரைவில் காணலாம் என்று கருதி, ஒரு வருஷம் எட்டுமாதம் குளிக்காமலிருந்தும் 2½ வருஷம்வரை ஓலுச்செய்தும் (அதாவது இருமினால், தும்மினால், துப்பினால், மலங்கழித்தால், சிறு நீர்

பெய்தால், தூங்கினால் உடனுக்குடன் கால் கை முகம் சுத்தி செய்தலும்) 90 நாள் வரை நிலக்கடலையை பச்சையாகவும், 90 நாள்வரை வறுத்தும், 90 நாள்வரை அவித்தும் சாப்பிட்டு வந்ததாலும், 40 நாள்வரை ஒரு சிறு சிரட்டை அளவு சாதம் சாப்பிட்டும், இருக்கிற அறையை விட்டு வெளியேறுவதில்லை என்று சபதமிட்டும் இருந்து வந்ததில், சிறு நீர் இரத்தமாகவும், உடல் மிக மெலிந்தும், சோகை பிடித்தும், சிறு தலைவலியும் ஏற்பட்டு உடல் நலங்குன்றியது. இதைப்படிப்பவர்கள் நாமும் இப்படிச் செய்வோம் என்று கருதுவதும், அல்லது செய்வதும் தவறாகும். இவ்வாறு செய்து ஏற்பட்ட அனுபவத்தால் வந்த தெளிவாகிய அறிவு எதுவோ அதைப் பின்பற்றி நடந்தால் அறிவில் தெளிவடைவீர்கள்.

மிக உயரமான மலையின் உச்சியில் இருப்பதுபோல் அறிவில் பெருந்தன்மையாயிருங்கள். மிக உயரமான மலை உச்சிக்கு ஏறும்போது ஆங்குள்ள குறுகிய வழிகளில் மிகக் கவனமாக நடப்பதுபோல் உலகத்தோடு ஒட்டி வாழ்வதில் நடந்து கொள்ளுங்கள்.

1938 வருஷம் ஜெனவரி மாதம் 7-ஆம் தேதிவரை பிறரறியாவண்ணம் சரியை, கிரியை, யோகம் எல்லாம் தவறாமல் செய்து வந்தேன்.

நல்லறிவையே வேண்டினேன். 7-1-1938 இரவு 11-40 மணியளவில் குருவால் உணர்வடைந்தேன். அறிவில் தெளிந்தேன். 7-7-1938ல் குரு ஸ்தானம் பெற்றது.

வறுமையால் வாழும்போது யாருக்கும், எதற்கும் பயப்பட்டதில்லை. மரியாதையும், மிகுந்த அன்பும் மக்கள் காட்டத் தொடங்கியபின் எதற்கும் பயப்பட்டே நடக்க வேண்டியதாயிற்று.

கருப்பு வர்ணம் பூசிய ஒரு இருட்டறையில் ஒவ்வொரு நாளும் இரண்டு அல்லது மூன்று மணிநேரம் 7 மாதகாலம் வரை தனித்திருந்து தவம் செய்துவந்ததில், அவ்வறையில்

காற்றில்லாமையாலும் கடுமையான அப்பியாச முறைகளாலும் உயிர்தப்பியது பெரிதாயிற்று.

என்னை நான் அறிந்து, எல்லா விளக்கத்தையும் கண்ட பயன் கற்பனைகளையெல்லாம் ஒழித்து இயற்கைக்கு வேறுபாடு இல்லாமல் உலகத்தோருக்குத் தன்னை அறிவித்து, உணர்வு உண்டாக்கி, உலகெங்கும் அமைதியும், ஒற்றுமையும், மகிழ்வும் உண்டாக "**உலக சமாதான ஆலயம்**" அமைத்தேன்.

மதுரையில் ஆலயம் ஏற்படுத்திப் பதிவு செய்த நாள் 18-5-1942.

பெரியோர் என்றாரே! அவர் என் செய்கின்றார்? என் சொல்கின்றார்? ஏது செய்து முடிக்கின்றார்? என்று பார்க்க வந்த பலருள், பார்த்து, அடைந்து பழகப்பழக, பெரியோரினும் பெரியோராய், என்னிலையடைவோர், தன்னிலையுடையோர் ஆவர்.

**ஊக்கமும் நீதியும் ஒன்றுபட்ட ஒற்றுமையில்**
**ஊழல் ஒழிந்து உண்மை ஒளிவிடும்.**

சிறுமையில் வேட்கை கொள்ளாமலும், அதைப் பொருட்படுத்தாமலும் இருங்கள். என்றும் நன்னெறி ஒளிரும், தீ நெறி ஒழியும்.

உலகீர்! உண்மை உலகில் பரவ வேண்டியதற்குத் தலைமையாய் உள்ள பெரியோனுக்கும், அவரோடிருக்கும் முதன்மையானவர்களுக்கும் தாம் சரியாக நடந்து கொள்ளுகிறோமா, என்று உணர்தலுடன் பெருந்தன்மையும் இருக்க வேண்டியது இன்றியமையாதது. பின் மக்கள் துணை, இடத்துணை, அனுபவ ஆராய்ச்சி, அறிவு, பொருளாதாரம் ஆகியவை இருந்தாலும் அரசியல் ஆதரவு இருந்தால்தான் மேன்மை எல்லோரிடமும் நிரவி நிலைக்கும்.

**நடந்ததெல்லாம் நன்மைக்கே** என்று சொல்லெழுத்துக்கு உதவியாளரைப்போலாகி விடாமல் **நடந்ததில் எல்**

லாம் நன்மையை உணர்ந்துகொண்டு எழுதிய என்னோடு சேர்ந்துகொள்ளுங்கள்.

## என் விசுவாச அனுபவங்களில் சில

1942 அக்டோபர் 21-ம் நாள் இரவு சுமார் 1-15 மணி அளவில் (செவ்வாய் மறைவு, புதன் பிறப்பு) "நயனத்தால் வியாதியைப் போக்கலாம்" என்பது சூக்குமத்தின் வேண்டுகோள்.

1942 நவம்பர் 3-ம் நாள் பகல் 2-15 மணி அளவில், பிரம்ம மண்டல உச்சியில் லயித்தபோது, கிடைத்த பதவியை எல்லாச் சிஷ்யர்களுக்கும் அளித்தது. உணர்வின் சுகத்தால் உண்டானது.

1945 ஜூலை 28-ம் நாள் இரவு 3-40 மணியளவில், நாலு வல்லரசர்களுடன் நமது அரசரும் வந்து வணங்கிச் செல்லும்போது, அதில் ஒரு அரசர் வணங்க திருப்பதை நம் அரசர் கண்டித்ததும், அவ்வரசரும் வணங்க, அதன்பின் எல்லா அரசர்களையும், ஆசீர்வதித்துச் சந்தோஷப்படுத்தி அனுப்பியது.

1945 நவம்பர் 8-ம் நாள் இரவு 12-30-12-40 மணிக்கு இடையில் இருந்த உணர்வின் ஆனந்தம் அதற்குமுன்னால் இருந்ததில்லை. உடம்பு மிகச் சுகமாயிருந்தது. தித்திப்பு அமிர்தம் அதிகம் வந்தது. எல்லா மெய்யுணர்வாளர்களுக்கும் இந்தமாதிரியான அனுபவம் கிடைக்கும். இப்படிப்பட்ட நிலை ஏற்படும்போது இறங்குபடியைச் சிறிது கவனிக்க வேண்டும். இது என் தவநிலையின் அனுபவமாகும்.

எல்லா மெய்யுணர்வாளர்களும் அன்று இரவு சுமார் 3-30 மணியளவில் சூக்கும வடிவில் பிரம்ம மண்டலத்திற்கு வந்து என்னைப் புகழ்ந்து பேசினார்கள். அதில் ஒரு மெய்யுணர்வாளர் எல்லாரையும் மகிழ்வுறச் செய்தனுப்பினர். இவையாவும் மக்கள், அரசியல், சிஷ்யர் பெயரிலுள்ள என் விசுவாசப் பிரதிபலிப்பே யாகும்.

# 55 குரு

எத்துறையிலும் சீர்திருத்த ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும். என்ற நன்னாட்டமே, குருவை நாடும் நாட்டமாகும்.

உடலுக்குத் துணை பூமி
குடும்பத்திற்குத் துணை பொறுமை
அறிவிற்குத் துணை அன்பும், பயிற்சியும்
அருளுயிர்க்குத் துணை குரு.
பற்பல துறைகளில் பயிற்சி உடையோரே குரு.

## 55/1 குருவை அடையாத முடிவுகள்

அறிவாராய்ச்சி இல்லாத ஞானம்; மீசையில்லாத அரசன்; நகில் இல்லாப் பெண்; வெளிச்சமில்லா வீடு; ஊற்றில்லாக் கிணறு; தயாளமில்லா நெஞ்சம்; கருணையும் கருத்துமில்லாக் கண்; விசாரணை இல்லாத் தீர்ப்பு; விலையில்லாப் பொருள்; ஆராய்ச்சியில்லா அறிவு; வீரமில்லாச் சொல்; உருக்கமில்லாத தவம்; கேள்வி தெரியாத விடை; ஆடையில்லா உடலழகு; விழிப்பில்லாத் தூக்கம்; **காலமறியா வன்மை;** நம்பிக்கையில்லா அன்பு; விளைவில்லா நிலம்; உலகத்தையறியாத் துறவு; செலவில்லாப் பொருள்; அன்பில்லா வாழ்வு; அருளில்லா முகம்; குறையுணரா அறிவு; பயிற்சியில்லாச் சொல்; கரு இல்லாத் தவம்; ருசி இல்லாப் பெரும் பழம்; பருவத்தில் அனுபவிக்காத இன்பம்; காலத்தில் உதவாத கருணை; உற்சாகத்திற்கு உடன் இல்லா மனைவி; கருத்துக்கு இசையாத நம்பிக்கை; காலத்தில் விளையாத வேளாண்மை; உயிரில்லா உடம்பு ஆகிய இவை போன்றே, குருவை அடையாத முடிவு.

குரு சொல்லும் கருத்துக்கள், தன்னறிவிற்குப் பொருத்தமானதாகவும் தானறிந்த அறிவிற்கு எட்டாத உயர்வானவைகளாகவும் இருந்தால், அவை ஆராய்ந்து அறியக் கூடியனவாகவே இருக்கவேண்டும்.

தன்னை அறிய முற்படும் ஞான வேட்கையுடையோர், தாம் அறிந்த அறிவைக் கெடுத்துக் கொள்ளப் போவதே, தற்கால அறிவு வேட்கை (ஞானத் தாகம்) என்பார்கள்.

அறிவறியா மக்களை, மேல் அறிவிற்குக் கொண்டு வருவதே முற்கால அறிவாளிகளான, துறவுபூண்ட குருக்களின் வேலையாக இருந்து வந்தது. தற்போது, அறிந்த அறிவையும், பாழ்படுத்தி மடமையைப் போதிக்க முற்படுபவரே துறவு பூண்ட குருக்களாகப் பெருகினார்கள்.

உலகில் ஒருவருக்கொருவர், ஒவ்வொரு நிமிடமும் குருவாகவே இருந்துகொண்டு வருகிறார்கள். இடமும், கருத்தும் மாறும்போது, அறிவிக்கக் கூடியவரும் மாறுவார்கள். தன்னைத்தான் அறிந்தவரே, உலகங்களுக்கெல்லாம் குருவாகும் நிலையுருவர்.

மற்ற எந்த ஆசிரியரையும் அமைதிப்படுத்தக் கூடிய வன்மை இவருக்கு உண்டு. ஆசிரிய நிலையடைந்தவர்களும் பலர் இருக்கிறார்கள். அந்த நிலைக்கு ஒத்த நிலையுடையவர்களும் பலர் இருக்கிறார்கள்; இருப்பார்கள். அந்த நிலையுடைய குருக்கள் ஒன்றை இணை வைத்தோ ஒரு பயனைக் கருதியோ ஏதும் செய்யமாட்டார்கள். உலக மக்களின் அறிவின் பெருக்கத்தையே, அவர்கள் கைம்மாறாகக் கருதுவார்கள்.

உடலுக்கு வேண்டியது உணவும் நல்வாழ்க்கையும். அதை அறிந்து அனுபவிப்பதே, மனிதனின் ஏக்கத்தின் முடிவு. ஆகையால் மாணவர்கள் குருவின்மேல் மிகுதியான அன்பு நிறைந்த நம்பிக்கையோடிருக்க வேண்டும். குரு மின்சாரம் நிறைந்த சக்தி நிலையம் போன்றும், மாணவன் அச்சக்தியை இழுக்கும் மின்சார விளக்கின் கண்ணாடிக் குமிழின் (Bulb) திறமையைப் போன்றுமாகும். மின்சார விளக்கின் கண்ணாடிக் குமிழ் (Bulb) தன் குறிப்பிட்ட சக்திக்கு ஏற்றதையே, நிலையத்திலிருந்து இழுத்து ஒளிதர இயலும். அதுபோல், மாணவனே தன்னறிவின் பெருக்கத்திற்கும், நம்பிக்கை வன்மைக்கும் பொருத்தம் உடையவனாயிருந்து அறிவின் பெருக்கமும் இருந்தால் குருவின் நிலையே மாணவர்களுடைய நிலையுமாகும். குருவினிடம் அண்டுவதற்கு முன், தான் பெருங் குற்றவாளியாய் இருந்தபோதிலும்

குருவை அண்டின பொழுதிலிருந்து, அவன் குற்றமற்ற உத்தம நிலையுடையவனே. உலகத்தில் பெருங்குற்ற முடையவர்கள் யாரென்றால், குருவையடுத்த பின்னும், குற்றம் செய்தவனே. இவன், அரசியலார், இனத்தார் ஆகிய இவர்களையெல்லாம், புறக்கணித்தவனே. ஒரு குரு பயிற்சி வாயிலாகப் பாடுபட்டதின் பலனும், பல மக்களின் ஏக்கத்தின் பலனுமே ஒரு குரு வடிவமாகத் தோன்றுகிறது. குருவின் நிலை அறிவின் பெருக்கத்திற்கும் வழி வழி உரிமைக்கும் யாதொரு தொடர்புமில்லை. அந்தக் குருவினுடைய ஆழ்ந்த பயிற்சியே, ஏனைய ஆசிரியர் காட்டிய வழியைக் காட்டிலும் மேம்பட்டது. அவரே அவரை அறிந்தவராவர். அதனால் தான் ஒருகால் **"அறிவின் உறுதியில் அறிவின் விரைவு, அறிவின் விரைவில் அறிவின் அனுபவம், என்றேன்.** மற்றொரு கால் **அறிவை அறிவுக் குறைவால் வெல்லாமல், அறிவுக் குறைவை அறிவால் வெல்க"** என்றும் சொல்லியிருக்கின்றேன். கையில் துப்பாக்கி உள்ள போர் வீரனுக்குப் பொறுமையும் அமைதியும் மிகுதி என்றால் ஞான முடிவடைந்த குருக்களின் பொறுமை இணையற்றதாகும். என் இருதய மலர்களாகிய மெய்யுணர்வு பெற்ற பெண்மணிகளே! உங்களைத் தாயின்தன்மை, குழந்தையின்தன்மை ஆகிய இருவகையிலும் ஒப்புக்கொண்டேன். அதுபோன்றே தகப்பன் தன்மையிலும், தன் அன்பின் குழந்தையின் தன்மையிலும் நீங்கள் என்னை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். இம்முறையறியாத உலக குரு-சீடர்கள் பெண்களால் பெரிய உண்மை கெட்டது, என்று சொல்லுவார்கள். கடலானது, கால்வாய் நீரையும், ஆற்றின் நீரையும் ஏற்று, இடம் தந்து தன்னோடு சேர்த்துக் கொள்ளும். பின்பு, வந்த ஆற்று நீரின் வண்டலையும், அதன் குணத்தையும் மாற்றித் தெளியவைத்து, நாளடைவில் கடலோடு கடலாய்ச் சேர்த்துக்கொள்ளுகிறது. ஆற்றின் நீரோ கடலடைந்த மகிழ்ச்சியால் திரும்புவதில்லை. **மனிதன் என்ற பேர் கொண்டவர்கள்** குருவையடைந்தும் மனத் தடுமாற்றமேற்பட்டுத் திரும்புவதுண்டு. மனிதனுயுள்ளவன் திரும்புவதேயில்லை. ஆறும் கடலும் பின்னர் ஒன்றே.

ஞானாசிரியனும், மாணவனும் ஒன்றே. சிங்கக்குட்டிக்கு உடனே தைரியம் உண்டாகிப் பாயும் தன்மை ஏற்படாதிருந்தாலும், எல்லாப் பிராணிகளும் அதன் பாய்ச்சலுக்குப் பயந்தே இருக்கும். வயதும் காலமும் வாய்க்கும்போதுதான் அது பாய்கின்றது. அரசனின் குழந்தை தோன்றிய அன்றைக்கே செங்கோலும் அதன் ஆட்சியும் அவனிடத்திலேயுண்டு. ஆனால், வயதும் அறிவும் வந்த பின்தான் செங்கோலாட்சி புரிகின்றான். உயர்ஞான சபையின் தீட்சை ஈசனுகவுள்ள மனிதனை ஈசன் நிலையில் நிறுத்துகிறது. அறிவின் பெருக்கத்தால் அவனை அறிந்து கொள்ளும் தன்மையை தவத்தின் பெருக்கத்தால், வயதால் தெரிந்து கொள்வார்கள். அதனை நீங்களும் அறிவீர்கள். உலக சமாதான ஆலயத்தின் உணர்வு என்னும் குண்டலினி தீட்சை பெற்றும் வேறு ஒன்று ஏதோ இருக்கிறதென்று நினைப்போர், கடலில் உள்ள மீன்கள் வாய்க்கால் நீரை நம்பி எதிர் நோக்கிச்சென்று மாளுவது போலாகும்.

**"கல் முள் எச்சலுக்கெல்லாம் செருப்பால் காலைப் பாதுகாப்பது போல் பகைமை, வேறுபாடு, நயவஞ்சகக் கள்ளருக்கெல்லாம் அன்பின் சிறப்பால் அறிவின் கலையைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்."**

என் இருதய மலர்களே! அறிவறிந்த உங்களின் ஆசான் என்றென்றைக்கும் சோர்வில்லாதவன். அறிவின் ஆற்றலை எப்போதும் அறிந்தவன். விரைவிலும் விரைவுடையவனே! நிற்க, உற்சாகமான சொற்களை நிரப்புவோமாக! நிரப்புவீர்களாக! எங்கும் இதுவே நிரம்பும்; எழுச்சி பெற்று மகிழ்ச்சியாக உலகம் வாழும்.

கருவைத் துளைத்தேன்; கண்ணை விழித்தேன்; அறிவை உரைத்தேன்; கண்ணிடை நடு புகுந்தேன்; உள்ளுச்சியில் அமர்ந்தேன்; என் உருவில் நான் நிலைத்திருக்கிறேன்.

என் சொற்களெல்லாம் உலகத்தில் உள்ள எல்லாக் கேள்விகளுக்கும் சமாதானம் செய்து விடை அளித்த பின்பே வெளிவந்துள்ளன. ஆகையால் உன் கேள்வி

எதுவானாலும் பதில் இதிலேயே இருக்கிறது. வேகமாய், அறிவாயிருந்து பொறுமையாய்ப் பார். கடலினுள் உண்டாகும் குமிழியின் விரைவு மணிக்குச் சுமார் 2 மைல். அதைக் கடலில் உள்ள மீன் முதலியன தடுத்தாலும் குமிழி அழிந்து போவதில்லை. இரண்டு மூன்று குமிழிகளாக வெளியே வந்து அலையோடு கலந்து அமைதி நிலவுகிறது. ஞானிகளின் உள்ளிருந்து உண்டாகும் சொல்லோ, நிமிடத்திற்கு இருபதினாயிரம் மைல் வேகத்தில் விரைவாகத் தோன்றி, உலகத்தில் ஏற்படக்கூடிய பல கோடிக்கணக்கான கேள்விகளும், அதற்குரிய விடைகளும் அதிலேயே அடங்கி வெளியே வந்து அமைதி செய்கிறது.

ஜோதி (ஒளி) யிடம் அண்டி ஜோதியாகிய பின்னும் சொன்ன சொல்லறியாச் சோம்பேறி மக்கள், சூக்குமம் அறிவதெப்போது? சொன்ன சொல்லறிந்து சுழிமுனையில் நின்றீர்களானால் தன்னிலையாகிய பேரின்ப அறிவில் தானாகப் பிரகாசிப்பீர்கள்.

ஞானாசிரியர்க்குச் சிற்சில இன்னல்களும், அவர்களின் உண்மைக்கு இடையூறும் செய்து வருகின்ற அறிவீனர்கள் உலகில் பலர் உண்டு. அவர்களின் அறிவுக்கு வேண்டிய சமாதானம் சொல்லியும், கேளா மூர்க்கர்களால் ஞானாசிரியர்களுக்குக் கோபம் மூளுவதுண்டு. அதை அவர்களே அடக்கி அமைதி அடைந்தாலும் இக்கோபத்தாலுண்டாகிய அணுக்கள் அந்த அறிவீனர்களுக்கு ஏதாவது உடலில் அடிகள், பலத்த காயங்கள், நோய்கள் ஆகிய இவற்றை உண்டாக்குகின்றன. அதுவும் அவர்களுக்கு நன்மை செய்து உணரவே வைக்கின்றன. அப்படிக் கோபம் மீறியதும் அதற்கோர் முடிவு வைத்து ஏதாவது ஓர் சொல் சொல்லிவிட்டால், அச்சொல்லின் சூட்டால் அவனும், அவன் வழி வழி வருவோர்களும் குறையோடு பிறக்கின்றார்கள்.

விரைவாக ஓடும் பெரும் ஜீவ நதிகளை எவ்வளவோ செடி, கொடி, மரம், கல், பாறை, மேடு, பள்ளத்தாக்குகள் எதிர்த்துப் போராடித் தடுத்தும் வென்றதில்லை. நதிகளின் நீர் ஓட்டம் மோதி உருட்டித் தள்ளிவிடாமலும் அதையும்

ஏற்று மீண்டும் ஓடி எல்லோருக்கும் நன்மையளித்துக் கடலில் போய்ச் சேர்ந்து கொள்கிறது. அதுபோன்றே அறிஞர்களாகிய ஞானாசிரியர்கள், சீடர்களின் செயல்களும் இருக்கும். நதிகளை முறையில்லாதபடி தடுக்கும் அணைக்கட்டுகளால் அணைக்கட்டுக்கு முன் உள்ள பொருள் உயிருக்கும், பின்னுள்ள உயிர்ப்பொருளுக்கும் அழிவு ஏற்படுவதுபோல், முறையில்லாமல் உண்மையைத் தடுக்கும் மடையர்களால் அவர்களின் முன்பின் வழிவருவோர்க்கு இழிவும் அபாயமும் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். அரசன் சினம், குறித்த ஒருவனையே தாக்கும். ஆனால் ஞானாசிரியர்களின் சொல்லின் சூடோ அவனையும், அவன் வழி வருவோரையும் பற்றித் தாக்குகின்றது.

அத்தகைய சொல்லின் சூட்டால் ஏற்படும் தீங்குகளை மருந்தாலும் வேறு எந்த வகைகளாலும் நீக்க முடியாது. உலகத்தில் விரைவாக ஓடும் இயந்திரத்தின்முன் அறிவீனத்தால் ஒருவன் நின்றானானால், ஓட்டக்கூடிய மதியுடையவன் இயந்திரத்தை நிறுத்தி அவனை விலக்குவான். மீறி அடிக்கடி அதைத் தடைப்பண்ணுவானானால் அவன் அவ்வூர்தியில் வீழ்ந்து மடிவான். ஓட்டிய மதியுடையவனுக்கு நல்ல பெயர்தான் கிடைக்கும். காய்த்துப் பழுத்த மரத்தில், கம்பு, கல்லால் எறிந்து பழம் பறிப்பதில், கம்போ, கல்லோ கிளையில் பட்டு எதிர்த்துக் கண்ணைக் கெடுத்துவிட்டால் கிளையின் மேல் உள்ள குறை என்ன? அதைப்போன்று வேகமாய் ஓடிக்கொண்டிருக்கும் வாகனத்தை ஒருவனுக்காக வேண்டி திடீரென்று நிறுத்தி, வண்டியிலுள்ள ஆயிரமாயிரம் மக்களை துன்பத்துக்குள்ளாக்குவதைவிட அவனை மடித்து இயந்திரத்தை ஓட்டுவதே மேலானது. ஆகையால் ஞானாசிரியர்களிடமும் பலர் ஒத்துக்கொண்ட பெரியோர்களிடமும், ஒவ்வொரு ஏக்கங்களில் ஏங்கிக்கொண்டிருப்போரான வீர பக்தியுடையோர்களிடமும் கேட்கும் கேள்வி காலத்தை ஓட்டியும், அறிவான கேள்வியாகவும் இருக்கவேண்டும்.

அதனாலேயே “நல்லாரைக் கண்டும் காணாநாயைப் போல் குலைக்கும் மக்கள் நன்றியுள்ள நாயினும் கேடு

கெட்ட நாய் மக்கள்தானே? நாய்க்குள்ள நன்றியும் இப் பொல்லா மனிதனுக்கில்லையோ? நல்லோருக்கு எப்போதும் நல்லது நல்லதே, நல்லோர் நன்றியை இவன் அறிவதெப் போது?" என்றேன்.

சிறு அழுக்கையும் மிக்க சிறப்பையும் கண்ணால் பார்த்து அறிவு மகிழ்ந்தாலும் முகத்தின் அழகையும் கண் ணின் அழுக்கையும் கண்ணாடி மூலம் காண்பதுபோல், தன் ஒளியையும் அறிவின் நிறை குறையையும் ஆசிரியராலே அறியவேண்டும்.

தாகம் மிகுந்தால் தண்ணீருக்குப் பாகுபாடில்லை. மோகம் மிகுந்தால் சாதி வேறுபாடில்லை. அன்பும் அறிவும் மிகுந்தால் மத வேறுபாட்டிற்கிடமில்லை. மிக்க தவமிருந்தால் பிறவிப் பிணிக்குரிய குணமெல்லாம் பட்டெரியும்

உலக நல்லடியார்களே! நீங்கள் இனியவை உண்டு மகிழ்ச்சியாய் இருக்கும்போது நல்லடியார்களை நினைப்ப துடன் ஒரு பொல்லாத குணமுடையவனையும், அவன் நல்லறிவுக்காளாக வேண்டுமென்றும் நினைத்துக்கொள்ளுங் கள். அப்போது அவன் நல்லறிவுக்காளாகிறான்.

எமது மெய்யுணர்வாளர்களே! நீங்கள் பெரும் ஒற்று மைக் குரியவர்கள். அவ்வொற்றுமையைப் போல் என்றென் றைக்கும் ஒரே மனமுடையவராய் இருக்கவேண்டும். இருப் பீர்கள். நீங்கள் அடைந்திருக்கும் உண்மை மெய்யுணர்வை என் உடம்பு ஒன்றிலிருந்தே தெரிந்துகொண்டீர்கள். இனி யும் பலர் தெரிந்துகொள்ளப்போகிறார்கள். இவ்வுடம்போ பல கோடி அணுக்களின் ஒற்றுமை என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். பல கோடி ஆத்மாக்களுக்குரியது ஒரு உண் மையும் அதன் தத்துவமும். என் இருதய மலர்களே! உங்க ளுடைய ஒற்றுமையே என்னுடைய உடம்பிலுள்ள உண் மையைப் பாதுகாப்பதாகும். உங்களுடைய மகிழ்ச்சியே என்னுடைய மகிழ்ச்சியாகும். உங்களுடைய அறிவின் நிறைவே என்னுடைய அறிவின் நிறைவாகும். உங்கள் செழிப்பும் அருள் முக மகிழ்ச்சியும் என்றென்றைக்கும் மாறாதிருக்கும். இது உறுதி.

அறிவுடையவர்களே! அறிவின் முற்போக்கு முதன்மையாக வேண்டும். அறிவின் அபிவிருத்திக்குப் பல தடைகள் ஏற்படுவது இயல்பு: மதமும் நண்பர்களும் இனத்தார்களும் உறவினர்களும் இன்னும் பல தடைகளும் இருந்து வரலாம். ஆனால் எல்லோரையும் வெறுத்து அறிவின் வளர்ச்சியை அடைந்துவிட முடியாது. விரைவாய் ஓடும் நதியில் விழுந்த ஒருவன் நதியை எதிர்த்து நீந்தாமல் நதியின் போக்கிலேயே நீந்தினால் கரை சேரலாம். அதைப்போன்றே தன் இனத்தோடு ஒட்டி வாழ்ந்து அவர்களுக்கு வேண்டிய அமைதியோடு அறிவை வளர்த்துக் கொள்வது மேலானது.

மெய்யுணர்வாளர்களே! உங்கள் ஒற்றுமைக்கு என் இருதயம் மிக மகிழ்ச்சி அடைகிறது. இவ்வொற்றுமையில் அன்பும், அறிவும், அருளும் கருவின் ஞான தவமும் கூடி ஒன்றுபட்டுள்ளது. இவ்வுலகில் இது ஒன்றே உயர்வு. உணர்வு ஓங்குக. ஒற்றுமை ஓங்குக! ஓங்குக அமைதியும் மகிழ்ச்சியும்.

## 55/2 குருக்களுக்குக் கிடைக்கும் மரியாதையும், குருக்களால் உள்ள நன்மையும், தீமையும்.

பொதுமக்களின் துன்பத்தையும் ஐயத்தையும் நீக்கக் கூடிய அறிவாளிகள், குருக்கள் ஊரூராகச் சென்று அறிவுரை கூறும்போது அந்தந்த ஊர் மக்கள் அறிவுரையில் ஏற்படும் நலத்தைப் பொறுத்து, அறிவாளிகளையும், ஞானாசிரியர்களையும், பெரும் வெளிச்சத்தைத் தரும் தீபத்தைப் பாதுகாப்பதுபோல், பாதுகாப்பது முறையாகும். பாதுகாக்கும் தன்மைக் கேற்பத் தீபம் எரிவது உறுதி.

மக்களில் நன்றி தெரிந்த அறிவாளிகள் குருக்கள் முதலாயினோர் பொது மக்களுக்கு நன்மை உண்டாக நல் வழியைப் போதிப்பதோடு தாமும் நீதியில் மிக உயர்வாய் இருந்து நற்பெயருடன் முடிவடைவதுண்டு.

அறியாமையுடைய அறிவாளிகளும், குருக்களும் பொதுமக்கள் தமக்குக் கொடுக்கும் மரியாதையை முன்னிட்

டுத் தாமே பெரியோன் என்பதும், தாமே அவதார புருடன் என்பதும், தமக்கு வேண்டிய நலங்களுக்குத் தக்க அறிவுரைகளைச் சொல்லி மக்களைக் கெடுப்பதும், தாமும் கெட்டு மடிவதுமன்றிச் செயலில் பொதுநலமும் கெடுகின்றது. பணமில்லாதபோது குணவாளுக இருந்தும் பணம் மிகுதியாகக் கிடைத்தபோது செய்யாத அட்டூழியங்களும் செய்கிருர்கள். கிடைத்த மரியாதை மக்களால் என்று தெரிந்துகொள்ளாது அம்மரியாதையைக் காரணமாகக் கொண்டு மக்களுக்கே தீங்கு செய்வதோடல்லாமல் தாங்களும் கெட்டுப் போகிருர்கள். இதுபோன்றே அரசர்கள், மந்திரிகள் ஆகியோருடைய புகழுமாகும்.

# 56 குரு சீடர் அன்பின் தொடர்பு

ஒரு சிறு இரு கண் புள்ளிகளால் நாலுகோடி அடி சமவெளி தெரிவது போன்று, ஞானசிரியரின் சொல்லுக்கிணங்கினீர்களானல் பலவகைப்பட்ட சமய நூல்களெல்லாம் தன்னறிவில் தெரிந்துகொள்ளலாம்.

**தாய் தந்தை தான் என் செய்வர் ?**
**தங்கை தனயர் தான் என் செய்வர் ?**
**தாரந்தான் என் செய்வள் ? தான் பெற்றெடுத்த**
**குழந்தைகள் தான் என் செய்வர் தன்னேடு**
**ஒட்டியிருக்கும் சமய நண்பர்கள் தாம் என் செய்வர் ?**

மிக மேலாகச் செய்திட்ட போதிலும், அவர்கள் கால அளவில் நின்று மறைவார்கள். ஆனல் ஞானசிரிய மாணவரின் அன்பறிவு ஊழி ஊழி காலங்கள் தோறும் அழியாது நிலைத்து நிற்கும்.

என் இருதய மலர்களே ! சிறிது பெரிது என்ற வேறுபாடற்ற நானகிய நினைப்பின் நிறைவில் உங்கள் மேல் உள்ள என் அன்பான எண்ணத்தின் அலை எவர்பேரிலும் இல்லாதிருக்க முடியாது. அனுபவத்திற்கு வேண்டிய அறிவுக்காகவும் கால வேறுபாடுகளில் அகப்படாது காப்பாற்றவும்

ஞானசிரியரின் கட்டளை அப்போதைக்கப்போது மிக இன்றி யமையாதது. அதன் பேரில் உங்கள் அன்பும் இன்றியமை யாததே.

ஞானசிரியரின்மேல் ஆர்வமுடைய உண்மையான மாணவர்களுக்கு உடம்பில் வலி ஏற்பட்டால் அவர்கள் எவ் வளவு தூரத்தில் இருந்தாலும், அந்த வலி ஞானசிரியனுக்கு அதே இடத்தில் வலியாயிருக்கும். பெரும் துன்பத்தில் இருப் பார்களானால் ஞானசிரியன் இருதயம் சூடாக இருக்கும். ஞானசிரியனிடம் அடிக்கடி மாணவர்கள் வந்து போவதா லும், அவர்களின் கடிதங்களாலும், நெடுங்காலப் பயிற்சியி னாலும் இந்த இரகசியம் கண்டு பிடிக்கப்பட்டது.

ஒருவர்மேல் அதிக அன்பிருந்தால் அவரின் பார்வை, சொல், நடை, தோற்றம், அன்பு பாராட்டுவோரின் உடம்பில் சில நிமிடம் தோன்றி மறையும். எந்த வலியும், துன்பமும் குருவைப்பாதிக்காது. அன்பான நண்பன் தாய் தந்தை இவர் களிடையேயும் இத்தொடர்பு இருக்கும்.

**கடலில் நீந்தி தத்தளித்துக் கொண்டிருப்போர்க்கு அவர் களின் இடுப்பில் கட்டி இருக்கும் வலுவான என் அன்பும் நன்றியுமுள்ள கயிறு என்றைக்கும் அறுந்துவிடாது. அழுந்தி மூர்ச்சையாகும் தருணத்தில் இழுத்து கொண்டுவரப்படும்.**

ஊற்றினின்றும் பொங்கிவரும் தண்ணீரை உலகங்க ளெல்லாம் இறைத்தாலும் அது எவ்வாறு சிறிதும் வற்றாது தெளிந்து, நிறைந்து நிற்கின்றதோ அதேபோன்று அனுபவ அறிவுடையோரின் தீட்சையும், சொல்லும் விளங்கி நிற்கும்.

முன்னவர்களைவிடப் பின்னவர்கள் நல்லவர்கள்.

பின்னவர்களைவிட முன்னவர்கள் நல்லவர்கள்.

இரு பகுதியினரும் நல்லவர்களே.

என்னை விட்டுத் தொலைவில் இருப்பவர்களே! என்னை அறிந்தால் என்னில் நெருங்கியே இருக்கின்றீர்கள்.

என்னிடம் நெருங்கியிருந்தும், என்னை அறியாதவர் களே! என்னை விட்டு, வெகு தொலைவில் விலகியே இருக்

கின்றீர்கள். மின்சாரம் (Current) மிக்க சக்தியுடையது. தொடர்பின் கயிறு இருந்தால் பிரகாசிக்கும்; அது போன்றதே குரு, சீடர் அன்பின் நம்பிக்கைத் தொடர்பு.

பெரும் விடுதியின் சோலையில் இருக்கும் கள்ளிப் பாலைப் பசும்பால் என்று நம்பி, நஞ்சை உண்ணுதீர்கள்.

முள் மரங்களினிடையே வளர்ந்த பலா மரத்தின் இனிய பழத்தை முள்ளுக்கு அஞ்சி, உண்ணுது விட்டிடாதீர்கள்.

புகழை நம்பி அறிவை அடிமைப் படுத்தாதீர்கள்.
துன்பத்திற்கு அஞ்சி உண்மையை விட்டிடாதீர்கள்.

ஆயிரம் ஆண்டு வணக்கத்தை விட அரை நிமிட
ஆராய்ச்சியே மேல்;
உன்னில் தோன்றும் நினைவுகளை நீயே உணர்ந்தால்
ஆயிரம் குருக்களின் பலனை நீ அடைவாய்.

## 57 இலம்பிகா யோகம்

**கண் இரண்டிலும் கடந்த கண் ஞானக்கண்,**
**அக்கண் முக்கண்; முக்கண்ணின் முகப்பும்**
**முனை எழுத்தால் முக்கி, அருகு நுனிவழியாய்**
**கரு ஏறி வந்திருந்து, அதைத் திறந்ததின் பின்**
**அதனுட் புகுந்துபோய் இருப்பது எதுவோ,**
**அதுவே முக்திக்கு வித்தாகியதும், முன்னமே**
**முதலாயுள்ளதுமான மௌன மெய்யுணர்வாம்.**

தன்னுடைய நாவின் அடிப்பாகத்திலுள்ள தசையை மெது மெதுவாக அறுத்து, அதனுலுண்டான புண்களை ஆற்றி, நாவை இழுத்து, நீட்டி மூக்குக்கு மேல் நாக்கு ஒரு அங்குலம் நீண்ட போது தன் நாவை மடக்கி, அண்ணத்தின்மேல் துவாரத்தில் நுழைத்துவிட்டால், உடனே உடல் மறதி ஏற்பட்டு, மூச்சு நின்று வெகுகாலம் ஒன்றும் தெரி

யாதிருக்கலாம். அவர்களுக்குப் பசியுமிராது, உடலும் அழியாது. நெடுங்காலத்திற்கு முன், நா (லம்பிகா) பயற்சியில் இருந்தவர்களை இன்று எழுப்பினுல் கண நேரத்திற்கு முன் நடந்தது போன்று அக்காலங்களிலுள்ள மொழியையும் அவர்களுக்கு உடல் மறதி ஏற்படுவதற்கு முன் நடந்த நிகழ்ச்சிகளையும் சொல்லுவார்கள். அவர்களுக்குக் கணப் பொழுதில் உலகம் மாறி அமைந்திருப்பதாகத் தோன்றும். இப்பயிற்சியில் இருக்கும்போது உடம்பை உயிர்ப்பிராணிகளாலும், மண்ணுலும் அழித்துவிட முடியாது. நீராலும், நெருப்பாலும், பூகம்பத்தாலும் பேரிடர் ஏற்படலாம். முன் காலத்தில் சாதாரணக் குடும்பங்களிலும் இப்பயிற்சி இருந்து வந்திருக்கிறது. இவர்களுக்கு மயிரும், நகமும், வளரும். கண்ணிலுள்ள பாப்பா (கருமணி) தூய்மையாக இருக்கும். இப்பயிற்சியிலுள்ளவர்களைப் பார்த்த மக்கள், இவர்களைச் சித்தர்களாகக் கருதி கற்களால் சமாதி கட்டி, ஆடம்பரம் செய்வதுமுண்டு. இப்பயிற்சியிலிருந்தவர்களை எழுப்பி அவர்கள்காலத்திலுள்ள செய்திகளைத் தெரிந்து நூலும் எழுதியிருக்கிறுர்கள்.

**இவர்களை எழுப்பும் முறை :**—தகுந்த வைத்தியர் ஒருவரின் உதவியோடு மெதுவாக வாயைத் திறந்து, நாவை இழுத்து எடுத்துவிட்டுக், கை கால் ஒரே முடக்காய் முடங்கியிருப்பதை, மெது மெதுவாகத்தட்டி உணர்ச்சி உண்டாகும்படி செய்துவிட்டால், மூச்சுப் போக்கு வரத்து உண்டாகிவிடும்.

தேரை, கருநாகம், நல்லபாம்பு, இவைகள் உணவு கிடைக்காதபோது, இந்தப் பயிற்சியைச் செய்துகொள்ளும். ஆனுல் இவைகளுக்குக் கண், காது, உடல் உணர்ச்சியிருக்கும். உணவு கிடைக்கும்போது, நாவை எடுத்துப் புசிக்கும். மனிதனுக்கு இவ்வுணர்ச்சி இல்லை. தேரைக்கு வயது இதனுல்தான் மிகுதி. அறிவைத் தேடி, அறிவைப் பாழ்படுத்துவதை விட, அறிவைத்தேடி அறிவை வளர்ச்சி செய்துகொள்வது மேலாகும்.

**எடுத்துக்காட்டு** :—உலகத்தைச் சுற்றிப் பார்க்க வரும் ஒருவன், காதையும் கண்ணையும் கெடுத்துக்கொண்டு சுற்றிப் பார்ப்பதுபோல், உள் நாக்குப் பயிற்சியில் இருப்பவரின் அறிவு. அவர்களைப்போன்று சில மூச்சுப் பயிற்சியாளர்களுக்கும், கண் பயிற்சியாளர்களுக்கும், உடல் திமிரேறி மரத்துப்போய் ஏறக்குறைய மூன்று நாள் வரையிலும் தன் மறதியிலிருக்கலாம். இவர்களை ஏதாவதொரு இடத்தில் ஊசியைக்கொண்டு குத்தினல் எழுப்பிவிடலாம்.

இவர்கள் சிறிது தவறினல் மரணம் அடைவார்கள். உள் நாக்குப் பயிற்சியிலிருப்பவர்களுக்கு, மூச்சுப் போக்குவரத்து இல்லாதிருப்பதால், சுவாசத்தை அடக்கிக்கொண்டிருப்பதாகக் கருதி மூச்சுப் பயிற்சிசெய்ய முற்பட்டார்கள்.

## 58 மூச்சுப் பயிற்சி (வாசியோகம்)

மூச்சை இழுத்து விடுதல், கரு, கருத்து, அன்பு, நம்பிக்கை ஆகிய இவை பின் முதுகு பிடரி மார்க்கமாய் இரு கண் இடை நடு சுழிமுனையினுள் புகுந்து கபால அம்பல உச்சியில் எத்தொழிலிலும் எப்போதும் அமர்ந்து இருப்பதில் ஏற்படும் தொடுகை உணர்ச்சியின் இன்பமே தன்னிலையாகிய பேரின்பம்.

பலவகை ஆசனங்கள் செய்து, மூச்சை உந்தி, வயிறு, நெஞ்சு, இவைகளில் மிகநேரம் பிடித்துப் பழகுவதும், இருதயத்திலிருந்து மூச்சை அடக்கிப் பாவனையாக, நெற்றி வழியாய்ப் பல செபங்களோடு விடுவதும் உண்டு. இவர்கள் உடல் மெலிந்திருக்கும். எவ்வளவுக்கெவ்வளவு மூச்சை அடக்கிப் பழகுகின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு பின்பு பலக் குறைவடைகின்றார்கள். தன்னைத்தான் அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஏக்கத்தால் தன் பலக் குறைவு தனக்குத் தெரிவதில்லை.

**எடுத்துக்காட்டு**:-காதல் கொண்ட காதலியை அடையும் வரை இடையிலுள்ள துன்பந் தோன்றுதது போன்றுகும்.

யோக நூல்கள் எழுதியோர்கள் உடல் பருத்தும் அந்த நூல்களைப் பார்த்து யோகம் செய்வோர்கள் உடல் மெலிந்தும் இருப்பார்கள். நூல் எழுதியவர்கள் அதனால் வரும் வருமானத்தை வைத்து மிக நல் உணவு உண்பதாலும் அவர்கள் யோகப் பயிற்சி செய்யாததாலும் அவர்களின் உடல் பருத்திருக்கின்றது.

நல்லதைப் பார்த்து அறிவால் மகிழுங்கள். கெட்டதைப் பார்த்து மனத்தைப் பயப்படுத்துங்கள். உங்களின் பயிற்சி அறிவோடு ஐயங்களை முடிப்பதற்கும் அறிவின் பெருந்தன்மைக்கும் இவைகள் கூர்மையான துணைக் கருவிகளாகும். பிறருடைய உதவியை நாடுதலோ, எளிமையான சொற்கள் பேசுதலோ வேண்டாம். நீங்கள் நல்ல சத்தான உணவுகள் உண்பதினாலும், உயர்ந்த தூய்மையான உடைகள் உடுத்துவதினாலும், நல்ல தன்மையும், ஒழுக்கமும் உண்டாவதுடன் பொருட் செலவும் மிகச் சுருக்கமாகும்.

நாவில் ஒரு சிறு நோவிருந்தபோது நல்ல ருசி அறியாததுபோல், பிறர்மேல் வேறுபாடு சிறிதளவு இருந்தாலும் பேரறிவுக்காளாக மாட்டார்கள்.

**நம்பிக்கை :**—தன் அறிவுக்கு விளங்காது எதையும் நம்புவோர்கள் எதிலும் ஏமாறுவார்கள்.

**விசுவாசம் :**—எக்கருத்துக்களையும் அறிவுக்கு விளக்கமாக அறிந்துகொள்வதில் ஏற்படும் நன்மை, நன்றியை, என்றென்றைக்கும் மறவாமலும், எந்த இடத்திலும் தாம் ஏமாறாமலும், பிறர் ஏமாற்றத்தில் அகப்படாமலும் இருக்க விசுவாசம் காப்பாற்றும்.

## 59 யோகமும் நோன்பும்

பேருண்டி உண்போர்களுக்கும், உடல் உழைப்பு இல்லாதவர்களுக்கும் பட்டினியும், யோகமும் வேண்டியதே. நாள் ஒன்றுக்கு ஏறக்குறைய 4 மைல் நடையுள்ளவர்களுக்

கும் 8 மைல் சைக்கிளில் பிரயாணம் செய்வோர்களுக்கும், நெசவு மற்ற உடல் உழைப்பு உள்ளோர்களுக்கும் யோகமும் நோன்பும் வேண்டியதே இல்லை.

## 60 ஐந்து நிறம் (பஞ்ச வர்ணம்)

இதில் பல வர்ணங்கள் அடங்கியிருக்கின்றன. கண்ணை மூடி நெற்றிக்குள் பார்த்தால் குருதியின் தூய்மைக்குத் தக்க வாறும், அறிவின் பெருக்கத்திற்குத் தக்கவாறும், நொடிக்கு நொடி மாறிமாறிப் பல வெளிச்சமுள்ள நிறங்களாகத் தெரியும். . இருதயத்தைச் சுற்றியும் மூளைக்கு மேலும் இந்த வெளிச்சம் உண்டு.

## 61 எச்சில்

உடம்பிலுள்ள குருதியே எச்சிலாக மாறி விந்துவா கிறது. தன் எச்சிலை கைவிரல்களாலும், மற்ற எவ்வகையா லும் வெளியேற்றக்கூடாது. அவ்வாறு செய்வதால் நுரையீர லும் உடலும் பலக்குறைவடைகின்றன. உடம்பிலுள்ள சத்தில் எச்சில் மிக மிக இன்றியமையாதது.

## 62 காய கல்பம்

உடலை நெடுநாள் வைத்திருக்க வேண்டுமென்ற ஆசைக் காகத் தன் சிறுநீர், மலம், விந்து, பெண்களுடைய நாதம் (சுரோணிதம்) காயகற்ப உப்புக்கள், இவைகளை உட் கொள்ளுகிறார்கள். இவ்வறிவுலகில் நாய்கூட அவைகளை உண்ணாது. அதனால் உடல் நிலைப்பதுமில்லை. அது அறவே கூடாது.

## 63 நூறு வயதுவரை இருக்கும் உபாயம்

மூச்சை அடக்காமலும், வாய் வழியாக மூச்சை இழுக் காமலும், மகிழ்வு, துக்கம், வியப்பு, தூக்கம், போகம்,

விழிப்பு ஆகிய இவை அளவுக்கு மீறுமலும், மயக்கந்தரும் பொருள்களை உபயோகிக்காமலும் இருந்தால் வயது நூறு இருக்கலாம்.

# 64 உடையின்மை, பற்றின்மை (நிருவாணம்)

உலகில் எல்லோரும் ஆடை உடுத்தி இருந்தபோதிலும், ஆடையுள் நிருவாணமாக இருந்துகொண்டே இருக்கிறோம். அறிவின் அழகும், பணிவும்தான் ஆடை உடுத்தியது. அறிவின் அமைதியே, அறிவின் பற்றின்மையே நிர்வாண மென்றறியாதார் உடையில்லாது நிர்வாணமாய்த் திரிவர். ஆசை கொள்வது மனத்தாலே; மனத்தை அறிவது அறிவாலே.

# 65 மௌனம்

பேசத்தெரிந்த ஒருவர், பேசாமலிருந்து "மௌனம்" என்று மற்றவர்மூலம் தெரியப்படுத்துவதும், அதைப் பார்த்து கேட்டவர்கள், அவரை யோகி என்றும், ஞானி என்றும் அவரிடம் தனி சக்தி இருப்பதாகப் பேசுவதும், நம்பு வதும், மௌனமாக இருப்பதும் இருசாராரின் திறமைக் குறைவாகிய அறியாமையே யாகும். இப்படிப்பட்டவர்களைப் பார்ப்பதை விட, உண்மையில் ஊமையாயுள்ள ஒருவரைப் பார்த்தால் அவரது திறமையாவது அறியலாம்.

## 65/1 தியானம்

உடலின் களைப்பையும், சந்தேகங்களையும் நீக்கிக் கொள்ளவும், நல்லொழுக்கமாக வாழும் வகையினைத் தெரிந்து கொள்ளவும் தனித்திருந்து சிந்தனை செய்வதே தியான மாகும்.

## 65/2 சமாதி

தவத்தால் தலையின் உச்சியிலும் உடம்பின் ஏனைய பகு திகளிலும் ஏற்படும் ஒருவகை இன்ப சுகத்தை, உடலாலும், புலன்களாலும், ஒரு நிலைப்பட்ட மன அறிவாலும் அறிவதே சமாதி எனப்படும்.

## 66 நுட்பம்

தொழிலாளர், வணிகர், அரசியலார், முக்காலவுணர்வினர், ஆராய்ச்சியாளர் ஆகிய இந்த ஐவர் நுட்பங்களுக்கும் மேலானது ஞான நுட்பம்.

## 67 அறுவகைத் தீட்சைகள்

**கடலினுள் தத்தளிக்கும் மக்களே! மேல் நோக்கி அறிவால் நீந்துங்கள்! நொடிப்பொழுதில் வெளியைக்கண்டு; கரையடைந்து; பேரின்பங்கொண்டு நம் சுயம்பரவெளியும் அடைவீர்.**

1 அன்பால் அழைத்தல், 2 குண்டலினி சக்தியை எழுப்புதல், 3 தொட்டு உபதேசித்தல், 4 கண்ணால் பதியவைத்தல் 5 சொல் வாசகத்தால் தெளியவைத்தல், 6 நினைவால் அடிக்கடி நினைத்தல் ஆகிய இவையே அறுவகைத் தீட்சை எனப் படும். இவ்வாறுங் கூடியதே உயர்ஞான தீட்சையாகும். சில குருக்கள் இவ்வாறில் ஏதாவது ஒன்றை மட்டும் வைத்துக்கொண்டு உபதேசம் செய்வார்கள். அதனால் ஒருவித அறிவுதான் வளரும்.

## 68 உட்காரும் விரிப்பு

வெள்ளைத்துணி தொழிலாளிக்கும், கம்பளி வியாபாரிக்கும், மான்தோல் அறிவின் அமைதிக்கும், யோகத்திற்கும், வேங்கைத்தோல் அறிவின் விரைவிற்கும், சிறப்பிற்கும் நல்லது. இடங் காலத்திற்கேற்ப எவ்விரிப்பிலும் இருக்கலாம், அது உத்தம நிலை.

## 69 அருமருந்து (அமிர்தம்)

அமிர்தம் மூளையின் மத்தியில் இரண்டு அவுன்ஸ் முதல் மூன்று அவுன்ஸ் வரை மிகத் தெளிவாயும், மிகத் தித்திப்பாயும் இருக்கிறது. இந்த அமிர்தம் ஆறுதாரத்திரைக்கு ஆதரவாய் உள்ளது. வாயைமூடி மௌனமாய் நாவை அண்ணத்தில் ஒட்டி பயிற்சிப்பவர்களுக்குப் பாளையில் கள் வடி

வதுபோல் வடிந்து மிகச்சிறு துளியளவு வாயில் பட்டவுடன் எச்சிலும் சேர்ந்து மிகத் தித்திப்பாய் மாறிவிடுகிறது. இவர்களுக்கு உடம்பு மெலியும். இரத்தம் கெட்டு நகங் கள் கறுக்கும். மூளை பலங் குறைந்து, புத்தி தன்னிலையின் மையோடு ஆயுளும் குறையும். அறிவில்லாச் சில குருக்கள், தங்கள் எச்சிலையும், பருகிய எச்சில் பாலையும், மாணவ னுக்கு அமிர்த தீட்சை என்று கொடுப்பதுண்டு.

## 70 பத்துவகை ஓசைகள் (தசநாதம்)

காரணம் அறியாது கடல், காடு, மலை
  கடந்தால் தானென்ன ?
கருவறியாமல் காலமெல்லாம் தவம்
  செய்தால் தானென்ன ?
பலனறியாமல் பல பாடு
  பட்டால் தானென்ன ?
தன் ஏக்கம் தான் என்றறியாது
  தரையில் வீழ்ந்து மாள்வார்தாமே.

ஓசையின்றி உள்ள இடத்தில் தனித்திருந்து, ஒரே ஞாபகமாய்ப் பிடரியைக் கவனித்தால் உடம்பினுள் நிரம்பிய ஓசையும், குருதி ஓட்டத்தின் ஓசையும், மூச்சின் ஓசையும், இருதயத்தின் ஓசையும், வெளியிலுள்ள ஓசையும், ஆகிய இவ்வைந்து ஓசைகளும் சேர்ந்து, தன் நினைவின் விரைவால் நொடிக்கு நொடி மாறி, பத்துவகை ஓசைகள் எல்லோருக் கும் தெளிவாய்க் கேட்கும். இது மயில் தன் சிறகை விரித் துத் தானே ஆடி மகிழும் இன்பத்தைப் போன்றது.

## 71 அழகு (தேஜஸ்)

சுழிமுனையும் கடந்து நின்று சுழலும் இன்பத்தில் இன் புறும் இன்ப அநுபவத்தால் சொல்லுகின்றேன்.

தொழிலின் உழைப்பின் நலத்தாலும், பணப்பெருக்காலும், பக்தியின் திடத்தாலும், குற்றமற்ற நடத்தையாலும், கற்பின் தீரத்தாலும், தன் குற்றம் உணர்வதாலும் நெற்றியில் அழகு ஒளி (தேஜஸ்) தோன்றும்.

மெய்யுணர்வாளர்களுக்குப் பொன்னிறம் போன்று எண்ணெய்ப் பசையோடு இந்த அழகு தோன்றும். அழகின் நிறம் பழுத்த எலுமிச்சம்பழம் போன்றும், கலப்பற்ற தங்க நிறம் போன்றும், மூன்றும் பிறைச் சந்திரன் நிறம் போன்றும், மின்னலைப் போன்றும் இருக்கும். இதற்காகத்தான் நெற்றி சிரித்து, கன்னம் பூரித்து, மனம் மகிழ்ந்து, அறிவு பூரித்து உங்களில் நீங்களாக ஒடுங்கி இருக்கின்றீர்களா? என்று கேட்பது உண்டு.

# 72 இருதயப் பயிற்சி

தன் ஞாபகத்தை இருதயத்தில் நிறுத்திப் பார்ப்பதில் நெடுங்காலப் பயிற்சிக்குப்பின் குருதியின் வெப்பு மேம்பட்டு ஒருவித வெளிச்சம் மனக்கண்ணிற்குத் தோன்றும். இப்படிச் செய்வதால் இருதயம் பலக்குறைவடையும், எனவே செய்யக்கூடாது. இருதயமும் மூளையும் உள்ள திடத்திற்குத் தக்கவாறே அறிவின் பெருக்கம் உண்டாகும். மகிழ்ச்சி, நல்ல சிந்தனை இருப்பது இருதயத்திற்கு நல்லது.

# 73 சோம வட்டம்

**ஒரு கண் திறந்தது இரு கண் சிரித்தது**
**இக்கண் குளிர்ந்தது இருதயக் கண்**
**மகிழ்ந்தது அறிவுக்கண் அறிந்தது**
**மூலக் கண்ணின் மூலப் பொருளால்.**

நெற்றிக்கு எதிரே 8 கெஜம் முதல் ¼ பர்லாங்கு தூரம் வரை பெரிதும் இன்புறத்தக்க, சிறு இழுவை உணர்ச்சியோடு உதய சூரியனைப்போல் வட்டம் தெரியும். இதில் மேல் கீழாய் மயிர்போன்று நெளிவான கோடுகள் இருக்கும். சில

ருக்குத் தாம் எண்ணிய உருவங்கள் இவ்விடத்திற்குள் தெரியும். நெற்றியை அசைத்தால் அதுவும் அசையும். பசி மிகும் போதும், ரீங்கார ஓசைகளை உணர்ச்சியோடு இழுக்கும் போதும் இதை எளிதில் காணலாம்.

கண் இமை மயிர்களில் நீர்த்துளிகள் இருந்தால் கண்ணுக்கு எதிரில் ஒரு அங்குலம், அரை அங்குலத்தில் சிறு சிறு வட்டங்கள் பலவித நிறங்களோடு தெரியும். இவை சோம வட்டமல்ல.

பல எண்ணங்களைச் சிந்திக்காது, ஒரே எண்ணமாகப் பார்க்கும் திறமையின் ஏக்கமே அதுவாகும்.

## 74 நிழற் காட்சி (சாயை தரிசனம்)

சூரியன், சந்திரன், தன்னுடைய நிழல், இவைகளில் ஏதேனுமொன்றைக் கூர்ந்து பார்த்துவிட்டு, உடனே மேல் நோக்கிப் பார்த்தால், தன்னுடைய உடல் வெள்ளை நிழலாக மேலே தெரியும்.

இரவு 11-மணிக்கு நிலா வெளிச்சத்தில் நான் சிறுநீர் கழித்து எழுந்திருக்கும்போது பனை மரத்தைப்போல் ஒரு பேரொளி பத்து கெஜ உயரத்தில் இரண்டு நிமிடம் வரையில் தெரிந்தது. தெரிந்ததற்குக் காரணத்தை அறிந்தால் தான் நான் அமைதி அடைவேன். அங்கே ஆராய்ந்தபோது, சிறிது தூரத்தில், என் வலது புறத்தில் பனை மரம் ஒன்று இருந்தது. கண் இமையாது இருந்து சிறுநீர் கழித்ததால் மரத்தின் நிழல் கண்ணிற்கு எதிராகத் தோன்றி ஒளி உருவாய்த் தெரிந்தது என்று அறிந்தேன்.

நான் ஆராயாது பேரொளியைக் கண்டேன் என்று சொன்னால் அது பொய்யாகாது. அதனால் ஏற்படும் தீங்குகள்:-நான் சிக்கிக்கொண்டதுமல்லாமல், ஆராய்ச்சியில்லாமல் சொல்லி இருக்கும் நூல்களுக்கும் இது சான்றாகுவதுமன்றி இதைப் போன்ற மற்ற மக்களைப் பயனில்லாத வீண் துன்பத்திற்கு உட்படுத்துவதுமாகும்.

ஆராய்ச்சியில்லாச் சொல்லும், பொய்யாக விளம்பரப் படுத்தும் நூல்களும் பல ஆயிர மக்களின் அறிவின் முற் போக்கைத் தடுக்கின்றன.

அறிவின் நிறைவு குறைவுக்குத் தக்கவாறு குணம், மனம், புத்தி, ஆராய்ச்சி, அறிவு, பேரறிவு என்று பெயர்.

குணத்திற்குக் குருதி நரம்புகளும், மனத்திற்கு இரு தயமும், புத்திக்கு நெஞ்சும், ஆராய்ச்சிக்கு நெற்றியும், அறி வுக்கு மூளையும் காரணமாகும். பேரறிவு பெரும் அனுபவத் தால் உண்டாகிறது.

## 75 கடவுளின் காட்சியும் கனவின் காட்சியும்

ஆறறிவில் நான்கு அறிவு விழித்திருந்து இரண்டு அறிவு தூங்கினால் கடவுளின் காட்சி காண்பதும், ஆறறிவில் நான்கு அறிவு தூங்கி இரண்டு அறிவு விழித்திருந்தால் கனவின் காட்சி காண்பதுமாகும்.

**எண்ணத்தால் கனவு. பயத்தால் பேய், விசுவாசத் தால் (தேவர்கள்) கடவுள்; இவை யாவும் நீங்கினால் அறிவு தெளியும். தெளிந்த அறிவே ஞானம்.**

### கடவுள்

தொடுகை உணர்ச்சி, சுவை, நறுமணம், கேள்வி, பார்வை, நுண்ணுணர்வு ஆகிய இவை ஆறில் நான்கு விழித் திருந்து பார்வையும், நுண்ணுணர்வும் அறிவின் சிறு மறதி யால் மயங்கிய போதையில், தன் மனதிலுள்ள பிரதிபலிப் பால் உள்ள காரியங்களும், உருவங்களும், வார்த்தைகளும் தன் எதிரே காணப்படுவதோடு வெளியிலுள்ள எண்ண த்தின் பிரதிபலிப்பால் பல உருவங்களும் தன்முன் காணப் படும். கண்டது உண்மையே; அறிவின் மறதியால் காணப் படுவதேயல்லாது அது உண்மையாகாது; இதில் மிக அறி வாளிகளும் சிக்கினார்கள். பயத்தோடு பார்த்தால் பேயும், பக்தியோடு பார்த்தால் கடவுளும், அறிவோடு பார்த்தால் உண்மையும் காணப்படலாம்.

## கனவு

தொடுகை உணர்ச்சி, சுவை, நறுமணம், கேள்வி இவை நான்கும் தூங்கி, கண் உள் பார்வையும் நுண்ணறிவும், விழித்திருந்தால் கனவு காண்கிறார்கள். இவை ஆறும், நன்றாகத் தூங்கினால் அதுவே நல்ல தூக்கம். அநேக காரணங்களினால் கனவு ஏற்படுகிறது. உங்கள் நினைவில் உள்ளதே கனவாகவும், அதில் இதற்கு முன்பு நடந்த அனுபவங்களும் நடக்கப்போகும் அனுபவங்களும் நீங்கள் பார்த்து விரும்பிய பல காரியங்களும், உருவங்களும் அல்லது நீங்கள் பார்க்காமலே, பிறர் உங்களைப் பார்த்து எது விரும்பினார்களோ அதுவும் தெரிவதுண்டு.

பல இடங்களில் நடந்த நடக்கப்போகும் நிகழ்ச்சிகள் மக்களிடை இருக்கும் எண்ணத்தால் நீங்கள் தூங்கினவுடன் அவர்களின் எண்ண அணுக்களின் அலைகள் உங்களை மோதுவதனால் பல விவரங்கள் தெரிவதுண்டு. நல்ல அன்பு, நம்பிக்கை இவற்றோடு படுத்திருந்தால் ஒரு இரவில் தோன்றும் கனவு மறு இரவிற்குள் நடந்தே தீரும்.

ஏறக்குறைய நாலரை ஆண்டுகள் வரையிலும் இவ்வனுபவங்கள் என்னிடமிருந்தன. கனவில் கண்ட நற்காட்சிகளே, பின் அனுபவ வாயிலாக ஏற்பட்டு அநேக காரியங்கள் நடை பெற்றிருக்கின்றன. அதில் பெரிதும் தலையானது கனவில் பெற்ற உபதேசமே. 8½ ஆண்டிற்குப் பின் 1400 மைலுக்கு அப்பால் அணுவளவேனும் மாறுதல் இல்லாமல் நடந்தேறியது. அதுவரையிலும் அக்கனவின் நினைவு என்னை உருக்கப்படுத்தியும் திடப்படுத்தியும் வந்தது. இதுபோல் பெரும் பெரும் அனுபவத்தை விரிவாய்ச் சொல்லாமலே நிறுத்துகிறேன். ஆனால், காலபேதத்தாலும் கனவு காண்பதுண்டு. வலது பக்கம் திரும்பிப் படுத்திருக்கும் பொழுது அறிவிற்குப் பொருத்தமில்லாத பயங்கரமான சில கனவுகள் காணலாம். இத்துடன் சிறு நீரும் வயிற்றில் மிகுதியாக இருந்தால் மிகக்கொடிய நிகழ்ச்சிகள் கனவில் தோன்றும். அதே நிகழ்ச்சிகள், இடது பக்கம் சாய்ந்து படுத்திருந்தால்,

பல நல்ல காரியங்களைப்பற்றிப் பேசுவதாகவும் ஈடு படுத்து வதாகவும் தெரியவரும். இதிலும் சிறுநீர் வெப்பமாய் இருந் தால் அதற்குச் சிறிது அசைவு ஏற்படும். மல்லாந்து படுத் திருக்கும்பொழுது பெரும்பான்மையும் கனவுகள் தோன்று வதில்லை. அப்படித் தோன்றினாலும் அது நினைவிற்கும் புலப் படாது. ஆனால் இதே நிலையில் தூங்கும் நல்லடியார்களுக்கு உலகிற்கு உதவக்கூடிய அநேக நல்ல நிகழ்ச்சிகள் தோன்று வதுண்டு. நடைபாதைகளிலும் குளிர்ந்த காற்றுள்ள இடங் களிலும் சிறுநீர் கழிக்காதும், கால்களைக் கழுவாது படுத்தா லும், புளிப்பான ஆகாரத்தை உண்பதாலும், இரத்த ஓட்டத் தடைகளாலும் கனவுகள் தோன்றும்.

தூக்கத்தில் ஏற்படும் கனவுகளில் அணுவளவிலும் மாறுதபடி உடலோடு நடப்பதைக்காட்டிலும் பல மடங்கு உண்மையாய் நடந்துகொள்ளவேண்டும். தன் நம்பிக்கையின் பற்றுதலைத் தான் தெரிந்து கொள்ளும் வழி தன் கனவில் செம்மையாக நடந்து கொள்ளுதலே யாகும். கனவில் செம்மையில்லாதிருந்தால் விழித்த அறிவு அன்போடு கூடிய நம்பிக்கையை விட்டுவிட வேண்டுமென்பதல்ல. விழித்த அறிவு மோனச் சிந்தனையில் உருக்கமாய் உருகி உணர்ந்து அந்த நம்பிக்கைக் குறைவை நிறைவு படுத்திக் கொள்ள வேண்டும். இது உண்மை யாளரின் செய்கை. மேலும் சொல்லுகின்றேன், அன்பு நம்பிக்கை கொள்ளுங்கள்! எல்லாவற்றிலும் வெற்றியே அடைவீர்கள். ஒருவன் படுக் கப் போகுமுன் கனவே காண்பதில்லை என்ற திடமனத் தோடு ஒரு மாதம் படுத்துப் பழகுவானானால், பொல்லாக் கனவுகள் தோன்றவே தோன்றாது.

## 75/1 அன்பு நம்பிக்கையோடு கூடிய என் உறுதியின் அனுபவங்கள்.

உறுதியைத் திடப்படுத்திக் காண்பிக்கவேண்டியதற் காக 90 நாள் நிட்டை என்றும், அறையை விட்டுப் போவ தில்லை என்றும் எல்லாப் பிள்ளைகளிடமும் சொல்லிவிட் டேன். மணி 2-க்கு ஒரு பிடி அளவு உணவு உட்கொண்டு

இருந்து காண்பிப்பதற்காக இருந்தேன். ஒரு மாதம் இருபத்து நான்காம் நாள் இரவு சுமார் 11-30 மணிக்கு உட்கார்ந்து கடுமையான நிட்டையில் ஒன்றி இருந்தேன். அப்போது சிறு மறதி ஏற்பட்டபோது ஒரு மாணவர் நான் நிட்டையிலிருக்கும் அறைக்கு வந்து படியேறி, நான் நிட்டையில் இருப்பதால் துன்பம் இருக்கக்கூடாது என்று நினைத்து பின் வாங்கி படி இறங்கிப் போவது தெரிந்தது. அவர்மேல் உள்ள அன்பினால் அவர் பெயர் சொல்லிக் கொண்டே வாசற்படியண்டை போய்விட்டேன். வலது காலை எடுத்து வெளியே வைத்து எட்டிப்பார்த்து அவரைக் கூப்பிடலாம் என்ற விரைவில் நாம் முன்னமே சொல்லியிருந்தபடி வெளியே கால் வைப்பது இல்லை என்றது நினைவிற்கு வரவே திடுக்கிட்டு எடுத்த காலை விரைவாகப் பின் வாங்கியதில் கால் வலியாகிவிட்டது. விழித்துப்பார்க்க உட்கார்ந்த இடத்திலேயே தானிருந்தேன்; மேற்சொன்ன மாணவரையும் காணோம், வலியோ மூன்று நாள் வரை வலது தொடையின் மேல் பாகத்தில் மிகுதியாய் இருந்தது.

இக்கருத்தில் உணர்ந்ததாவது (1) அவர்பேரில் உள்ள அன்பு (2) நான் சொன்னபடி நடந்து கொண்டது (3) இது சூக்குமத்தில் உண்மையாயிருப்பதால் வலியிருந்தது.

நான் உபதேசம்பெற்ற நாலாவது மாதத்தில் இடது காலில் பெரிய உள் சிலந்தி புறப்பட்டு இருந்தது. அதன் வலியோ பொறுக்க முடியாமலும் கால் ஊன்ற முடியாமலும் இருந்த நிலையில், குரு ஆணைப்படி ஒரு மருந்தும் போடவில்லை. மேலும் நமக்கு ஒன்றும் வராதே! இது ஏன் வந்தது என்ற எண்ணமும், எங்கே குருவினிடம் போய் இதைச் சொன்னால், உறுதியை விட்டுவிட்டானே என்ற ஐயம் அவருக்கும் ஏற்பட்டுவிடுமோ என்ற எண்ணமும் இருந்தது. அவர் அவ்வூரிலுமில்லை, போய்க் காண நாளும் இல்லை. இருக்கும் தொழில் முறையில் நம் பேச்சுக்கே பயம் அதிகம். பதினான்கு மைல் தூரத்திற்கு அப்பாலிருக்கும் ஒரு வியாபாரி நமக்கு ரூ. 7043 பாக்கி தரவேண்டியவன், கடையை மூடி

விட்டான் என்ற செய்தி வந்தது. என்னைக் கண்டாலே அவன் ரூபாய் கொடுப்பானென்றும், நமது கடைக்கு அது வரும் என்றும் திட்டமாகக் கடைக்காரர் அனைவருக்கும் தெரியும். மணியோ இரவு 8-30. அப்போது போக்கு வரத்து வண்டிகள் 6-மணிக்குமேல் இல்லை. கடையின் பொறுப்பில் பற்றுதலும் அதிகம். அவர்கள் என்னைக்கண்டு எப்படிச் சொல்வது என்ற எண்ணத்தில் இருந்தார்கள். அப்போது நல்ல சைக்கிளைத் தூய்மை செய்யச் சொல்லி ஒரு காலால் மிதித்துப் போய்ச் சேர்ந்தேன். என்னைப் பார்த்து அவன் மருண்டு மலைக்க, நான் வந்தது உங்கள் பொருட்டே அல்ல, பயப்படவேண்டாம் என்று உறுதிசொல்லிக் காலில் உள்ள வலியைக் காண்பித்தேன். உடனே ஒரு அறையில் நான் படுத்துக்கொள்ளப் படுக்கை தந்தார்கள். வலியின் துன்பமோ மிகுதியாயிருந்தது. அதை உபதேச இடத்தில் வாங்கிக் கொண்டு படுத்துறங்கிவிட்டேன். குருவும் டாக்டரும் வந்தார்கள். எனக்கோ அவர் இதைப் பார்த்துவிட்டாரே என்ற பயத்தோடு குருபிரானே எனக்கு இது ஒரு வலிஇல்லை என்று சொல்லி அவரை அமைதிப்படுத்தினேன். அவர் சிரித்துக்கொண்டே, பயமில்லை என்று சொல்லி அந்த மருத்துவரைக்கொண்டு அறுவை சிகிச்சை செய்தார். கெட்ட குருதியெல்லாம் எடுத்துவிட்டுக் கத்தியைப் பிளேட்டில் வைக்கும் சத்தமும் நன்றாய்க் கேட்டது. வலி இப்போது எப்படி இருக்கிறது என்று கேட்டார்கள். ஒன்றுமில்லையே என்றேன். உடனே இதுவெல்லாம் பெரிதல்ல, மகனே! என்று இருவரும் போகமுற்பட, மகிழ்வுடன் அனுப்ப எழுந்து நடக்கமுற்பட்டேன். விழித்துக்கொண்டேன். அப்போது நான் என் காலை நோக்காமல் இவர் எங்கே என்ற ஆலோசனைக்குப்பின் காலைக் கவனித்தேன். வலியே இல்லை. கையால் அழுத்திப்பார்த்தேன், அப்போதும் வலி இல்லை. நடந்து பார்த்தேன் வலி இல்லை. நான் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையுண்டோ? உடல் முழுமையும் மகிழ்ச்சியால் பூரித்தது, கருணையின் கண்ணீர் தாரைதாரையாய் வந்தது. அப்போது மணியைக் கவனித்தேன் 12-43 இரவு. அன்று பகலில் மற்

றைக் கடைக்காரர்களுக்கு எல்லாம் ரூபாய்க்கு 2 அணு வீதமும் நமக்கு 4 அணு வீதமும் செக் (Cheque) கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு மறுநாள் நலமாய் வந்து சேர்ந்தேன். கடைக்காரர்கள் யாவரும் வலி இல்லாமல் இயற்கையாய் நடப்பதைப் பார்த்து வியப்பாய்க் கேட்டார்கள். இப்போது ஒன்று மில்லை என்று சொல்லி விட்டேன். சொன்னுல் அவர்களுக்கு எப்படிப் புரியும்? இதுபோல் பல அனுபவங்கள் எனக்கு நடந்தேறி இருக்கின்றன.

# 76 மின்சார சக்தி

மின்சார சக்தி உடல் முழுமையும் பரவி இருக்கிறது. உதடு, பல், உள் அண்ணம், ஆண் பெண் மர்மஸ்தானம் இவைகளிலும், நெற்றி, மூளை ஆகியவைகளிலும் நுட்ப நாடிகள் இருப்பதால் இவற்றில் மிகுதியான மின்சார சக்தி உண்டு. இது எண்ணத்திற்குத் தக்கவாறும்; உடலின் உறுப்புக்கள், ஐம்பொறிகளின் சொல் செயலுக்குத் தக்கவாறும் எண்ணத்தின் மூலமாக மின்சார சக்தியில் தாக்கி, எத்தொழிலும் நடைபெறுகிறது.

# 77 சூக்கும லோக போக்கு வரவு

மனிதனின் துன்பத்தாலும், வியப்பாலும், மகிழ்ச்சியாலும் உண்டான எண்ணத்தின் எதிர்தோன்றலால் சொர்க்கம், நரகம், சூக்குமம், தேவர்கள், பேய்கள் என்ற சொற்கள் உலகில் பரவி இருப்பதால் அதைத் தெரிந்துகொள்ளவேண்டிப் பாடு படுவதில் தோன்றும் தோற்றங்களும், அதை ஆராய்ந்து பார்த்ததன் பின் அதுவுமில்லை என்று சொல்ல வேண்டியதாயிற்று. முடிவாகத் தெரிந்ததை மட்டும் தெரிவித்துவிட்டு, மற்றதைத் தெரிவிக்காமல் இருந்தால் மிக நலமே என்று நினைக்கலாம். உலகில் முடிவறியப் பாடுபடும் ஒவ்வொருவரும் இவைகளில் ஈடுபட்டு இருப்போர்களுக்கு இரண்டையும் சொல்லிக்காண்பித்தால் அவர்களின் அனுபோகத்திற்குச் சரியாக இருக்கும். ஆதலால் கண்ட காட்சியையும் அதன் முடிவையும் இதில் தெரிவித்திருக்கிறேன்.

**அனுசரிக்கும் முறை :**—இருபத்தைந்து வயதுக்கு மேற்பட்ட ஆண், பெண்கள் இரவில் பதினொரு மணிக்கு மேல் காலை நான்கு மணிக்குள், அமைதியான தனி இருட்டறையில், தலையணை இல்லாமல், மல்லாந்து படுத்து, வலது கால் மேல் இடது காலும், இடது கைமேல் வலது கையும் மார்பின்மேல் வைத்து வாயை மூடி அண்ணத்தில் நாவை ஒட்டி ஒரே நினைவாய் முதுகு எலும்பிலிருந்து உடல் அசையாது உச்சியை நினைத்தால், தலையணை உறை கழற்றுவதுபோன்ற உணர்ச்சியோடு தன் சூக்குமம், சூக்கும லோகத்திற்குப் போய் வரும். சிறிது காலம் (சுமார் 40 நாள் வரை) முயற்சியோடு பழகவேண்டும்.

சூக்குமம் உடலை விட்டு விலகி இருந்தால் பரு உடலில் ஒரு மகிழ்வான மின்சாரக் கூச்சத்தோடு சூக்குமத்திற்கும் பரு உடலுக்கும் ஒளிக் கிரணங்கள் பாய்ந்துகொண்டிருக்கும். இரவில் சாப்பிடாமல் இருப்பதும், ஆண்கள் முகத்தைச் சவரம் செய்து கொள்வதும் இதற்கு நல்லது. சூக்கும லோகப் போக்கு வரவு செய்துகொள்வதால் தன் உடல் தத்துவம் தெரிவதோடு மறதி தெளிந்து, திடமும், மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன.

## வெகுகால யுகங்களாய் ஆராய்ந்ததன் முடிவு: பருவுடல், (ஸ்தூல உடல்) நுண் உடல், (சூக்கும உடல்) அறிவுடல் (காரண உடல்)களின் உண்மை

பருவுடல் ஏற்படுவதற்கு முன் எவ்வுருவங்களுக்கும் நுண் உடலோ, அறிவுடலோ இல்லை. உருவங்கள் ஏற்பட்டபின் ஒன்றுக்கொன்று எதிர்ப்பட்டு ஏற்படும் பார்வைகளினாலும் ஒன்றோடொன்று கலப்பதினாலும் அதனால் ஏற்படும் அனுபோகத் திறமைக்குத் தக்கவாறு ஒரு உருவத்திற்கு மறு உருவம் மேலாகவும், சீர்திருத்தமாகவும் உண்டாகவும் உண்டாக்கவும் நுணுகி ஆராய்வதுமாகும். உருவங்கள் ஏற்படுவதற்குமுன் தனி அணுமயத்தைத் தவிர எந்த ரூபமும் அறிவுடலாகவும் நுண் உடலாகவும் ஆவதில்லை.

## எடுத்துக் காட்டு

அக்கினியிலிருந்து அணுக்களாகப் பிரிந்து வருவதற்கு முன்னதாகவே பின் ஏற்படப் போகும் உருவங்களைப் போல முன் உருவங்களாயிருந்து அந்த உருவங்களின் செயல்களான நுகர்ச்சிப் பதிவுகளால் அணுக்களில் அறிவு ஏற்பட்டிருந்து அந்த அணுக்கள் வருவதில்லை. ஆதலால் காரணம் என்ற அறிவுடலும் அதன் எதிர் தோன்றலான நுண் உடலும் ஏற்பட இடமில்லை. அவன் எழுந்தான், ஓடினான், அமர்ந்தான், தூங்கினான் என்பதுபோல அணுக்களின் சேர்க்கையால் உள்ள உருவத்தில் ஏற்படும் செயல்களுக்குத் தக்கவாறு துணிவு, ஓசை, வெப்பம், வெளிச்சம், கானல், நீர், மண், காற்று, பரு உடல், நுண் உடல், அறிவுடல், என்றும்; மூக்கு, காது, கண், நுண் அறிவு ஆகிய புலன்கள் கூடுதலுக்குத் தக்கவாறு ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள அறிவுகள் என்றும்; எவ்வகையிலும் உடல் தொடுகை உணர்ச்சியால் நலம் விளைவது இன்பம் என்றும்; தொடுகை உணர்ச்சிகளுக்கு ஏற்படும் தடைகளால் உள்ள நோய் கவலைக்குத் துன்பம் என்றும்; எல்லா நிர்வாகங்களும் யாதொரு தடையுமில்லாமல் ஒழுங்காக நடக்க வேண்டிய நியதிக்காக மொழி, எழுத்து, படிப்பு, தொழில், பதவி என்றும்; கிழமை, திங்கள், ஆண்டு, என்றும்; கிழக்கு, மேற்கு திசைகள் என்றும், தொழில் உருவங்களுக்கு ஏற்ற பெயர்களும், ஏழை மக்கள் வாரம் திங்கள், ஆண்டிற்கு ஒரு முறையாவது அவர்கள் வாழ்கின்ற இடங்களைத் தூய்மை செய்து, நல்ல உணவு, உடை, உண்டு உடுத்தி மகிழ்தற்காக விடுமுறைநாள் என்றும்; அழுந்தி அறிகின்ற அறிவு நிறைவுக்குத் தக்கவாறு குணம், மனம், புத்தி, ஆராய்ச்சி, அறிவு, பேரறிவு என்றும், உருவத்தில் நுகர்ந்த அறிவு பயன்படக் கூடிய திறமைக்குத் தக்கவாறு சீவன், சீவாத்மா, பரமாத்மா என்றும் பெயர்கள் ஏற்பட்டன.

**எடுத்துக்காட்டு** :—மழை பெய்ததால் ஏற்பட்ட குளிர்ச்சியால் நலம் அல்லது காய்ச்சல் ஏற்பட்டதென்பதில், மழை பரு உடலிலும், குளிர்ச்சி நுண் உடலிலும், நலம் அல்லது காய்ச்சல் அறிவுடலிலும் ஏற்படுவனவாகும்.

# 78 சிந்தனைக் குரியவை

உடல் எடுத்த பயன் எதையும் நன்மையாய் நுகர வாய்ப்பில்லாது பொறுத்துக்கொண்டு வருந்தி மடிவோர் அநேகர்.

வறுமையால் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ள முடியாது, நஞ்சுண்டும் நீரில் மூழ்கியும் இன்னும் பல விதத்தில் உயிரைப் போக்கிக் கொள்வோர் பலர்.

பொருள், நகைகளைக் கவர்ந்து உயிர் வாழ்வோரால் கொலை செய்யப்படுபவர்கள் பலர்.

தம் தீய செயல்களினால் ஏற்படும் குற்றங்களை உணர்ந்து என்றைக்கு மன்னிப்புக் கிட்டுமோ என்று வருந்தி மடிவோர் பலர்.

ஒவ்வொரு தொழிலும் ஊதியத்தைக் கருதியே இருப்பதால் நோயாளர்கள் மிகுதியாக வரவேண்டுமென்ற ஏக்கம் மருத்துவர்களிடமும், ஒழுக்கமில்லாதவர்கள் மிகுதியாக வேண்டுமென்ற ஏக்கம் பரத்தையிடமும், அறிவில்லா நம்பிக்கையால் செயல்கள் பூசனைகள் செய்ய மக்கள் மிகுதியாக வேண்டுமென்ற ஏக்கம் கோயில் சமாதி பூசாரிகளிடமும், கலகம் பற்றிய வம்பு, வழக்கு மிகுதியாக வேண்டுமென்ற ஏக்கம் வழக்கறிஞர்களிடமும், குடிகாரர்கள் மிகுதியாக வேண்டுமென்ற ஏக்கம் மதுபானக்கடைக்காரர்களிடமும், பிணங்கள் மிகுதியாக வரவேண்டுமென்ற ஏக்கம் சுடுகாட்டுக் காவலாளிகளிடமும், எந்தத் தொழிலாயினும் வரி மிகுதியாகக் கிடைத்தால் போதுமென்ற ஏக்கம் அரசியலாரிடமும் இருப்பதற்குப் பொருளாதாரமே முக்கிய காரணம். **வேளாண்மை என்றைக்கும் செழிப்பாய் விளைவாக வேண்டுமென்ற எண்ண முடையோர் உழவர்களே.**

குடும்பத் தொல்லைகளுக்குப் பயந்து களவுக்குச் சென்றால் அதனால் ஏற்படும் மானக்கேட்டிற்குப் பயம். தாடி, முடி வளர்த்து, காவி அணிந்து துறவு பூண்டால் உலகத்தார் கேட்கும் பலவகை கேள்விகளுக்குப் பயம். இவைகளுக்கெல்லாம் அமைதி வேண்டும், வேண்டும் என்று சொல்லித் தப்பித்தாலும் ஈ எறும்பு கொசுக்கடி, நமைச்சல்,

சொறி, சிரங்கு, நீர்க்கொள்ளல் ஆகிய இவைகளின் சிறு இன்னல்களைப் போன்று எதிலும் அமைதியாய் ஒருவன் இருக்க முடிவதில்லை.

பணத்திற்குள்ள மதிப்பால் பணச் செல்வாலும், உதவியாலும், படித்த படிப்பு, தொழில், மருத்துவம், விஞ்ஞானம் அரசியல் நிலை உயர்வு ஆகிய இவைகளின் பயன் எல்லா மக்களுக்கும் பொது நீதியாக உதவுகிறதே இல்லை. தனக்கு வேண்டிய பொருள் தருவாருக்கும் பணமுடையவர்களுக்குமே உதவுகின்றனர். பொது மக்களுக்கென்று இருக்கும் பொது நிலையங்களும் அரசியல் ஆட்சி முறைகளும், பணத்திற்குரிய மதிப்பினால் பொது மக்களுக்குப் பயன்படாது, அந்தந்த ஆட்சித் துறையிலுள்ள அலுவலாளர்கள் பொருள் தேடவே உதவுகிறது.

கொடிய நோயாயிருப்பினும், காசம், இழுப்பு நோய், உறுப்புக் குறை, கூன், குருடு, வெறி, மடமை ஆகிய இவையிருப்பினும் தள்ளாடும் வயது 80 ஆகியும் மனைவியர் பலர் இருப்பினும், இவர்களுக்குப் பணம் மட்டும் இருந்தால்; இன்னும் வேண்டிய பதினாறு வயது சின்னஞ்சிறு வாலிபப் பெண்ணைத் திருமணஞ் செய்து கொடுத்துப் புகழ் மாலை சூட்டி வரவேற்புச் செய்யும் பெரும் தீய செயலோடு பொது இடங்களிலும், அரசியல் ஆட்சியிலும் பதவி மேற்கொள்ள வைக்கும் வழக்கத்தை அடியோடு தொலைக்க ஒவ்வொருவரும் முற்படுங்கள்.

அறிவுக்குப் பொருத்தமில்லாக் கொள்கையையும், ஆசிரம நூல்களையும் அறிவில்லா மக்கள் பெரிதாக நம்பி வருவதனால் அறிவுக்குத் தடையாயிருப்பதோடு அவர்கள் நம்பிக்கையில் தம் மனத்தில் பலவற்றையுங் கற்பித்துக்கொண்டு கூத்தாடத் தொடங்கிவிடுகிறார்கள். இத்தகைய பொருளற்ற கொள்கைகள் மிகுதியாக இருப்பதனால் அவற்றிற்குப் பொருட்டுணை மிகுதியாயிருந்தால், அறிஞர்களும் அந்தப் பொருளை ஈட்டவேண்டியே தம் அறிவை அடியோடு மறந்து, அத்துடன் ஒத்துழைத்துத் தமக்கு வேண்டிய நலங்களைப்

பெற்றுக்கொண்டு வருவதால் மூடக்கொள்கைகள் நிலைத்து வர ஏதுவாய் இருந்து வருகிறது. உழவர்கள் நீர் நிலத்தின் உரத்தை நம்பி வேளாண்மை செய்து பயனளிக்கிறார்கள். தந்திரிகள் மக்களிடத்தில் அறிவு வளர்ச்சிக்குத்தடையான அறியாமையை விளைவித்துப் பிழைத்து வருகிறார்கள்.

வறுமையுள்ள நாட்டில் வழக்குத் தீர்க்கும் மன்றங்களும், கூன், குருடு, நொண்டி, உறுப்புக் குறை முதலிய குறைபாடுகளும், பல்வேறு மதத்தார்க்கெனப் பாகுபாடுள்ள கோயில்களும் மிகுதியாகவே பெருகியிருக்கின்றன.

வேளாண்மை விளைவும், குளிருமுள்ள நாட்டில், குடி, ஒழுக்கக் கேடு, கொலை ஆகிய இவை மிகுதியாயிருப்பினும் அன்பு, ஆதரிப்பு, ஒற்றுமையோடு பெருந்தன்மையும் நிறைந்தே இருக்கின்றது.

பணமுள்ள நாட்டில் பல பொருள்களை உருவாக்கி நாடு தோறும் விலை பெற அனுப்பிப் பொருள் தேடும் ஏக்கம் மிகுதியாகவே இருக்கிறது.

பெரிய புண்ணியத் திருப்பதிகள் இருக்கும் ஊர்களில் வாழும் பெரும்பாலோர்களின் சொல் அன்பாய் இருப்பினும் நயவஞ்சகத் தீய எண்ணங்கள் நிறைந்தே இருக்கின்றன.

படிப்பாளிகள் நிறைந்திருக்கும் ஊர்களில் படிப்பால் தன்னை உயர்வாகவும் பிறரைத் தாழ்வாகவும் நினைக்கும் காரணத்தால், உண்மை அன்பு, பெரிதும் இன்புறுகின்ற நிலை பெரும்பாலும் இருப்பதில்லை.

அறிவில்லாச் சூழ்ச்சியாளர்கள் தமக்கு வேண்டிய நலத்திற்காகச் செய்யும் சூழ்ச்சிச் செய்கைகள் பல உண்மையான மக்களையும் தம்மையும் பின் அவ்விரு பகுதியினரின் பரம்பரையையும் நெடுங்காலம் வரை அறியாமையுள் ஆழ்த்தி வைக்கின்றன. இதுவரை நடத்தி வந்ததை விடவேண்டுமே என்று வருந்தாது அறிவுக்கு முரணாய் உள்ள மத ஒழுக்க முறைகளை அறிவுடையோர்களாகிய நீங்கள் விடுவீர்களானால்

பல ஆயிர மக்களை நல்லறிவுக்கு ஆளாக்கி வைப்பவர்களா வீர்கள்.

என்றென்றைக்கும் செல்வந்தர் வழிமுறையில், ஏழைகள் இல்லாது எல்லோரும் செல்வந்தர்களாகவே இருப்பதில்லை. எளியோரும் பிச்சை எடுப்போரும் வழக்குகளுமில்லாத மதம் எதுவுமில்லை.

தனி ஒரு நோய்க்காகத் தேர்ச்சிபெற்ற மருத்துவரிடம் மருத்துவம் செய்து கொண்டவர்களெல்லோருக்கும் அந் நோய் தீர்ந்து விட்டதாக இல்லை.

மக்கள் வேண்டுதலில் எந்தக்கடவுள், கோயில், சமாதி மூலமாகவாவது ஒரு வேண்டுதலாவது தனி ஒரு காரியமாவது எல்லோருக்கும் நிறைவேறியதில்லை.

உண்ண உதவாத விலையுயர்ந்த தங்கம், வைடூரியம், முத்து போன்ற பொருள்கள் நிரம்ப இருக்கும் தனவந்தர்களில் உணவு உண்ணாது பசி தீர்த்துக்கொண்டோர் எவருமிலர்.

பெரிய அரசர்களுக்கு மருத்துவராய் இருந்த மருத்துவரும், அரசரும், சாகாமலிருக்கக் கல்பம் உண்டோரும், அறிவில் சிறந்த ஞானிகளும் உடல் அழியாது என்றைக்கும் உடலில் அறிவோடு இருந்தோர் ஒருவருமில்லை.

வருங்காலத்திலாவது மனித உடலுக்கு மேலான நிலையிலுள்ள வேறு ஒரு உடல் உலகில் தோன்றக் கூடியதாய் இருப்பின் மனித உடம்பின் மூலம் எந்தத் தொழிலும் நடத்தக் கூடிய அறிவு ஏற்பட்டிருக்காது.

பருவுடல் எடுக்குமுன் நுண்ணுடல் அறிவுடல் உலகங்களில் இன்று பருவுடலில் அனுபவிக்கும் இன்பத்தை விட மேலான இன்பத்தில் இருந்து இன்பமடைந்திருக்குமாகில் பருவுடலில் அனுபவிக்கும் சிறிய இன்பத்திற்காக எவரும் உலகத்தில் இருக்க உடன்பட மாட்டார்கள்.

கடவுள் என்ற தத்துவம் இன்னது தான் என்று விளக்கத்துடன் விளக்கியதும், மனிதனின் தன்நிலையை அறிவித்

த்தும் **இவ்வுலக சமாதான ஆலயத்தைத்** தவிர இதுவரை உலகில் தோன்றியது வேறு எதுவுமில்லை.

# 79 பேய்களின் தோற்றம்

பயத்தின் விளைவே பேய். நல்லறிவும் துணிவுமுள்ளவர்களுக்குப் பேய், மந்திரம், வணக்கம், பணிதல் ஆகிய இவைகள் இல்லை.

*உடம்புகளில் பக்குவத் திறமைக்குத் தக்கவாறு புலன்கள் உண்டாகி, இறுதியாக மனித உடல்களாகி நெடுங்காலத்திற்குப்பின், அம்மனிதருக்கு வேண்டிய நுகர்ச்சிக்கு உணவு உடை, தொழில், தூய்மையான இடம் ஆகிய இவைகள் கிடைக்காத துன்பத்தால் வருந்திய எண்ணத்தின் ஏக்கவலு உடையவர்கள், கொடிய எண்ணமுடையவர்கள் இறந்தபின், அவர்கள் பட்ட கஷ்டங்கள், அவர்கள் எண்ணிய எண்ணங்கள், செய்த செயல்கள் ஆகிய யாவும், இறந்தவர்களின் இன பந்துக்கள், நண்பர்களின் எண்ணத்தில் பதிந்திருப்பதால், இறந்த இடங்களில் அல்லது அதனருகில் செல்லும் போது அதில் ஒரு சிலருக்கு, சில சமயங்களில் இறந்தவர்களின் எண்ணம் தோன்றிவிடுவதால், நீல நிறம் போன்ற மிகச்சிறிய நிழலைப்போல் பேய் உடலாக சிறிதுநேரம் அவர்களுக்குத் தெரியும். அறிவு விளக்கம் உடையவர்கள், நற்செய்கை உடையவர்கள் இறந்தபின் அவர்களை எண்ணுபவர்கள் சிலருக்கு, சிலசமயம் இறந்தவர்களுடைய உடல் சிறு வெண்மையான நுண் உடலாகச் சிறிதுநேரம் தெரியும். இவை எது போன்றதென்றால், ஒருவன் தன் எதிரே உள்ள ஒரு உருவத்தைக் கூர்ந்து பார்த்தானானால், அவ்வுருவத்தின் பின், அவ்வுருவத்தைப்போல் வெண்ணிறவுருவம் சில சமயம் சிறிதுநேரம் தெரிவதுபோலாகும்.*

*இறந்தபின் எல்லாம் அணுமயமாகி விடுவதைத்தவிர வேறொன்றில்லை.*

*மனப் பயத்தால் ஏற்பட்ட வியாதியையும், பேயையும், அம்மனத்திலுள்ள பயத்தை நீக்கியே தீர்க்கவேண்டும்.*

தைரியக் குறைவு, சலன புத்தி, பயந்த உள்ளம், கவலை, நெடுநேரம் கண்விழிப்பு, நீண்ட கால்கள், அதிக ரோமம், கண்களில் பூதத்திரை உடைய ஆண் பெண்கள் தான் பயத்தால் பேயாட்டம் ஆடுவர். இவர்கள், தங்களுக்குப் பயமுள்ள இடங்களில் தனியாகப் போவதாலும், பயந்து பார்க்கும் பார்வையாலும், சிறு அதிர்ச்சியைக் கேட்டு மிரள்வதாலும், பயந்த எண்ணத்தாலும், உடம்பின் உள்ளுருப்புக்களில் ஒன்றான சுவரொட்டி என்ற மண்ணீரல் அதிர்ச்சியடைந்து, பித்தப்பையில் சூடேறி, பாதிக்கப்பட்டு பலம் குறைந்துவிடுவதால், மனப்பயத்தால் ஏற்பட்ட மனத்தின் பிரதிபிம்பமே எதிரில் தோன்றி விடுவதால் அதைப் பார்த்தநாள் முதல், அந்தந்தத் தோற்றத்தையே எண்ணிக்கொண்டிருப்பதால் மண்ணீரல் மிகப் பலவீனமடைகிறது. இதன்காரணத்தால் தான், காய்ச்சல் தலைமயக்கம் உண்டாகி, அறிவு மயங்கிப் பொருளற்றுப் பாடவும், ஆடவும், புலம்பவும் செய்து உடல் நலங்குன்றி விடுகிறார்கள். இந்நோய் அறிவு நிலைக்குத்தக்கவாறும், செல்வ நிலைக்குத் தக்கவாறும் ஏற்படுகின்றன. அறிவுப் பெருக்கமுள்ள மக்களுக்கு மயக்கமாகத் தோன்றும். மிகுதிப்பட்டால் மூர்ச்சை, காக்கை வலிகள் ஏற்படும்.

## இதைத் தீர்க்கும் முறைகள்

மேற்கண்டவர்களின் வலது பிடரி நரம்பில் சூடுண்டாகக்கூடிய மருந்தை (திராவகத்தை) தேய்த்து, பிடரியில் மெதுவாக அடித்து, பசியாகவைத்து, சூடுண்டாக்கி, வெந்நீரில் குளிக்கச் செய்து, சூடான ஆகாரத்தைக் கொடுத்து வருவதுடன், கண்களால், அவர்களின் கண்களைக் கூர்ந்து பார்த்து வருவதிலும், நல்ல தண்ணீரை அடிக்கடி குடிக்கச் செய்வதிலும், நல்ல காற்றுள்ள இடத்தில் தங்கியிருக்கச் செய்வதிலும், நன்றாகத் தூங்கச் செய்வதிலும் இந்நோய் குணமாகும். பேய் இருப்பதாகக் கருதும் மக்கள் இம்முறைகளைக் கையாளுதல் மிக நல்லது. பேயாட்டம் ஆடுவோர் அறிவற்ற நிலையிலிருந்து கேட்கும் பொருளைக் கொடாதிருத்தலும், சாம்பிராணிப் புகை போடாதிருத்தலும், என்ன

சொன்னலும் கேளாதிருத்தலும் மேலாகும். ஒரு வெத்திலையில் 3 கருஞ் சீரகத்தை வைத்து மடித்து, பேய் பிடித்தவர் அறியாவண்ணம் மாலையில் மூன்று நாள் மூன்று முறை கொடுத்தால் பேய்க்குணம் நீங்கிச் சுகமடைவர்.

நல்ல உணவுகளைத் தனிப்படக் கொண்டுபோகும் இடங்களிலும், படுக்கையறையில் தனிப்படப் பயப்படக் கூடிய பெண் படுத்திருந்தால் அவள் அருகிலும், பொதுவாகக் குடும்பங்களில் பயங்கரமாகக் கருதப்படும் இடங்களிலும், படுக்கையறைகளிலும் அடுப்புக் கரித்துண்டைப் பக்கத்தில் வைத்துக் கொள்ளுதல் நல்லது.

சுடுகாட்டிற்கு அருகில் பேய்களின் பயமே ஒழிய, சுடுகாட்டில் பயமே இல்லை. திருடர் இருக்கும் ஊர்களில் பயமே ஒழிய திருடர் வீட்டில் தங்கினல் பயமே இல்லை.

கொடியோர்களை எதிர்த்தால் பயமே ஒழிய, அவன் அன்பில் சார்ந்தால் பயமே இல்லை.

# 80 தேவர்களின் தோற்றம்

நறுமணம் நிறைந்த இடங்களிலும், நன்கு அலங்கரிக்கப்பட்ட, பரிசுத்தமான பந்தல்களிலும், இனிய உணவுகள் நிறைந்த விருந்துகளிலும், உயர்ந்த பிரசங்கங்கள் செய்யுமிடங்களிலும், தவம் செய்யுமிடங்களிலும் பக்தியோடிருக்குமிடங்களிலும் தேவர்கள் தோன்றுவார்கள் என்று பலர் வருணித்து எழுதிய நூல்களைப்பற்றிப் பலர் வாயிலாகக் கேட்டதாலும், அத்தேவர்களைப் பார்க்கவேண்டும், பேசவேண்டுமென்ற விசுவாசத்தோடு அதே எண்ணமாக இருப்பதால், அறிவில் சிறு மறதி ஏற்பட்டு, மக்கள் எண்ணத்தில் தோன்றிய தேவர்கள், இளநொங்கு போன்ற வெண்ணிறத் தோற்றமாக அங்கு தோன்றி நிறைந்திருப்பதாகவும், பேசுவதாகவும் சிறிது நேரம் அவர்களுக்குத் தோன்றக்கூடும். தேவர்களைவிட மனிதர்கள் அறிவாற்றல்களிற் சிறந்தவர்கள் என்று மக்கள் சிலர் எண்ணியதால் அத்தேவர்களிருக்கு

மிடம் சென்று, “தேவர்கள் பிற்காலத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளைப்பற்றி அடிக்கடி பிரசங்கம் செய்து வந்தும் மகிழ்வதுண்டு. இவை எல்லாம் என் அனுபவத் தாலும் கண்டு, அங்கு பிரசங்கங்களும் செய்து வந்து நூல் களும் முன்னே எழுதியுள்ளேன். பின்னர் அறிவால் நன்கு பன்முறை ஆராய்ந்த போது, உண்மை நிலை நன்றாக அறிவிற்கு விளங்காத போது மூச்சை இழுத்து விட்டு அடக்கும் பயிற்சியால், உந்தியிலிருந்து நெற்றி வரையுள்ள ஆறுதாரத்தில் படிப் படியாய் சக்கரங்களும், மலர்களும், வர்ணங்களும் தம் அறிவின் நம்பிக்கையில் மனக்கண் ணுக்குப் புலப்பட்டபோதிலும், தன் எண்ணத்தின் வலு வால் அது தோன்றியதேயன்றி அங்கு ஒன்றுமில்லை என்று அறிவுக்கு விளங்குவதுபோல்”, பக்தியோக தவங்களின் ஆராய்ச்சியின் முயற்சியில் நுண்ணுடலாக நம்மிற் சிலரின் அறிவிற்குப் புலப்பட்டபோது அவற்றைக் கடவுளென்றும், தேவர்களென்றும், பேய்களென்றும், அறிவுடல், நுண் ணுடல், ஏற்பட்டதன்பின் பருவுடல்கள் ஏற்படுவதாகவும் சொல்லவேண்டியிருந்ததே தவிர வேறல்ல.

உணர்வின் இன்பத்தால் அல்லது குண்டலினியின் தவத்தின் பேரின்பத்தோடு பதினோராண்டுகள் ஆராய்ந்த முடிவே இவை.

# 81 பிறவி, மறு பிறவி

**உலகத்தில் பிறந்ததன் பயன் உடல் இருக்கும்போது**
**அனுபவிக்கும் அனுபவங்களைத் தவிர்த்து**
**பிறக்கும் முன்னும் செத்ததின் பின்னும்**
**இல்லை இல்லை எதுவும் இல்லை.**

பருவுடல், நுண்ணுடல், அறிவுடல்களின் உண்மையுஞ் பேய், தேவர்கள் தோற்றத்தின் உண்மையும் அனுபவித்து, ஆராய்ந்த முடிவில் தெரியும் உண்மை என்னவென்றால் அணுக்கள்கூடி உருவாகு முன்னும், உருவாகிப் பிரிந்த பின்

னும், அணுக்களின் அம்சம் வெட்ட வெளியாகவே இருக்கிறது. அவ்வணுமய வெட்ட வெளியில் உலகில் உருவாகு முன் இவை இவை உருவாகி இன்ன இன்ன தொழில் நடத்தவேண்டுமென்ற எண்ணமும் அதிலிருப்பதில்லை. உருவாகி அவ்வுரு பிரிந்தபின் அல்லது அழிந்தபின் இன்ன உருவத்திலிருந்து இன்ன இன்ன செயல் செய்தோமென்ற எண்ணமுமங்கிருப்பதில்லை.

உயர்தரமான மரத்தில் செய்த கவர்ச்சியான அழகுள்ள பொருள்களையும், பயன்படா குப்பையையும், இரும்பினால் செய்த நுட்ப கருவிகளையும், பயன்படாது துருப்பிடித்த இரும்பையும், இதுபோன்றே மற்றப் பொருள்களையும், நெருப்பிலிட்டால் நெருப்பு மயமாகி, உருவங்கள் அழிந்து வேறுபாடற்ற வெப்பமாய்ச் சென்று விடுவது போன்று, உடல் அழிந்தபின் ஒன்றுமில்லை. உருவமிருக்கும்போது நுட்ப ஆயுதங்களும், பொருள்களும், பார்வைக்கும் தொழிலுக்கும் பயன்பட்டதுபோல், மனித உருவம் இருக்கும்வரை தான் அவன் தொழிலும் அறிவும் பயன் படுகின்றன.

பெய்யுமழை பூமியில் விழுமுன் எவ்வித மாற்றமும் உறுவதில்லை. பூமியில் பட்டபின் அங்கங்கு சேரும் தன்மைக்குத் தக்கவாறு நிறம், நாற்றம், மணம், சுவை ஆகிய பலவிதங்களாக மாறுகிறது. அது பின் வெப்பமாகி ஆவியாகி மேகமாகிப் பின் பெய்யும் மழையில், முன்னுள்ள நிறம், நாற்றம், மணம், சுவையாகப் பெய்வதும் இல்லை. அதுபோல் எந்த உயிரும் இறந்தபின் மறு உடல் எடுப்பதே இல்லை. ஒரு மரத்தின் வித்துக்களால் பல மரங்கள் உண்டாவதைப்போல், மனிதன் இறக்குமுன் அவன் விந்துவால் பல குழந்தைகள் உண்டாகின்றன; ஒரு மனிதன் உயிருள்ளபோது அவனது செயலும் எண்ணமும் நல்லதாயிருந்தால் அவன் உடல் நலத்திற்குப் பயன் படுவதோடு அல்லாமல் அவன் ஒருவனால் பல மக்களும் நற்செயல், நல்லெண்ணம் ஆகிய இவற்றைக்கொண்டு பயன்பட வாழ்வார்கள். இதைத் தவிர்த்து உயிருள்ளபோது செய்த செயல்களுக்காகவும், அவன் எண்ணிய எண்ணங்களுக்காகவும், உலகில் மறு பிறவி எடுத்து நன்மை தீமை

களுக்கு ஏற்பத் துன்பங்களோ, இன்பங்களோ அனுபவிப்பது என்பதேயில்லை. அப்படி இல்லாததால்தான் உலகில் வழக்குகளைத் தீர்க்க நீதி மன்றங்களும், ஆத்ம ஆராய்ச்சி நிலையங்களும், மருத்துவச் சாலைகளும், பக்தி யோக ஆலயங்களும் இருக்கின்றன. போரில் சேர்ந்த ஒருவன் குடி, பிறர்மனை விழைதல், இன்னோரன்ன செய்யவொண்ணாத பெரும் தீய செயல்களைச் செய்வதோடு, பலரைக் கொன்றும் விடுகிறான். அவனுக்குப் பெரும் வீரன் என்ற பட்டம் சூட்டி வெகுமதியளிப்பதும், பொதுவாக அப்போர் வினையிலீடுபடாத ஒருவன், யாதானும் ஒரு காரணத்தால் ஒருவனைக் கொன்றுவிட்டால், அவனைக் கொலைகாரப்பாவி, பாதகன், பெரும் துரோகி என்பதோடு, தூக்குத் தண்டனை ஆகிய இவைகள் ஏற்படக் காரணமே இல்லை. இவ்வுலகில் மறு பிறவி எடுக்காது அவன் உலகில் செய்த நன்மைகளுக்காக மேலுலகில் இன்பமான நிலையில் இருப்பதுமில்லை. அவன் செய்த தீமைகளுக்காக நரகலோகத்தில் துன்பப்படுவதுமில்லை.

# 82 மோட்சம், நரகம்

செயல் எண்ணங்களில் பாகுபாடு உள்ள மனிதர்களுக்கு மோட்சம் உண்டு என்று நம்பினால் எவ்வித எண்ணத்தின் வலிவும் இல்லாது உழைப்பு, உணவு, தூக்கம், இன்ப நுகர்ச்சி, ஆகியவைகளைக் கால ஒழுங்கின்படி நுகர்ந்து இயற்கையாக வாழும் பறவை முதலிய உயிரினங்கள் நம்மை விட உயர்வான முக்தியடைதல் வேண்டும். ஆகையால் மோட்சம், நரகம் என்பது தனியாக இல்லை.

**மோசமும் மோட்சமும் ஒன்றே**
**கருவும் குருவும் ஒன்றே**
**ஆதியும் மனிதனும் ஒன்றே**
**அறிவின் பெருக்கத்தில் நீங்களும் நானும் ஒன்றே.**

தூக்கத்தில் கண்ட கனவை, எழுந்து ஆராய்ந்து அறியப் பருவுடல் வேண்டியிருக்கிறது. ஆகையால் பருவுடல்

உலகத்துக்கப்பால் இருக்கும் அணுமயத்தில் பரலோகத் தீர்ப்பு நாள் என்பதே இல்லை.

பறக்கும் விமானமும், பருவுடலும் இருந்தால்தான் இன்பமாய்ப் பறந்து வந்தேன் என்று ஒருவன் சொல்ல முடியும். அதுபோல் துக்கம், இன்பம், தீர்ப்பு என்பவை செயலிலுள்ள நிகழ்ச்சிகள். செயல்களைச் செய்தற்கு அணுக்களின் சேர்க்கையுள்ள உடலும் கண் காணும் உலகும் இருந்தாலே முடியும். அவ்வாறில்லாமல் இந்த உலகத்திற்கு அப்பால் யாவும் அணுமயமாகி விடுவதால், அவ்வணுமயத்தில் மக்கள் செயலில் அல்லது உடலில் உள்ள காரியங்கள் எதுவுமில்லை. மனிதர்களும் ஏனைய உயிர்களும் இறந்தபின் அணுக்களாகி விடுகின்றன. எந்தச் செயலும் எண்ணமும் அப்போதைக்கப் போது அணுக்களின் அலைகளால் எவரையும் தாக்கக்கூடியதாயிருக்கிறது.

உருவமின்மையாலே உருவமும், உருவத்தால் காரியச் செயலும், காரியத்தால் காரணமுமாகும்.

சிறு தண்ணீரைப் பெரும் நெருப்பு தன்னுள் அடக்குவதும், மிகுந்த தண்ணீர் சிறு நெருப்பை தன்னுள் அடக்குவதே போல், தீய செயல், எண்ணமுடையோர்கள் பெரும்பாலோர் உலகில் இருந்தால், நற்செயல் எண்ணமுடையோர்களும் கெட்டசெயல் எண்ணத்திற்கும் ஆளாகிறார்கள். நல்லெண்ணம், நற்செயல் உடையோர்கள் பெரும்பாலோர் உலகில் இருந்தால், தீய செயல் எண்ணமுடையோர்கள் தம் செயல்களை உணர்ந்து நல்வழிக்காளாவார்கள். ஆகையால் மனிதர் உயிருடன் இருக்கும்போது செய்யும் நன்மை பொது மக்களுக்கு பெரும் நன்மையை உண்டாக்கும். இறந்தபின் அவர்களின் நற்செயல் பரவுவதற்குத் தக்கவாறு சிலகாலம் வரையில் உயிருள்ள மக்கள் அவரை நினைக்கும் எண்ணத்தினுடைய வன்மையால் நலன் தருகின்றன.

பத்தாயிரம் மக்கள் கூடிய கூட்டத்தில் ஒரு கவிஞன் பாடும் குரலுக்குத் தக்கபடி அப்போதைக்கப்போது சோகம், அமைதி, கோபம், இரக்கம், வீரம், பேரின்பம்

இவைகளின் உணர்ச்சி, அங்கே கூடியிருக்கும் எல்லோருக்கும் உண்டாவதுபோல், உலகில் ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையில் நன்னடத்தையுடன் ஒழுக்கமாகப் பேசி, எண்ணி வாழ்வதே அவர்களுடைய சொந்த நலத்திற்கும் உலகப் பொதுமக்களின் நன்மைக்கும் சிறப்பான உதவியாகும்.

நெடுங்காலமாக ஏழை, செல்வந்தர் என்ற பாகுபாடுகள் உலகில் இருந்துவருவதற்கு அரசியல் ஆட்சியின் திறமைக் குறைவே காரணமாகும். கால நிலையினாலும், நுண்ணறிவினாலும், உழைப்பாலும், முயற்சிகளாலும், எளியோன் பணக்காரனாகவும் அவை இன்மையால் பணக்காரன் எளியோனாகவும் ஆகின்றார்கள்.

தந்தை, தாயின் விந்தும் இரத்தமும் கெட்டிருந்தால் குழந்தைகளுக்குக் கருவிலேயே நோய் ஏற்படுகிறது. தாயின் இருப்பு, பார்வை, நடை, படுக்கை ஆகிய இவைகளிலுள்ள குறைபாட்டால் அவயவக் குறைவோடு குழந்தைகள் பிறக்கின்றன.

அறிவின் உணர்ச்சியுள்ள வயதுக்குப்பின் ஏற்படும் வியாதிகள் தன் கெட்ட எண்ணத்தாலும், பார்வையாலும், நடத்தையாலும், உலகத்தில் வியாதிகள் பெருக்கத்தாலும் ஏற்படுகின்றன.

## 82/1 பரம்பரையால் ஏற்படும் நன்மை தீமைகள்

பெரிய செல்வந்தர்களின் சொத்துக்கள், புகழ், பதவிகள், அவர்களுக்குப்பின், அவர்களின் பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், வம்சத்தினருக்கு உரிமையாகி விடுவதுபோல், அவர்களின் உடம்பிலுள்ள கெட்ட இரத்தம், விந்து, ஆகிய இவற்றால் ஏற்படும் உள் வியாதிகள், தீய எண்ணங்கள், செயல்கள் எல்லாம் அவர்களின் வழிவந்தோர்களை, வம்சத்தை, ஏழு பரம்பரைவரை பாதிக்கும். ஆகையால் நற்செயல், நன்னோக்கம், பரோபகாரம், நல்லொழுக்கமாக நடந்து கொண்டால், இரத்தம் விந்து தூய்மையாகி, உங்கள்

வம்சம் நன்றாக வாழும். நீங்கள் பொது நலத்திற்காகச் செய்யும் நற்செயல்கள், உலகில் என்றும் நீங்காது நிலைத்து நிற்கும்.

## 83 சந்தர்ப்பத்தால் ஏற்படும் செய்கை, சேர்க்கைகளின் தொடர்பு

சொல் வன்மையாலும், நடத்தை, பார்வை, குரல், அன்பு அழகாலும் படிப்பு பணம் தொழில் இவைகளின் நிலை உயர்வாலும், பெயர் எங்கும் பரவுதலாலும், கால இணக்கத்தாலும், ஒருவருக்கொருவர் நெருங்கிய நீண்டகாலத் தொடர்பாலும், ஒழுங்கீனத்தாலும், மிகுந்த வருமானம் பதவி நல்லறிவு ஆகிய இவைகள் உண்டாகி விடுவதும் உண்டு. இவைகளின் காரணத்தால் காதலின் தொடர்பு, நோய், இன்னல், பொருட்கேடு முதலிய துன்பங்கள் உண்டாகிவிடுவதும் உண்டு. நன்மையைக் கொண்டு தீமையை அகற்றிக் கொள்ளும் தன் உணர்தலின் ஆராய்ச்சியுள்ள வல்லமையுடன் இருப்பீர்களானால் நல்லதை முற்காலத் தவப்பயன் என்றும், தான் கெட்டதில் சார்ந்துகொண்டு அதை வினைப்பயன் என்றும் சொல்ல நேர்ந்தது. இதை ஆராய்ச்சி செய்யாதபோது முற் பிறப்பின் தொடர்பு என்று சொல்லலானார்கள். மறு பிறப்பு என்பது எந்த உயிருக்கும் மடிந்தபின் இல்லை.

பணம், படிப்பு, அறிந்த எல்லை இவைகளைப் பெரிதாகக் கருதுவதாலும், மதத் தொடர்பான வேறு பாட்டுக் கற்பனைகளை நம்புவதாலும், பக்தியோக ஞானத்தின் விருப்பத்தாலும், தன் உடல் இன்பங்களை நன்றாக அனுபவிக்காத ஏக்கத்தாலும், நல்ல எண்ணத்திற்கும் கெட்ட எண்ணத்திற்கும் பொதுவாகவே வன்மை மிகுந்துவிடுகின்றது.

**எடுத்துக்காட்டு** :—ஒரு மணங்கு இரும்பும், ஒரு மணங்கு தங்கமும் கனத்தில் ஒன்றே.

உலக அறிவாளிகளே! உலகத்தில் இதுவரை கடவுள் உண்டு என்போரும், இல்லை என்போரும்; மோட்சம் நரகம் உண்டு என்போரும், இல்லை என்போரும்; பிறவி உண்டு

என்போரும், இல்லை என்போரும் நாளுக்கு நாள் மிகுதி யாகின்றமையால், அறிவுக்கு விளக்கமாக அக்குழப்பங்கள் முடிவடையாமல் வெறும் நம்பிக்கையுடன் இருந்து வருவதினால், அக்குழப்பத்தின் முடிவறிவதற்காக உலகத்தி லுள்ள பல ஆயிரம் மக்களுக்குப் பயன்படக்கூடிய சேவையில் இருந்த பெரும் ஆராய்ச்சியாளர்களில் பலர் அச்சேவையை விட்டு இக்குழப்பத்தை நீக்க ஈடுபடவேண்டியதாயிற்று.

அறிவு எதற்கும் எல்லோருக்கும் பயன்படக்கூடியது. அவ்வறிவால் ஆராய்ந்தபோது "அறிஞரைவிட அறிவில்லா மக்களுக்கு எவ்வித மனப்பான்மையோ எண்ணத்தின் வலுவோ இல்லை," என்பது தெரியவந்தது.

**எல்லோருக்கும் முடிவு ஒன்றாய் இருக்கும்போது அவனவன் செய்யும் செயல் எப்படி இருந்தாலும் ஏன் அவனுக்கு அறிவுறுத்தல் வேண்டும்?** ஏனெனில் மருந்துவரும் பிணியாளரும் சாகாமலிருக்கப் போவதில்லை. உடலிருக்கும் வரை பிணியில்லா நலத்துடனிருக்க மருந்தும், மருத்துவரும் இன்றியமையாமை போன்றும், எல்லோரும் எத்துறையிலும் சீர்திருத்தமாக வாழ்ந்து துன்பத்தைத் தடுத்துக் கொள்வதற்கே அறிவுறுத்துதல் வேண்டியதாயிருக்கிறது.

**உதாரணம்** :—நமது குடும்பத்தினர் மட்டும் நலமாய் இருந்து, அடுத்த வீட்டினர் நலக் குறைவாய் ஒரு வியாதியால் படும் துன்பம் நம்மைச் சாராதிருக்கிறதா! என்றால் இல்லை. அதுபோன்றே உலகம் முழுமையும் நலத்துடன் இருந்தாலே எல்லோரும் நலமாயிருக்கமுடியும்.

உலக அறிவாளிகளே! நீங்கள் ஒருவனை எண்ணிய மாத்திரத்தில் அவன் பல ஆயிர மைலுக்கப்பால் உள்ள தொலைவில் இருந்தாலும், அவன் அதே கணத்தில் உங்களை எண்ணுகின்றான். அதற்குக் காரணம், எங்கும் நிறைந்திருக்கும் நினைப்பின் பரவுதலில் தன் எண்ணத்தின் வேகம் நொடிக்கு 8,00,000 மைலுக்கப்பால் போகக்கூடியதாய் இருப்பதேயாகும். ஆகையால் சொர்க்கம், நரகம், பிறவி

என்னும் பயனற்ற போதனைகளைப் போதித்து வீண் சுமையை உலக மக்கள் எண்ணத்தில் ஊட்டாதபடி, செயலாலும் எண்ணத்தாலும் உள்ள நன்மை தீமைகளை விளக்கமாக அறிவிக்க வேண்டும். அப்போது அவரவர்கள் செய்யும் செயல்களிலும் எண்ணும் எண்ணங்களிலும் தன்னலத்திற்கும் பொது நலத்திற்கும் எவ்வளவு நன்மை தீமை செய்திருக்கின்றார்கள் என்று அவர்களே உணர்ந்து எல்லோரும் நல்வழிக்குள்ளாவார்கள். அப்படி ஒழுங்காக வாழ்ந்து, பேசி எண்ணுவதற்குப் பொதுமக்களுக்கு இன்றியமையாத தேவைக்கு வேண்டிய அளவுக்கு உணவுப் பொருள் அடிப்படையாக வேண்டியதாயிருக்கின்றது. அதற்கு வேளாண்மை பெருகவேண்டும்.

# 84 குண்டலினி ஞானக்கண்

## நமது உரு

ஆதியும், அகண்ட இருளும், அதன் தோனியும், அருட்பெருஞ் சோதியும் அணுவில் ஒடுங்கி, அணுவாய்ப் பிரிந்து, அகில உலகங்களாய் நிறைந்தபின் — ஆதியால் அகண்ட இருளில், அணுவைத் தரித்து அணுவைத் துளைத்து அதில் உருவானது நாம்.

### 84/1 மனிதனுக்கு வேண்டிய வசதிகள்

உடல் அறிவு நிலைக்கேற்ற தொழிலும், பசி நேரத்திற்கு உணவும், உடல் நலத்திற்கேற்ற இடவசதியும், காமம், பயம், வேறுபாடு இவைகள் ஏற்படாத சூழ் நிலையும் இருக்க வேண்டியது இன்றியமையாதது. இவ்வாறிருப்பின் அங்கு வளரும் குழந்தைகள் முதற்கொண்டு மற்ற எல்லோருக்கும் இரத்த சுத்தமும், முதுகெலும்புத் திடமும், விந்து சுத்தமும் உண்டாகும்.

அன்பு நிறைந்தது அருள் சோரிந்தது
அறிவு விரிந்தது கரு உறைந்தது கனல் மீறியது
கடத்தினுள்ளோர் சிறு இடம் கிடைத்தது
கண்டதும் யான் கோண்டதும் யான் அதனுட்
புகுந்து இருப்பதும் யான் விண்டதும் யானே.

## 84/2 அறுசுவைகள் உடலில் சேருமிடங்கள்

உண்ணும் உணவுகளிலுள்ள அறுசுவைகளும் வாதம், பித்தம், சிலேத்துமமாக வியாபித்து; உப்பு அம்சம் உடலில் நரம்புகளின் மேல் தோல்களிலும்; உறைப்பு இரத்த நாடி சுவாசப் பையிலும்; துவர்ப்பு ஈரல்களிலும்; கசப்பு பித்தப் பையிலும்; புளிப்பு சீரணக் குடற் பையிலும்; தித்திப்பு மூளையிலும் சேருகின்றன. அதுபோல், உடலில் ஏற்படும் அநேக உணர்ச்சியின் வாயிலாக உடலில் வியாபித்து இருக்கும் விந்து உடனுக்குடன் முதுகெலும்புக்கு வந்து சேருகிறது.

## 84/3 அறுசுவைகளின் குணச்செயல்கள்

உடலின் தளர்ச்சி வளர்ச்சிக்கு உவர்ப்பும்; பிடிப்பு, நடை, பரிசம், இவைகளுக்குத் துவர்ப்பும்; கோபம், வீரம், ஆணவம், சாந்தம், குரோதம், அழுகை, துக்கம், சிரிப்பு, பயம், கருணை இவைகளுக்குக் கசப்பும்; சோம்பல், மனச் சலனம், பெரும் தூக்கம் இவைகளுக்குப் புளிப்பும்; உற்சாகம், வேகம் இவைகளுக்கு உறைப்பும்; உயரிய நடையும் பெருந்தன்மையும், அன்பும், ஒழுக்கமும், அறிவின் பெருக்கமும் ஆகிய இவைகளுக்குத் தித்திப்புமாகும்.

## 84/4 எந்த எண்ணமும், செயலும் முதுகுக்குத் தொடர்ச்சி உண்டு

எண்ணம், பார்வை, கேள்வி, சொல், ஸ்பரிசம், தொழில் இவைகளால் ஏற்படும் உணர்ச்சி அந்தந்த நாடிகளில் தாக்குண்டு முதுகெலும்பிற்பட்டுத் தைரியம், பயம், சோர்வு, கருணை, இரக்கம், மோகம், சிற்றின்பம், கவலை, சிந்

தனை, யூகம், வியாதி, பைத்தியம், பரவசம், பேரின்பம், மரணம் ஆகிய இவைகள் ஏற்படுகின்றன.

எவ்வுருவத்திற்கும் ஆதரவாயுள்ள துணிவும், அவ்வுரு வளர்ச்சிக்குக் காரணமான சப்தமும், பரிணாம விளைவுக்குரிய வெளிச்சமும் பிரிக்கமுடியாத நிலையில் எல்லாவுருவங்களிலும் சேர்ந்திருக்கின்றன.

### 84/5 வித்து, விந்து, குண்டலினி

தாவரத்தில் வெளிச்ச சக்தி, ஈர உணர்ச்சியோடு வளர்ந்து, பருவத்தில் வித்தாக வந்து முடிவாகிறது. அது போல் எல்லா ஜீவராசிகளும் அநேகவித நிறமுடைய இரத்த உணர்ச்சியாக வளர்ந்து முடிவில் விந்துவாகிறது. மனித உடம்பில் 13, 18 வயதிற்குமேல் விந்து விளைகிறது. உடம்பில் இரத்த நாடிகளிருக்கு மிடங்களிலெல்லாம் விந்து வியாபித்திருக்கிறது. விந்துவின் உள்ளும் புறமும் இருக்கும் சக்தியே "குண்டலினி" யாகும்.

## 85 புறக்கண், ஞானக்கண்

**சோல் படிப்பு மூச்சால் ஞானம் தேடும் உலகீர்**
**அது நினைவால், கருவால், குருவால், கம்பஉள்**
**வழியால் அம்பலத்தினுள், அறிவின் அனுபவ**
**இன்ப நுகர்ச்சியே பெருமகிழ்வாம் அறிவின் எல்லை.**

அன்போடுகூடிய நம்பிக்கை துணிவு அனுபோகம் ஆராய்ச்சி அறிவு ஆகிய இவை சேர்ந்துள்ளோரிடத்தில் நீதி ஒளிர்கின்றது.

**காணும் புலன்களின் உணர்ச்சியின் வாயிலாக**
**அறிவின் பெருக்கத்தின் விளக்கமே ஞானக்கண்.**

### புலன்கள்

மெய், வாய், மூக்கு, செவி, கண், (பிடரி, நெற்றி, உச்சி) ஆகும். வளரும் உணர்ச்சியுள்ள ஓர் அறிவு உயிர்கள் தால

தாவரத்திலிருந்து, நகர நுகர உணர்ச்சியுள்ள ஈரறிவு உயிர்களாகி; மூக்கு, காது, கண், நினைவு வன்மை, தெளிதல் ஆகிய புலன்களின் கூடுதலுக்குத் தக்கவாறு மூவறிவு நாலறிவு ஐயறிவு உயிர்களாகி மேம்படுகின்றன. இவைகள் அறியக்கூடிய ஆற்றலிருந்தும் அறிந்தவைகளை வெளியிட முடியாததால் தாவரமாகவும், மற்ற உயிரினங்களாகவும் இருக்கின்றன. யாவுமறிந்து யூகிக்கவும், வெளியிடவும், ஆட்சி நடத்தவும் வல்லமையோடு முடிவாய் அமைந்துள்ள பரு உடலைக் கொண்டவனே மனிதன். மூளைக்கு வேண்டியது அவயவங்களும் புலன்களுமாம்.

உறுப்புக்களும் புலன்களும், இருந்தும் குழந்தைகளுக்கு அறிவின் வளர்ச்சி குறைவாக இருக்கின்றது. தன் புலன்களின் உணர்ச்சியையும், அறிவையும், மது உண்டு தானே கெடுத்து மயக்கிக் கொள்வோர் குடிகாரர்கள். உடம்புக்குள் நோவு இருந்தும் வெளியில் தொடுகை உணர்ச்சியை அறிய முடியாது உடல் கெட்டு இருப்போர்கள் தொழு நோயாளர்கள். உறுப்புக் குறை யுள்ளோர்கள் நொண்டி, முடவன், மூக்கறையன் முதலாயினோர்.

உண்ணும் உணவாலும், நுகரும் நறுமணத்தாலும் உடலின் வளர்ச்சி தளர்ச்சி இருந்தும் சுவை நறுமணங்களை நுகர நாக்கு, மூக்கில் 'உணர்ச்சியில்லாதவர்கள் சுவை நறுமணம் ஆகிய இவற்றை உணரும் உணர்ச்சி யற்றோர்கள் ஆவார்கள். தம் கருத்தைச் சொல் மூலம் அறிவிக்கவும் கேட்கவும் முடியாதோர்கள் ஊமைகள்.

தம்முன் ஓசை இருந்தும் வெளி ஓசையைக் கேட்கக் காதில் உணர்ச்சியற்றவர்கள் செவிடர்கள்.

தம் எதிரில் சென்றிற வெளிச்சம் தெரிந்தும் வெளி உருவத்திலுள்ள வெளிச்சத்தைப் பார்க்கக் கண் உணர்ச்சி யற்றோர்கள் குருடர்கள்.

புறத்தே காணப்படும் உறுப்புக்களும் புலன்களும் நன்றாக இருந்தும் அறிவின் பெருக்கம் இல்லாதோர்கள் (பாமரர்கள்) ஒன்றும் அறியாதவர்கள்.

புறத்தே காணப்படும் உறுப்புகளும் புலன்களும் நன்கு இருந்தும் அறிவுகெட்டோர்கள் வெறியர்கள்.

புறத்தே காணப்படும் உறுப்புகளும் புலன்களும் அறிவு மிருந்தும் ஒரு நிலையில் இல்லாதவர்களும், பெரும் தீனி உண்போர்களும், காம போகிகளும், மூட பக்தர்களும், யோகிகளும், அறிவாளிகளும் இன்னோரன்ன பிறரும் எதிலும் சரிவர நடந்துகொள்ள உறுப்புக்குறைகள் எச்சரிக்கின்றன.

ஒவ்வொரு துறையிலும் எல்லா மக்களும் ஒழுங்காய் நடக்கவும் நலமாய் வாழவும் முயற்சியோடு சிந்திப்போர்கள் ஆராய்ச்சியாளர்கள்.

புறத்தே காணப்படும் உறுப்புக்களாலும் மெய், வாய், மூக்கு, செவி, கண் ஆகிய புலன்களின் வாயிலாகவும் அனுபவிக்கும் இன்பத்திற்கும் மேலானது, ஞான குருவின் தொடுகையால் பிடரி, நெற்றி, உச்சி ஆகிய உறுப்புக்களில் ஏற்படும் உணர்ச்சியின் இன்பமாகிய பேரானந்தம்; பேரின்பத்தால் எல்லாம் அறியக்கூடிய அறிவின் பெருக்கத்தின் முடிவின் விளக்கமே ஞானக்கண்.

## 86 கண்கள்

ஒரு மனிதனின் கண்கள் புருவங்கள் இமைகளையும், பார்வையையும் நோக்கி, அம்மனிதனின் நோக்கம் செயல் நடையுடை பாவனைகள் இன்ன இன்ன விதமாகத் தானிருக்குமென்று யூகித்து நிர்ணயிக்கலாம்.

ஒருவன் தன் விருப்பத்தைத் தன் கண்களின் பார்வை மூலம் சைக்கினையாய் எதிரிலிருக்கும் மற்றவர்க்குத் தெரிவிக்கலாம்.

பசியோடிருக்கும் மனிதனும் பட்டினியாயிருக்கும் வேங்கையும் எதிரெதிரே சந்தித்தால் இமையா வல்லமையுடைய கண்களே வெற்றிகொள்ளும். கூர்ந்த பார்வையால் எதிரியை வெல்லலாம், அநேக வியாதியையும் நீக்கலாம்.

கண்களை இமையாதிருக்கச் சிறிது சிறிதாகப் பழகி வந்தால் நாளடைவில் இருதயமும் மூளையும் திடப்படும். வீண் பயம், மனச்சலனம் ஏற்படாது.

சூரியன், விளக்கு வெளிச்சம், அல்லது வேறு பொருள்களை நெடு நேரம் கூர்ந்து பார்ப்பதும் முறைத்துப் பார்ப்பதும் கூடாது. அவ்வாறு பார்ப்பதால் கண்களின் ஒளி குன்றிப் பார்வைக் குறைவு ஏற்படும்.

கடவுளைப் பார்ப்பதாக எண்ணிக் கண்களைச் சுற்றி யுள்ள நரம்புகளை விரல்களால் அழுத்தி, அந் நரம்புகளில் விரைவாக ஓடிக்கொண்டிருக்கும் (குருதியை) இரத்தத்தைத் திடீரெனத் தடைப் படுத்துவதால் தெரியும் செஞ்சுடர் வெளிச்சத்தைக் கண்டு, கடவுளைப் பார்த்துவிட்டேன் என்று சொல்லிக் கண்களை இழந்தவர்கள் பலர்.

கண்களின் பாவையில் நினைவை வைத்துப் பழகுவர் அநேகர். இவ்வாறு செய்பவர் முறை தவறினால் கண்களில் நோவும் தலைவலியும் ஏற்படும். சிலர் கண் விழிகளை மேலேற் றிக் கடவுளைப் பார்க்கப் பயிற்சி செய்வார்கள். இது தவறான முறையாகும். ஒவ்வொருவரும் கண்களைப் பாதுகாத்துக் கொள்ளுதல் மிக மிக இன்றியமையாததாகும்.

பிறப்பு முதல் இறப்பு வரை மாந்தரின் உறுப்புக்களில் அளவில் கூடுதல், குறைதல் அல்லது வளர்ச்சி, தளர்ச்சி இல்லாத உறுப்பு கண்ணின் கருமணி அல்லது பாப்பாவைத் தவிர வேறில்லை. கண்களுக்கு நிழற் சாயலுமில்லை.

## 87 நெற்றிக் கண்

நெற்றிக்கு நேர் உள் நின்றதும்
நேரான உட்பாறை யுடைத்ததும்
நெருப்பாறு மயிர்ப்பாலம் கடந்ததும்
நெஞ்சில் யமவாதை நீக்கியதும் நாமே! நாம்

நமது இரண்டு கண்களுக்கும், மூக்கின்மேல் சுழி முனைக்கும் புருவங்களின் இடை நடுவே சிறு ஊசித்துவாரத்தில் பத்தில் ஒருபாக அளவு மிக நுட்பமாக இருக்கும் துவாரத்திற்கு "நெற்றிக் கண்" என்று பெயர். இதை மிக இலேசான சவ்வு மூடிக்கொண்டிருக்கிறது.

**கடத்திலோர் இடத்தில் கறந்த ஞானப்பாலை**
**கனலான மூலக்கனலால் மூட்டி மூட்டிக்**
**கம்ப நுனிவழியாய்க் கண் மூக்கு மத்தியில் ஊட்டி ஊட்டிக்**
**கருத்திற்கிசைந்த சுவையைக் கபாலம் ஏற்றி ஏற்றித்**
**தண்மணிபோல் ரசமணி திரளத் திரளக்**
**கண்ணுக்குத் தெரியாத திரை ஆறும் தன் திறமையால் திறக்கத் திறக்கத்**
**தன் காரணத்தைத் தானே தெரியலாமே.**

# 88 நெற்றிக் கண்ணைத் திறக்கும் முறை

*நெற்றியும் கடந்தேன்; அப்பாலுக்கப்பாலும் சென்றேன்; அங்குள்ள அதிசயத்தைக் கண்ணறிவால் கண்டேன்; கண்டு, கண்டு விண்டேன்; விண்டு, விண்டு அதனுட் புகுந்து நின்று ஆராய்ந்தபோது அறிவு தெளிந்து நான் என்ற தன்னிலை அறிந்தேன்.*

இடுப்புக்குக் கீழ் சிறுநீர்த் துவாரத்திற்கும், மலத் துவாரத்திற்கும் இடையேயுள்ள மூலாதாரத்தில் ஊறும் விந்தாகிய குண்டலினி சக்தியை முதுகந்தண்டு எலும்புக்குள் உள்ள மிகச் சிறிய துவாரத்தின் உள்ளே கூடிப் பிடரிப் பின்புறத்திலிருந்து **நெருப்பாறு மயிர்ப்பாலம்** என்னும் ரம்பப் பற்களைப்போல் சேர்ந்துள்ள சிரசின் நடு உச்சி மண்டை ஓட்டுக்குள் உள் வழியாகக் குருவின் பரிச உணர்ச்சியாலும், நுட்ப விவேகத் திறமையாலும், குண்டலினியை எழுப்பிக்கொண்டு வந்தால் **நெற்றிக்கண்** திறக்கப்படுகிறது.

இந்த இடத்தை வணங்காதவர்கள் யாருமே இல்லை. இந்த இடத்தை வணங்குகின்றோமென்று அவரவர்களுக்குத் தெரியாமலேயே சலாமென்றும், வந்தனமென்றும், நமஸ்கார மென்றும், கும்பிடுகிறேனென்றும் சொல்லியும்; தங்கள் தங் கள் மத ஆசாரங்களுக்குத் தக்கபடி பொட்டிட்டும், விபூதி அணிந்தும், நாமம் இட்டும் தங்கள் தங்கள் கையையும், சைகையையும், நோக்கங்களையும் காட்டுகின்றனர். அரசாங் கத் தன்மை பிறப்பதும், தடுக்க முடியாத வீரமுங் கோப மும் பிறப்பதும் அங்கிருந்தேயாகும். மிகுந்த கோபம் ஏற் படும்போது தத்தம் மூக்கு முனையைப் பார்த்தால் சாந்தம் ஏற்பட்டு விடும்.

ஒரு மனிதனுக்கு உடம்பில் சூடு இல்லாமற்போனால் முன் சொன்னபடி நெற்றிக்கண்ணை ஞாபகத்தில் நினைத்தால் சூட்டை உற்பத்தி செய்துகொள்ளலாம். இந்த இடத்தில் பிறக்கும் சொற்கள் சமீப காலத்தில் பலித்தே தீரும். மிகப் பொல்லாதவனையும் அவன் நல்லவனாக வேண்டுமென்று அந்த இடத்திலிருந்து நினைத்தால் அவன் அப்பொழுதோ, அண் மைக் காலத்திலோ நல்லவனாகியே தீருவான் என்பது திண் ணம். ஆகையால்தான் இந்த இடத்திற்கு **ஆக்கினை ஸ்தானம்** என்று பெயர். ஆணவமழிவதற்கும் ஆணவம் உண்டாவதற் கும் உரிய இந்த இடத்தை நல்ல நினைவுகளுக்கு உபயோகித் துக் கொள்ளுங்கள்.

உலகில் பலர் பலவிதமாகச் சொல்லுவார்கள். அனுபவ மில்லாதவர்கள் சொற்களைக் கேட்பதைவிட, அனுபவ முடையவர்கள் சொற்களைக் கேட்பது உங்களுக்கு நல மாகும்.

நாயகன் செயல் நாயகன் செயலென்று நழுவ விடாமல், நல்லறிவாய் நாட்டம் கொண்டீர்களானால் நல்ல இடத்தில் நாயகனும் நாமும் ஒன்றே.

1. குண்டலி சக்தியின் பிரதிபலிப்பு நம் தோற்றத்தில் பார்ப்பதென்றால், கண்ணுக்கு நேரே நான்கடி தூரத்தில் ஒரு நாக்குப்பூச்சி அளவில் சிறு வளைவுகளும் சிறு கால்

களைப் போன்ற கிளைகளும் 3½ அங்குலம் முதல் 4 அங்குல நீளத்தில் ஒன்று அல்லது இரண்டு தெரியவரும். இதில் சில பிரகாச அணுக்கள் கசகசா அளவில் இணைந்திருப்பதையும் பார்க்கலாம். இவை ஒரே நிலையாய் நிலைத்து நிற்கா. மேல் நோக்கிச் சென்று கொண்டே இருக்கும். தோன்றுவதும், பின் மறைவதும் இதன் தொழில். பக்தர்கள் யாவரும் இதைப் பார்க்கலாம். இது அருவத் தோற்றமேயல்லாது உருவத் தோற்றமாகாது.

2. இதைத் திறப்பதற்கு அறிந்த ஞானசிரியரோடு இருபது வயதிற்கு மேல் அறிவோடு விந்தும், தன் ஞாபகமும் கலந்தால்தான் முடிகிறது. இந்தக் கண் திறந்திருந்தால் அறிவிற்கு உணர்ச்சி நன்றாய்த் தெரியும். இதை வாசி (பிராணயாமம்) என்ற மூச்சுப் பயிற்சியாலும் மற்ற யோகங்களாலும் திறக்க முடியாது. நெற்றிக்கண் திறந்தபின் பிடரிக் கண்ணிலும் உச்சிக் கண்ணிலுமுள்ள வலம்புரிச் சுற்றும் ஆறுதாரத்தின் அறிவுப் பெருக்கமும் சோம வட்டமும் நன்றாய்த் தெரியும்.

மூட்டைப்பூச்சியினுடைய இரத்தம் கடுமையான குளிர் நோயைப் போக்குமானாலும் அதன் துர்நாற்றமும் தொந்தரவும் பொறுக்க முடியாதவை.

உலகத்தில் மிகுதியான குணங்கள் உள்ளன. அந்தக் குணங்களுக்குரியவர்கள் பலராவர். அவர்களை நீங்கள் குறை சொல்லாமல் அவர்களிடத்தில் உள்ள நல்ல குணங்களை மட்டும் கிரகித்துக்கொள்ளுங்கள்.

கடலில் உள்ள மீனானது கடல் உப்பில் சாராததுபோல் உலகத்திலுள்ள நல்லடியார்களாகிய நீங்கள், உலகத்திலுள்ள தீய செயல்களில் சாரவே மாட்டீர்கள்.

## 89 வயதும், அறிவும், மூளையும்

உடல் முழுவதும் கொழுப்பு விரவி இருக்கும்போது, உடல் முழுமையும் உரோமங்கள் மிகுதியாகவும், தலையில்

உரோமங்கள் குறைவாகவும் இருப்பதோடு, மூளையின் எடை குறைவாகவும் இருக்கும். அப்போது கடினமான வேலைகளை மிகுதியாகச் செய்ய முடிவதும், நாளடைவில் கொழுப்பு மூளையோடு சேர்ந்து மூளை பெரிதாகும்போது நுட்பமும் யூகமும் மிகுந்து பலர் செய்யக்கூடிய வேலைகளை ஒருவரால் செய்யக்கூடிய விஞ்ஞான அறிவு ஏற்படுவதும் ஆகும்.

முதிர்ந்த வயதும், அனுபோக அறிவும், சிந்தனையும் ஆராய்ச்சியும், படிப்பும் ஆகிய இவற்றின் திறமைக்குத் தக்கவாறு மூளையின் நிறை (weight) மிகுதியாவதோடு ஆருரதாரத்திரையும் பெரிதாகி, அறிவுத் தெளிவு பிறக்கும்.

## 89/1 உடலுக்கும், உலகத்திற்கும் முதன்மையானது மூளை

எவ்விதச் சிந்தனையும் மூளையில் எண்ணம் வைத்துக் கவனிப்பதால், உடலிலுள்ள சத்தின் பகுதி மூளையில் சேர்ந்து, மனித மூளை பெரிதாகும். பிறந்த குழந்தைக்கு வயது வளர வளரச் சூழ்நிலைக்குத் தக்கபடி அனுபோக அறிவு கூடுகிறது. 18, 20, 25-வயதுக்குமேல் மிகுதியான மூளையும், ஆருரதாரத்திரையும், திடமும், வலுவும் ஏற்படுகின்றன.

மிகுந்த ஆராய்ச்சியும், நுட்பங்களுமிருந்தால் இத்திரைகளின்மேல் மாசு படாமல் இருக்கும். இந்தத்திரைகளின் பயன், சிறிய பொருளைப் பெரிதாகக் காட்டும் பூதக் கண்ணாடியைப் போன்று, அறிவின் திறமையை விளக்கிக் காட்ட இத்திரைகளின் பிரகாசம் பயன்படுகிறது. சுமார் 40-வயதுக்குமேல் தான் மிகுந்த அறிவும் திடமும் உண்டாகிறது. இதற்குக் காரணம் அனுபோகம் மிகுதியாகிவர இவ்வளவு காலம் செல்லுகிறது. எவ்விதத் துறையிலுள்ள அறிவாய் இருப்பினும் சரியே; 40-வயதுக்குக் கீழ்ப்பட்டவர்களின் அறிவு எவ்வளவு அதிகமாக அப்பருவத்திலேயே அவர்கட்குத் தெரிந்த போதிலும் அவர்களுக்கே 40-வயது ஆகிய

தன்பின் அவர்களிடம் கேட்பீர்களானல் அதன் உண்மையை அவர்களே தெரிவிப்பார்கள். நிலைப்பாடும், அமைதியும், தெளிவும், நுட்பமும் மிகுதியாவதற்கு வயது 40 செல்லுகிறது.

20-வயதுக்குக்கீழ் விந்தும் திடமிராது, அறிவும் பெருக்கமிராது. பேரறிவு இல்லாதிருந்தால் மூளை நிறை (Weight) மிகுதியாக இராது. அதுபோன்றே, முதுகெலும்புள்ள சீவராசிகளின் செயலின் திறமைக்குத் தக்கவாறு மூளையின் நிறை மிகுதியாகவே இருக்கும்.

> அருளைத்தேடி யலைந்து, குருவை யடைந்து
> கன்லறிந்து நுனியறிந்து நோக்கறிந்து,
> நுண்ணுள்புக அறிந்து, புகுந்து நோக்க
> நோக்க நோக்கிய நோக்கமும், நோக்கத்தின்
> நுண்ணுள்ள நுண்ணிய நோக்கமும் நுண்
> பெரும் ஏக்கந்தான் ஏங்கியது என்றறிவீர்.

## 90 ஆருதாரம் (ஆறு நிலைகள்)

> மூலாதாரத்தில் விழித்தெழுந்த பொருள்
> ஆருதாரத்தில் அழுத்தும் அழுத்தத்தால் (ஏற்பட்டதே)
> ஆனந்த அறிவின் என் அனுபோகச் சொல்.

இது மூளைக்குமேல், மண்டை ஓட்டிற்குள் ஆறு திரையும் சேர்ந்த சவ்வு. இது ரோசா மலரின் இதழுக்கும் மிக இலேசாக 20½ அங்குலம் முதல் 25½ அங்குலச் சுற்றளவில், 8½ அங்குல நீளமும், 5½ அங்குல அகலமுமாக ஆமை முதுகைப் போலிருப்பதோடு, இலைகளில் படர்ந்திருக்கும் நரம்புகளைப்போல் இச்சவ்வில் மெல்லிய நரம்புகள் 6 பின்னல்களாய் இருக்கிறது. இது ஒவ்வொன்றும் ஒவ்வொரு உணர்ச்சியை அறியக் கூடியதாயிருக்கிறது. முதற்பின்னல்: உடல் பரிசம் அறியக்கூடியது. அது கெட்டுவிட்டால் உடலில் வியாதிகள் ஏற்படுவதோடு உடலில் பரிச உணர்ச்சியும் இல்

லாமற் போய்விடுகிறது. இரண்டாவது பின்னல்: சுவை அறியக்கூடியதாயிருக்கிறது. அது கெட்டுவிட்டால் சுவை அறிய முடியாது. மூன்றுவது பின்னல்: வாசனை அறியக்கூடியதாயிருக்கிறது. அது கெட்டுவிட்டால் வாசனையின் உணர்ச்சியை நுகரமுடியாது. நான்காவது பின்னல்: ஒலி, பரிசம் அறியக்கூடியதாயிருக்கிறது. அது கெட்டுவிட்டால் காது செவிடாகிவிடும். ஐந்தாவது பின்னல்: பார்வையின் உணர்ச்சியை அறியக் கூடியதாயிருக்கிறது. அதுகெட்டுவிட்டால் கண் பார்வை தெரியாமல் குருடாய் விடுகிறது. ஆருவது பின்னல்: யூகம், ஞாபகம், அறிவு இவைகளின் பரிச உணர்ச்சியை அறியக் கூடியதாயிருக்கிறது. அது கெட்டுவிட்டால் மயக்கமும் பைத்தியமும் ஏற்படுகிறது. இந்த ஆறு பின்னல்களும் சேர்ந்திருக்கும் சவ்வுக்குத்தான் ஆருதாரம் என்று பெயர். மூலாதாரம் (மூலம்), சுவாதிஷ்டானம் (கொப்பூழ்), மணிபூரகம் (மேல்வயிறு), அநாகதம் (நெஞ்சம்), விசுத்தம் (மிடறு), ஆக்ஞேயம் (புருவநடு), ஆகிய இந்த ஆறு இடங்களில்தான் ஆருதாரங்களிருப்பதாகக் கற்பனையாக எண்ணி, அவ்விடங்களில் நெடுநாள் எண்ணத்தை வைத்துப் பழகிவருவதால், சக்கரங்களும், பல நிற வர்ணங்களும் தோன்றுகிறதென்று சொல்வதெல்லாம், அவர்களின் அறிவு மயக்கமும், எண்ணத்தின் பிரதிபலிப்புமே தவிர, அவ்விடங்களில், சக்கரங்களோ, அட்சரங்களோ, பலவகை நிறங்களோ ஆருதாரமோ இல்லை.

நம் கன்னத்தைத் தொட்டு முத்தமிட்டுக்கொள்ளும் உணர்ச்சியால் அன்பு, உடன்படுதல் ஆகிய ஒற்றுமையும் மோவாய்க்கட்டையையும், தாடியையும் தொட்டுத்தாங்கும் உணர்ச்சியால் சாந்தமும் அமைதியும்; மீசையைத் தொட்டு முறுக்கிவிடும் உணர்ச்சியால் மூர்க்கமும் வீரமும் கோபமும் ஏற்படுவதுபோல்; பிடரி, நெற்றி, உச்சி இவைகளினுள் நமது விந்து என்னும் குண்டலினி உணர்ச்சி பட்டவுடன் முறையே ஞாபகம்; ஆராய்ச்சி; நிதானம், வீரம், தைரியம்; பேரறிவு, பேரின்பம் ஆகிய இவை நாளுக்கு நாள் மிகுதியாகின்றன.

பெற்றவரும் தாயல்ல
பாலூட்டியவரும் தாயல்ல
வளர்த்தவரும் தாயல்ல
அறிவை அறிவித்தவரே தாய்.

குண்டலினியால் பேரின்பம் பெற்று அனுபோக முறைப்படி கவனித்துவந்தால், ஐந்து அல்லது பத்தாண்டிற்குள் தன்னுடைய வயதைக் கூட்டிக்கொள்ளத் தனக்கு வலிமை ஏற்பட்டு விடுகிறது.

சிரசாசனம் செய்வதால் அறிவின் வளர்ச்சிக்குத் தடையும், மரணத்துன்ப மிகுதியும் ஏற்படுவதால், இவ்வாசனம் செய்யாதீர்கள்.

அறிந்தறிந்து விடுவது ஞானம்
அறிந்தறிந்து கொள்வது ஞானம்
அறிந்தறிந்து அறிவது ஞானம்
அறிந்தறிந்து தெளிவது ஞானம்
அறிவதெங்கே? அறிந்ததெங்கே?
ஆக்கினையும் கடந்து ஆருதாரத்தில்
அழுத்தும் உணர்வின் கண்ணால்.

காம விளைவு முதுகால்,
காமத்தின் எண்ணம் கண்ணால்,
காம அடக்கம் நெற்றியில்,
காம முடிவு உச்சியில்.

## 91 உணர்வு (குண்டலினியின் தவம்)

"அருளோடு நிறைந்ததெது அதுவே உடலோடு நிறைந்த கரு; கருவோடு நிறைந்ததெது அதுவே உடலோடு நிறைந்த நம்முள்ளுள்ள நினைவு. நினைவோடு நிறைந்ததெது அதுவே பேரின்பம் தருமுணர்வு. உணர்வே குண்டலினி.

சுருதி, நூல், சாஸ்திர, வேதமதங்க ளெல்லாம்
சுருக்கிச் சொல்லொன்றில் அடக்கிச் சுழிமுனையும்
கடத்தி
சும்மா இருக்கும் சுகமே உணர்வு, உணர்வே இன்பம்.

அதைச் சொல்வதென்றால் சொல்லும், சொல்லுள்ளும், சுகமும், மணமும், சுழலும் சூழ்ந்து சொல்லொண்ணாத சொல்லுக்குள் உள்ள சுகமாம் சுகம் என்று சொல்லலாம். ஆகையால் உணர்வால் சுகத்தைப் பெருக்கிக்கொள்ளுங்கள்.

**தித்திக்குந் தேன் இருக்குமிடந்தேடி ரீங்கார வண்டு செல்வதுபோல் அறிவுடையோர் உயர்ஞானப் பேரின்பக் குண்டலினி உயிர்ப்பொருளாகிய [உணர்வைத் தேடி அடைவர்.**

ஆகையால் உணர்வால் இன்பத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள். உருக்கிரும்பை உருக்கத்தால் உருக்கி, உருக்கி, உருவாக்கி, உழுதிட்டு, உள்விதைத்த உண்மை வித்தே கருவாகும். கருவின் கனமே உணர்வாகும். உணர்வின் பொருளை உச்சியில் உணர்ந்தோர்க்கு, ஒரு குறைவும், ஒரு போதும் இல்லவே இல்லை.

உபதேசம் பெற்றவர்களுக்கு நெற்றியில் சிறு பாரம், துடிப்பு, அரிப்பு, கூச்சம், சிறு நோவு, ஒரு பாதரச துளி போன்ற கனம் இருப்பதோடு, நெற்றியில் எண்ணெய்ப்பசை இருக்கும். இவைகள் ஆறு அல்லது ஏழு நாட்களுக்குப் பிறகு அதிகமாய்த் தோன்றும். பெண்களுக்கு மேற்கண்டவைகளோடு 4-மாதக் கர்ப்பிணிக்குண்டான மயக்கைப் போன்றிருக்கும். மேலும் பத்து மாதத்திற்குமேல் இரண்டாண்டிற்குள் மாத விடாய் நின்றுவிடும். கருத்தரிக்காது.

## 91/1 உணர்வை கவனிக்கும் முறை

(முதல்படி அல்லது ஏறுபடி)

சிறு துவாரத்தில் கூர்ந்து பார்ப்பதுபோன்றும், சிறு கடிகாரங்களைச் செப்பனிடுவது போன்றும், சிறு ஊசியில் நூல் கோர்ப்பது போன்றும் கவனித்தல் வேண்டும். உடல் அயர்ச்சியாயிருப்பினும் தைரியம் அதிகமாகயிருப்பதோடு, புதுக் கலியாணம் முடிந்த மறுநாள் உள்ள வியப்பைப்

போன்றும் இருக்கும். உடம்பில் யாதொரு பலமும் கெடா மல் இயல்பான நிலையிலிருந்து, உணர்வைக் கவனிப்பதோடு ஓசை, ஒலி, தூக்கம், உண்ணும் உணவு, நடை ஆகியவற் றையும் பத்து நாளைக்கு விடாமுயற்சியாய் உபதேசம் பெற்ற இடத்திலிருந்தே கவனிக்கவேண்டும்.

மெர்க்குரி (பாதரச) விளக்கு வெளிச்சத்திலும், உற் சாகத் தோற்றப் பார்வையிலும், வெயிற்காலங்களிலும், சத் தான ஆகாரங்களிலும், பௌர்ணமி காலங்களிலும், நல்ல இனிய இசைகளிலும், அடிக்கடி முகச்சவரம் செய்து கொள்வதிலும் உணர்வு தானாகவே மிகும்.

படுக்கையில் இருந்து கொண்டு தவத்தை நன்றாய்க் கவனித்து அப்படியே படுத்துத் தூங்கிவிடக்கூடாது. அப் படித் தூங்கினால் விந்து வெளிப்பட்டுவிடும். அதனால் தவத் தைவிட்டு எழுந்து, சிறிது நேரம் உலாவிப் படுத்தால் விந்து வெளிப்படாது. படுத்தபடியே தவத்தைக் கவனித்துத் தூங்கி விட்டாலும் விந்து வெளிப்படாது.

**உந்திக்கு நேரே உள்மூலம் தன்னை ஊன்றி ஏற்றி**
**உள் சுழிமுனையில் பாய்ச்சினையாகில்**
**உள்ளம் கசிந்து தெளிந்து உச்சித்திறந்து பேரானந்தம்**
**உருவை நீ பார்.**

## 92 உணர்வின் இன்பம்

மின் விளக்கினுள்ள வெளிச்சம் போன்றும், தண்ணீ ரில் தெரியும் சூரிய பிம்பத்தைப் போன்றும், சோப்பு நுரை உடம்பில் கரைவது போன்றும், அக்கினித் திராவகத்தில் பித்தளை பொங்குவது போன்றும், கண்ணடிக்குள் உள்ள காற்றுக்குமிழி போன்றும் இன்பம் இருக்கும்.

உருக்கிரும்பைத் தட்டினால் ஓசையுடன் அதிர்ச்சி ஒன்று கிளம்புவது போன்று உணர்வில், ஓசையின்றி, அதிர்ச்சியில் நல்ல இன்பமும், சுகமும் சுத்திசெய்த இடம், முகம், நெற்றி இவற்றில் மிக உற்சாகமும் இருக்கும். இருட்

டுக் காலங்களில் சிறு மழை பெய்து கொண்டிருக்கும்போது தூரத்தில் தெரியும் விளக்கைச் சுற்றியுள்ள சுடரைப் போன்று அறிவின் உணர்ச்சிக்கு நெற்றியில் சுடரும் இருக்கும்.

**காது கேட்கக் கை தாளம் போட**
**கண் பார்க்க நாக்குச் சுவையறிய**
**மூக்கு வாசனையறிய உடல் உணர்ச்சியறிய**
**கவி நடிப்பின் திறமையை அறிவறிய**
**இதுபோன்றே முன் சம்பவங்களை ஞாபகமறிய**
**இவையாவின் சுகத்தோடு உணர்வின் ஆனந்தச்**
**சுகப்பெருக்கே பேரானந்தம்.**

### 92/1 உணர்விற்கு உதவாதவைகள்

கெட்ட நெய், சுண்ணும்பு நெடி, வெங்காயவாடை இவைகள் கூடாது. கரும்புச்சாறு, அன்னுசிப்பழம், புதுப் பானைநீர், மாதுளம்பழம் இவைகளை நெற்றியை நோக்கிச் சாப்பிட்டால் சீதளம் உண்டாகும்.

## 93 இறங்குபடி (இரண்டாம் படி)

நூல் வழியாக நீர் இறங்குவது போலவும், கால் திமிர் பிடித்தது போன்றும், எறும்பு ஊறுதல் போன்றும், சூடான வெப்பத்தைப் போன்றும் உணர்ச்சி இருக்கும். இடுப்பு நோவு, மிகுந்த பசி, சிறு கபம், மிகுதியான கனவு, அடிக்கடி தலைப் பாரம் இருக்கும். மூல வியாதி இருந்தால் தோன்றி மறையும்.

### 93/1 இறங்குபடி கவனிக்கும் முறை

இறங்குபடியில் நன்முய்ச் சாப்பிட்டு உறங்குவதுடன் வசதி யுள்ளவர்கள் சிற்றின்பம் செய்துகொள்ளுக. இதைச் சரிவர நன்முய் ஆறு நாள் கவனித்து இவ்விடம் *சுத்தி செய்து கொண்டவர்கள், தம் தம் வேலையுடனே உணர்வும் நன்முயிருக்க அறிவார்கள். உணர்வுக்கு யாதொரு தடையு

* 97வது அத்தியாயம் பார்க்க.

மில்லாமல் அதன் போக்குவரத்து இயல்பாகி விடுவதால், உடல் இருக்கும் வரை மாயை, மரண பயம் ஆகிய இவை இல்லை. உணர்வின் விளைவு மிகுதியால் ஒளி மிகுந்து அப் பொருளின் தன்மையாகவே உடல் முழுதும் மாறுதல் அடைந்து விடுகிறது.

# 94 தவக்கனலும் தணிக்கும் முறையும்

வேகவைத்த கிழங்கின் ஆவியைப்போன்று உடம்பில் வெப்பம் இருக்கும். கனல் மிகுதிப்பட்டால் நாக்குத் தடித் தும், சிறுநீர் சூடாயும், சிவப்பாயும் இருக்கும். அப்படி இருந்தால் குளிர்ந்த நீரைச் சாப்பிட்டால் தணிந்துவிடும். தவத்தை அனுசரிக்கும் முறை தெரியாமல் கனல் அதி கரித்துவிட்டால், நல்ல காற்றுள்ள இடங்களிலிருப்பதும், செப்புப்பானை நீர் சாப்பிட்டுக் கொள்வதும், திருப்தியாய் ஆகாரம் சாப்பிட்டுக் கொள்வதும், நாவை மேல் ஒட்டாத படி வைத்துக்கொள்வதும், கனல் தீரும்வரை தண்ணீரில் குளித்துக் கொள்வதுமாயிருந்தால் மிகுதியாகாது, அளவா யிருக்கும். நீர்ச்சக்தி உடம்பினர் அதாவது தடித்த சரீர முள்ளவர்கள் 15 நாளைக்கு ஒருமுறை போகம் செய்து கொள்ளுதல் நல்லது.

தவக் கனல் உண்டாகும்போது பிடரி மிகச் சூடாக இருக்கும். உணர்வு எப்போதும் மாறுமலிருக்கும். அதிகப் பேச்சால், பேசா மௌனத்தால், நாடோறும் போகம் செய் தலால், அறவே போகம் இல்லாதிருத்தலால், காற்றில்லா இடங்களில் இருத்தலால், சவரம் அடிக்கடி செய்துகொள் வதால், மிகப் பசியாய் இருத்தலால் நெடுநாள் குளிக்காதிருத் தலால் இக்கனல் அதிகமாகும். இது எவ்வளவு மிகுதியாகி விட்டாலும் உயிருக்கு ஒருவித அபாயமும் கிடையாது. சில நீர்ச்சக்தி உடம்புகளுக்குச் சிறு தொந்தரவு இருக்கலாம். அத்தொந்தரவால் சரீரத்திற்குத் தீங்காயுள்ள கெட்ட சில அணுக்கள் வெளியேறிவிடுகிறது. இதனால் அனேக வியாதி கள் தீருகின்றன.

ஒரு பெரும் பாண்டத்தில் அடைத்த நீரில் ஒரு சொட்டுக் குறைந்தாலும் குறைவே போன்று, அனுபவமில்லாது தன் வல்லமையால் சொல்லும் சொற்கள் எப்பொழுதும் நிறைவாகா.

இருகண் நேர்விழித்து ஒரு கண்ணினுள் நிலைத்து
முக்கண்ணின் கருத்தும் கருவும் முடிமேல் தரிக்க,
தரித்த பயன் என்னிலை நான் அடைந்தேன்.

# 95 பிடரிக் கண்

பின் மூளையின் நடு இடமே பிடரிக்கண். இந்த இடத்தில் முதுகெலும்பின் உள் வழியாய் நெற்றிக்குக் கருவாகிய விந்து எனும் **குண்டலினி** வரும்போது இந்த இடத்தை உராய்ந்து கொண்டு வருவதால், அங்கு ஏற்படும் வெப்பத்திற்குச் **சோமவட்டம்** என்று பெயர். இப் பின் மூளையில் தான் நாம் கேட்டதும், பார்த்ததும், நினைத்ததும், நுகர்ந்ததுமான எல்லாப் பதிவுகளும் அணுக்களாகப் பதிந்து இருக்கின்றன.

# 96 உச்சிக் கண்

தென்னாடும் வடநாடும் கண்ணிடை நடுநாடும்
கீழ்மூல நாடும் அறிவமுத நாடும், கூடிக்குலாவும்
நன்னாடு அந்நாடு என்னாடு சென்னி நாடே.

தொட்டேன் தொட்டுத் தொட்டு எல்லாம்
விட்டே விட்டேன் பின் ஒன்றைத் தொட்டேன்
அதை விடமுடியா மேல்நிலை சென்றேன்
அது எது? அதுவே என்னிலை உணர்வு.

தலைக்குமேல் நடு மண்டை ஓட்டிற்குள்ளே அமைந்துள்ள இடமே உச்சிக்கண். நெற்றிக்கண் வழியாய் விந்தாகிய **குண்டலினி** இந்த இடத்தில் வந்து அழுத்துவதே உணர்வாகும். இதனால் ஏற்படும் இன்பமே பேரின்பம்.

உச்சிக்கு விந்து போகக்கூடிய வழி, தூண்டில் முள்ளின் நாவைப்போல் இருப்பதால், குருவில்லாமல் செய்யும்

தவங்களால் விந்து உச்சிக்குச் சென்றால், சத்துள்ள விந்துவாய் இருந்து, பித்த உடம்பாய் இருந்தால் தலைப்பாரம், நோவு, இன்பம் இருந்து தலை வெடித்தாவது, வேறு வகையிலாவது மரித்து விடுவார்கள். சத்தில்லா விந்துவாய் இருந்தால் அறிவின் உணர்ச்சி கெட்டுப் பைத்தியக்காரனைப் போலாகிவிடுவார்கள்.

# 97 சுத்தி

## (வலம்புரிச் சுற்று அல்லது மூன்றும்படி)

தலைக்குள் இந்தச்சுற்று, தண்ணீரில் நனைந்த பாம்பு கூட்டுக்குள் சுழல்வது போன்றும், நெய் இளகுவது போன்றும், பொடி மணற்குவியல் மெதுவாகச் சரிவது போன்றும் இருப்பதோடு தலைக்குமேல் சிறு சூறாவளிக்காற்றின் சுழலைப் போன்றும் மருந்தை ஊசியால் பீச்சுவது போன்றும் **(Injection with a Syringe)** தோன்றும். உயர்வான மேள வாத்தியம், பிடில், வீணை, புல்லாங்குழல், மோடி இவைகளை (மனிதன் தூக்கத்திலிருந்தபோதிலும்) தானே கிரகித்துக்கொண்டு, சுகமான இன்பத்தோடு சுழலும். நற்சுவையான தித்திப்பு, சத்தான ஆகாரம், நல்ல வாசனை, உற்சாக வார்த்தைகள் இருந்தால் நலம். இதனால் கண்களுக்கு அநேக நன்மைகள் உண்டு. கண் பாப்பாவுக்குள் வலமாய்ச் சிறு பூங்காற்றும், சிறு ஊசி சுழன்று துவாரமிடுவதுபோன்ற உணர்ச்சியால் கண்கள் குளிர்ந்தும் சுகமாயும் இருக்கும். கண்களிலுள்ள சிறு நோய்கள் சுகமாகிவிடுகின்றன. நெற்றி, உச்சி, பிடரி இவைகளிலும் இச்சுற்று இருக்கும். புளிப்பு, உறைப்பு, மீறிய போகம், புகை ஆகிய இவை ஆகா. சுத்தி செய்தபின், மிக மெதுவாய் தண்ணீரில் நனைந்த மெல்லிய காகிதத்தைக் கிழிப்பது போன்று உணர்வைக் கவனிக்கவும். வலம்புரிச் சுற்றால் தவத்தின் பெருக்கம், அன்பு, பொறுமை, பெருந்தன்மை மிகுதிப்படும்.

ஒரு சிலரிடம் தவ விளைவு மிகுதியாயும், ஒரு சிலரிடம் அறிவின் விளைவு மிகுதியாயும் இருக்கலாம். தவ விளைவு மிக

உடையவர்கள் தன் ஆராய்ச்சியால் அறிவு வளர்ச்சியும், அறிவின் விளைவு மிக உடையவர்கள் உணர்வின் அனுபவப் பெருக்கால் தவப் பெருக்கமும் செய்துகொள்ளவேண்டும்.

"புண்ணியப்பூ பூத்தது, பூமணம் மணத்தது,
குணக்குறை ஒழிந்தது
மனச்சேட்டை மடிந்தது, சித்தந் தெளிந்தது, அறிவு
பெருகியது
மதி நிலைத்தது ஐயமில்லாத தன்னிலையில்."

# 98 குண்டலினியால் ஏற்படும் பேரின்பம்

குண்டலினியின் பரிச உணர்ச்சி, பிடரி, நெற்றி, உச்சியில் படுதலால் ஏற்படும் ஒருவித சுகத்திற்குப் பேரின்பம் என்று பெயர். 20 அல்லது 25-வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் அனைவரும், அனுபவம் நிறைந்த குருவின் வாயிலாக இப்பேரின்ப நிலையை அடையலாம். நல்ல சத்துள்ள உணவுப் பொருளை, அளவோடு முறையாகச் சாப்பிட்டால் நன்கு ஜீரணிப்பதோடு, அதன் சத்துப்பொருள் எல்லாருடைய உடல்களையும், பாகுபாடில்லாது வளர்ப்பதுபோல், குண்டலினியால் ஏற்படும் பேரின்பத்தை எல்லாரும் அனுபவிக்கலாம். இன்றுவரை சுமார் (50,000) ஐம்பதாயிரம் மக்களுக்கு, யாதொரு வேறுபாடுங் கருதாது, குண்டலினி உபதேசம் செய்து வைத்து, அவர்கள் அனைவரும் அனுபவித்து வருவதை என் அனுபவத்தில் பார்த்து வருகிறேன். உலகில் இன்றுவரை வெளிவந்துள்ள நூல்கள் இத்தகைய பேரின்ப நிலையை, செல்வம், கல்வியறிவில் மேம்பாடுடையவர்களால்தான் அனுபவிக்கமுடியும், மற்றவர்களால் அனுபவிக்கமுடியாது என்று கூறிவந்திருப்பதால், நமது சபையில் சேர்ந்து குண்டலினி தீட்சை பெற்றும், அனுபவத்திலுள்ள இன்பத்தைவிடப் பெரிதான வேறொரு இன்பம் இருக்குமோ என்று சந்தேகங் கொள்ளலானார்கள். பின் அறிவில் விளக்கம் பெற்றதும், சந்தேகந் தெளிந்து, இந்த இன்பத்தைவிடப் பெரிதான இன்பம் ஒன்றில்லை என்று முடிவு செய்தனர். குண்டலினியின் பரிச உணர்ச்சி,

நெற்றி, உச்சியில் எப்பொழுதும் இருக்குமானால் பேரின்பம் மிக மிக அதிகமாகவே இருக்கும்.

## 99 குண்டலினியால் ஏற்படும் நன்மைகள்

இந்த பேரின்ப உணர்ச்சியால் கடுமையான உடலுழைப் புடைய தொழிலாளிகள், தங்களின் களைப்பு நீங்கிச் சுக மடைவதோடு, உடம்பில் தெம்பும், தைரியமும் ஏற்படு கின்றன. இவர்கள் புகைபிடிக்காமலும், போதைதரும் பானங்களை அருந்தாமலும், எண்ணெய் தேய்த்துக் குளிக் காமலுமிருந்தால் மிக மிக மேலான நிலையை அடைவார்கள். புகை பிடிப்பதால், நெற்றியிலுள்ள நரம்புகள் மரத்துப்போய், நெற்றிக்கண்ணில் ஏற்படும் உணர்ச்சியை நன்கு அனுப விக்க முடியாது. (நாக்கு மரத்துப்போனால் சுவையை அறிய முடியாதது போன்றதாகும்).

மிகுந்த வறுமையால் கவலைப்பட்டுக் கொண்டிருப்பவர் களுக்கு, ஒருவித தைரியத்தையும், உற்சாகத்தையும், பொறுமையையும் உண்டாக்கி, முயற்சியைத் தூண்டி, தொழிலில் ஈடுபடும்படி செய்து கவலையை ஒழிக்கும்.

சாதாரண மக்களுக்கு நாளடைவில் நல்லெண்ணத்தை உண்டாக்கி, உலக மக்களோடு ஒத்து வாழுதற்குரிய அறிவுத் திறமையை நல்குவதுடன், தீய செயல்கள் செய்ய நினைக்கும் போது, மனத்தில் அச்சத்தை உண்டாக்கி, நற்செயல்கள் செய்யத் தூண்டுகிறது. சிற்சில வியாதிகளும் அடி படுவதால் ஏற்படும் சிறு காயங்களும் நாளடைவில் நீங்கிவிடுவதுடன் எதையும் அளவோடு முறையாக அனுபவிக்கச் செய்கிறது.

கொடிய, தீய செயல்களைச் செய்து, உடனடியாக அவற்றை உணர்பவர்களுக்கு அத்தீய செயல்களினின்று நீங்குதற்குரிய அறிவை அறிவித்து நன்மைக்கு ஆளாக்கி விடுவதுடன், பெரிய அறிவாளியாகவும் பிரகாசிக்கச் செய்கிறது. இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றை என் அனு பவத்தில் அதிகம் பார்த்திருக்கிறேன்.

பல நூல்கள் கற்றும், பல பயிற்சிகள் செய்தும், அதனால் பயனடையாது, அறிவு தெளிவடையாது தத்தளித்து மயங்கி நிற்போர்கள் நமது ஆலயத்தில் சேர்ந்து, குண்டலினி தீட்சை பெற்று, பேரின்ப நிலை எய்தி, தத்துவ ஆராய்ச்சியை அறிந்து கொண்டதும் உடனே மகிழ்ந்து, இந்தப் பேரின்ப நிலைக்குமேல் வேறொரு பெரிதான இன்ப நிலை இல்லை என்று அறிவில் தெளிந்து, மயக்கம் நீங்கி, நிம்மதியடைகிறார்கள்.

**விஞ்ஞானிகளுக்கு** :—தங்களின் விஞ்ஞான அறிவு உலகிற்குப் பயன்படுதற்குரிய முறையில் கூடுதலாகவும் ஆராய்ச்சி அறிவு பெருகவும் செய்து, அறியாமையில் சிக்காமல், மக்களைப் பாதுகாத்து, ஞானியாகப் பிரகாசிக்கச் செய்யும்.

ஆராய்ச்சியுள்ள மதவாதிகள், வேதாந்திகள், படிப்பாளிகளுக்கு, இயற்கையாயுள்ள உலக தத்துவத்தை உள்ளபடி அறியவைக்கிறது.

**அறிவின் கூர்மையால் நொடிப் பொழுதில் தன்னிலை உணர்தலாகிய ஞானம் அடையலாம். பேரின்ப சுகத்தைத் தன் குண்டலினியால் அடையலாம்.**

குண்டலினியால் பேரின்ப நிலையை அடைதற்கு பிரமச்சரிய விரதம், தனி இடம், ஜெபம், பிராணாயாமம் தேவையில்லை. சொல்லுகின்ற, கேட்கின்ற நுண்ணறிவும், நுட்பமாக நோக்கும் திறமையும் இருந்தால் போதுமானது.

குண்டலினி தீட்சை பெற்றுவிட்டால், அட்டமாசித்து விளையாடலாமென்றும், வேறு சாதாரண உலோகங்களை உயர்ந்த தங்கமாகச் செய்யலாமென்றும், கூடுவிட்டுக் கூடு பாயலாமென்றும், ஓரிடத்திலிருந்துகொண்டே அதே நேரத்தில் மற்றோரிடத்தில் உலாவலாமென்றும், வெகு தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலிருந்தே பார்க்கலாமென்றும், சாகாமல் எப்பொழுதும் இருக்கலாமென்றும், ஆயிரக் கணக்கான மாதர்களுடன் போகம் செய்யலாமென்றும், தனக்கு மாத்திரம் தனியாக மோட்சம் இருக்கிறதென்

றும், உணவில்லாது என்றும் வாழலாமென்றும் ரசமணி தானாகவே திரண்டு விடுமென்றும், எது வேண்டுமானாலும் செய்யலாமென்றும் எண்ணுவோர்கள் குண்டலினி சக்தியின் பேரின்பத்தை அடைந்ததும் மேற் சொல்லப்பட்டவை எல்லாம், வியப்புறுதற்காகச் செய்துகொண்ட கற்பனை என்று சிறிது காலத்தில் உணர்ந்து கொள்வார்கள்.

கண் காதால், கண்டு கேட்ட கருத்துக்களை ஞாபகத்தில் சமயா சந்தர்ப்பச் சொல் தோற்றங்களாலே வெகுகால நிகழ்ச்சிகள் நினைவுக்கு வருவதுபோல், உணர்வால் எல்லாத் தத்துவ நினைவுகளும் வருவதோடு உடல் நலமாயும் சூரியப் பிரகாசத்தில் தெரியும் பொருள்களைப்போல் தன் அறிவு பிரகாசித்தும், பற்றற்றுத் தன் எண்ணத்தை நன்றாய் வைத்துக்கொள்ளவும் முடிகிறது.

# 100 உலகத்திற்கு அறிவித்த மகிழ்ச்சிச் செய்தி

என் இருதய மலர்களே! உணர்வின் இன்பம் நான் அடைந்து 7—1—48-ம் நாள் முடியப் பத்தாண்டு நிறைவுற்றது. உணர்வின் இன்பத்தாலும், இதுவரை செய்த ஆராய்ச்சியின் முடிவாலும் அறிவின் விளக்கத்தாலும் சொல்லுகிறேன்.

உலக சமாதான ஆலயத்தின் மூலம் ஞான விருப்பமுள்ளவர்களுக்குத் **தன் நிலை அறிவித்தும்**, உலகில் உள்ள எல்லா அரசியல் நிர்வாகங்களுக்கு எடுத்துக்காட்டும், விளக்கத்தில் எல்லாவகை ஆட்சி முறைகளையும் சீர்திருத்தி, உலகில் பிறக்கும் மக்கள் அனைவரும் சுகமாய் வாழும் **சமதர்ம அரசியல்** ஆட்சி உலகெங்கும் ஏற்பட்டதன் பின் என் சரீரத்தை ஐக்கியப்படுத்துவேன் என்ற உற்சாகச் செய்தியை உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

*ஆயிர மாயிரங்கோடியுக காலங்களாய் உள்ள அஞ்ஞானம், ஞானம் என்னும் இவ்விரு கருத்துக்களை என் அனுபோக அறிவின் விளக்கத்தால் அறிந்ததின் பயன், இனிமேல் நான் என் உடல் உள்ளவரையிலும், ஆறு வயதுள்ள நல்லதொரு பாலகனைப் போல், நல்ல மனநிலையில் இருந்துகொண்டே என்னிடம் வரும் அறிவாளிகளுக்குத் தன் நிலையையும் அனுபோக அறிவையும் உணர்வின் இன்பத்தையும் ஊட்டுவேன்.*

எதனிலும் பொறுமையுள்ளவர்களே! உங்கள் பரிசை அடைய வாரீர்!

ஓ! செல்வந்தர்களே! நீங்கள் தேடிய பொருளை அறிந்து, இன்பமுற இடம் அறிந்துகொள்ள வாரீர்!

பல்லாற்றுனும் பாடுபடும் யோகிகளே! பட்டது போதும். பலன் கிட்டிவிட்டது. வந்து ஆனந்தமாக இன்பத்தை அனுபவித்துக்கொள்ள வாரீர்!

அணுக்களின் ஆராய்ச்சி நிபுணர்களே! அணுவினுள் நீங்கள் இருப்பதை அறிந்துகொள்ள வாரீர்!

ஓ! அறிவாளிகளே! அரசர்களே!! உங்கள் அம்பலச் சிம்மாசனத்தில் ஆட்சிபுரிய வாரீர்!

உணர்வின் தவக்கனலில்
நான் அடைந்து நுகர்ந்த
மகிழ்ச்சியால் அழைக்கின்றேன்
வாரீர்! வருவீர்!!

**நடந்ததெல்லாம் பெரும் நன்மைக்கே.**

**ம கி ழ் ச் சி**

# கடவுள்

தத்துவ ஞான நீதி நூல்